out; 5. பட்டை, bark as in, பறங்கிச் சக்கை, common China root — Smilax China. See சோப சீனி; 6. சோறு, anything dry or insipid; 7. சிராய், chips; 8. காட்டுப் பலா, jungle jack — Artocarpus hirsuta.

சக்கை முக்கி, see சச்சி முக்கி.

சக்கையன், உடம்பில் வலு வில்லாதவன், one wanting in physical strength or validity, 2. மிகு மைதுனத்தால் விந்து சகது ஒடுங்கியவன், one who is weakened by lack of secretion of semen or virile power through excess of sexual intercourse.

சக்கையாய்ப் பிழிதல், சத்து முழுவதும் அறும்படி பிழிதல், to squeeze out the essence from a thing so completely as to leave only the refuse.

சக் கோலி, ஓர் பூண்டு, a plant (unknown)?

சக்சு, பார்வை சக்தி, faculty of seeing.

சக்சுசியம், கண்ணுக் கினிய, agreeable to the eyes, 2 கண் மை, collyrium for the eyes, extracted from Amomum antorhiza, 3. தாழை, a fragrant plant—Pandanus odaratissimus.

சக்சு பீதம், கண் வலி, pain of the eye.

சக்சு ரோகம், கண் வியாதி, disease of the eye.

சக்தி பூசை, see சத்தி பூசை.

சக்தி போற்றல், ஆண் சக்தி அதாவது விந்தைக் காப்பாற்றல், conservation of energy through preservation of semen in the system.

சக்தி மாற்றம், ஒன்றின் சக்தியை பிறிதொன்றாக மாற்றல், converting energy from one form into another.

சங்க, கக்கம், the space below the arm-pit between the hip and the bend of arm; 2. அக்குள், arm-pit.

சங்கங் காட்டி லுமரி, நாகர வண்டு, a kind of golden-coloured beetle supposed to live under the tree, four-spined monetia.

சங்கங் குப்பி, பீநாறிச் சங்கங் குப்பி. இதற்கு பீநாறிச் சங்கு அல்லது பீச் சங்கு என்றும், பீச்சு விளாத்தி என்றும் பெயர். இலைகள் சிறிது, வழவழப்பு, பளபளப்பு, அண்ட வடிவம், மூன்று புஷ்பம், கடற் கரை ஓரங்களில் மிகுதியாய் விளையும். வேலி களிலும் வைத்துப் பயிராக்குவ துண்டு. வருஷ மெல்லாம பூக்கும். வேர், இலைகள் இவைகளின் சாறு கசக்கும். மேக நோய், மேகக் கிரந்தி இவைகளுக்கு தனிச் சாறாகவும அல்லது விளக்கெண்ணெயோடு சேர்த்தும் கொடுக்க சிரங்கு, சொறி, கீல் வாயு இவைகள் குணமாகும். இதற்கு சிவதையைப் போன்ற குண முண்டு. இதன் இலையை அரைத்துப் புக் கட்டிக்கு வைத்துக் கட்ட குணமாகும், இதன் வேரை எண்ணெயி லிட்டுக் காய்ச்சி வாத நோய்க்கும பூசலாம். சூரணித்து உஷ்ணம், இருமல் இவைகளுக்கும் கொடுக்கலாம். மேலும் பொதுவாக, இதனால் அரைக் கடுவன், பிர மேகம், கருப்பத்தி லேயே வுண்டான கருங் கிரந்தி, வெள்ளைத் தவளைச் சொறி, விரணம், பாம்பு கடி விஷம், இரத்தக் கிருமி, வறட் டிருமல், விசர்ச்சிகா குட்டம் இவைகள் போம். Smooth volkameria—Cleodendron inerme alias C. buxifolium. Its leaves are small, smooth, shining, oval, three-flowered, common along the sea-coast, often cultivated for hedges; flowering nearly all the year, juice of root and leaves bitter. It is prescribed as alterative in scrofulous and venereal affections; when given either in pure or in conjunction with castor oil, it is found useful in itches, skin eruptions, rheumatic affections etc. The medicinal properties closely resemble those of Indian jalap; leaves are applied externally to bubos: root boiled in oil, forms also an external application in rheumatism. Powdered root is a remedy for heat and cough, Moreover, this is found useful in general, in cases of black venereal ulcers affecting children in the womb, snake-bite poisoning, germs of vitiated blood in the veins, dry cough, ulcerated leprosy etc.

சங்கங் கோலகம், மிளகாய் நங்கை, dhoby's itch.

சங்கசம், புறா முட்டை யளவாய் சங்கில் பிறந்த முத்து, oyster-pearl of the size of a pigeon egg.

சங்க சுத்தம், சீமை செவ வந்தி, chamomile flower—Anthemis nobilis.

சங்கந் சாறு, சங்கிலைச் சாறு, juice of leaves of four-spinned monetia—Azema tetracantha.

சங்கஞ் செடி, முட் சங்கஞ் செடி, இதுவே சுங்கிலைச் செடி. இதற்கு அனேகக் கிளைக ளடர்ந்திருக்கும். நான்கு முட்க ளுண்டு. முட்கள் 1-2 அங்குலம், கூராக விருக்கும். இலை அண்ட வடிவு, காய் பட்டாணியைப் போல் உருண்டையா யிருக்கும், தின்பதற் குதவும், இலைகள் உடம்பிற்கு சூடுண்டாக்கும், பிரசவித்த பெண்களுக் குதவும், அவர்களுக்கு சீதளம தாங்காதபடி. இவ் விலையோடு சம பாகம் வேப் பிலையும், செங்கல் மாவும், பெருங் காயமும் சேர்த்துக் கிளறி நடை காயமாகக் கொடுப்ப துண்டு. இது பிரசவ பலவீனத்தை போக்குவ துடன், சீதளத்தையும் தடுக்கும். இதன் இலையை கீரையாகப் பிரட்டி உணவில் சேர்த்து வாத நோய்க்குக் கொடுக்கலாம். இதன் சாறு குழந்தைகட்குக் கொடுக்க கபத்தை வெளி யாக்கி இருமலை தணிக்கும்; வேருக்கும் இலையைப் போன்ற குண முண்டு. இது நீரைப் போக்கும ஆகவே, இதை மற்ற கடைச் சரக்குகளோடு சேர்த்து பாகம் செய்து பாண்டு விற்குக் கொடுக்க குணமாகும்.

இதன் வேர், இலை, பட்டை இவைகளுடன் சம பாகம் வசம்பு, இஞ்சி, ஓமம், சோற் றுப்பும் சேர்த்து கஷாய மிட்டுக் கொடுக்க கிராணிக் கழிச்சல் போம. வேர்ப் பட்டைச சாற் றுடன் இரு பங்கு வெள் ளாட்டுப பால் சேர்த்து பாண்டு ரோகத்துக்கு இரு வேளை கொடுக்க நீரைப் போக்கும். இதன வேர்ப் பட்டையை கபம், கப சுரம், காசம், புழு நோய், சோகை முதலிய நோய்களுக்குக கொடுக்க குணமாகும். இதன் சமூலக் கஷாயம் உடம்பின் சொறி, குன்மம், பித் தாதிக்கம், விஷ பாகங்களுக்கும் உபயோகப் படும்.

மேலும இதன் இலைக்கும், வேருக்கும், சோகை, கரபபான், விரணம், குனமம், கீல வீக்கம், வாத கோபம, பித்த நோய் இவைகள் குணப் படும். கண் துலக்கமும், மிகப் பசியும், இரத்த விருத்தியும் உண்டாகும். இலையை அரைத்து சிரங்கு, சொறி, புண், வைசூரி, கொப்புளம் இவைகளுக்குப் பூசிவர விரைவில் குணப் படும், mistletoe berry thorn, four-spined monetia — Azema tetracantha alias Monetia barlerioides. It is a shrub with innumerable branches, thorns four-fold; very sharp and about 1-2 inches in length; leaves oval; berry globular, of the size of a pea; when ripe edible. Leaves are medicinally stimulant, and they are prescribed for puerperal women immediately after confinement. It is administered in the following manner—the said leaves with an equal quantity of neem leaves, a little powdered brick and roasted asafoetida are finely ground and given as a bolus of stimulating confection to remove the weakness from delivery and to keep off the cold from the system. The leaves are also mingled with food and given as a remedy for rheumatism, and the juice of leaves to relieve cough. The juice of the leaves are also prescribed for children to bring out the phlegm and to relieve the effect of cough. The root is considered to have the same properties as the leaves as a diuretic and so, it is given in dropsy along with other bazaar drugs.

A decoction of the root, leaves and bark along with an equal quantity of sweet flag (Acorus calamus), ginger, ajwaun seeds, and common salt is recommended as a remedy in chronic diarrhoea. Juice obtained from the root-bark with double the quantity of goat's milk twice a day is a good remedy as a diuretic in dropsy.

The root bark is also employed with advantage in phelgm, phlegmatic fever asthma, diseases of worm, anemia, etc. A decoction of the entire plant forms an excellent remedy for skin eruptions, dyspepsia, bilious complaints, poisonous affections etc.

Moreover, the leaves and the root form an efficacious remedy in cases of anemia, carpaung, wounds and ulcers, dyspepsia, arthritis, rheumatic inflammation, bilious disorders etc. They also serve to clear the vision, and to improve hunger. The pulverised leaves are applied to sores and itches, and also to wounds and boils arising from small-pox to effect a speedy cure.

சங்கஞ் செடிப் பால், இச் செடியின் வேரை மெலலிய துண்டுக ளாகச் சீவி அதி னின்று வரும் பாலினால் சுரம், வீக்கம் குண மாகும். இதை மருந்துகளுக்கு அனுபான மாகவும் கொடுப்ப துண்டு, the milk of this plant which is obtained by cutting the root into thin pieces, is used in cases of swelling and fever. It also serves as a vehicle in medicine.

சங்கஞ் செடியிற் குடி புக்கி, நாகர வண்டு, see சங்கங் காட்டி ஓமரி.

சங்கடம், பெண்ணின் யோனித் துவாரம், the narrow canal in females leading inwards to the womb—Vagina; 2. ஒடுக்கமான வழி, a narrow passage; 3 மனச் சங்கடம், mental worry.

சங் கடாட்சம், துன்ப மிகுதியால் கண் மூடுகை, closing the eyes through worry.

சங்கடி, கேழ்வரகுக் களி, balls made of the boiled ragi flour.

சங்கடை, மரணப் பொழுது, the moment or point of death; 2. மரண வேதனை, pangs or agony of death.

சங் கடைப்பன், மாட்டுக்கு வரும் ஓர் வகை அடைப்பன் நோய், a kind of anthrax amongst cattle.

சங்கட்டம், see சங்கடம்; 2. மரண வதனை, throes of death; 3. நோய், sickness; 4. உடம்பு நோய், bodily pain.

சங்கதம், முல்லைப் பூ, ovate-leaved jasmine—Jasminum angustifolium.

சங்க தோஷம், தாய் தந்தையர் புணர்ச்சிக்குப் பிறகு குழந்தைகளை குளியாமற தொடுவ தால் ஏற்பட்ட தோஷம், a morbid affection in children due to parents handling them, immediately after sexual intercourse without having a bath; 2. see also சங்கம தோஷம்.

சங்கத் திராவகம், அன்ன பேதி, பாறை யுப்பு, படி காரம், வெடி யுப்பு ஆகிய இவைகளை முறைப்படிச் சேர்த்து வாலையி லிட்டிறக்கி வடித்த திராவகம், an acid obtained by distilling a mixture of iron sulphate, rock salt, alum, nitre in proper proportions with the aid of a still, and then filtered; 2. சங்குப்புத திராவகம், an acid prepared from the slaked conch.

சங்கத் தூதுவளை, வெள்ளைப் பூ வுடைய ஓர் வகைத தூதுவளை. இது காய சித்தி மூலிகை களில் ஒன்று, a kind of three-lobed night shade with white flowers—Solanum trilobatum. It is one of the rejuvenating drugs.

NOTE.—Though a list of rejuvenating drugs has been given under காய சித்தி, it is not to be considered a complete list as names of several others (*unidentified*) are yet to be traced and included.

சங்கத் தாள் ரசம், ஆயுள வேதப்படி, பாதரசம், அபிரேக்கு பற்பம், சுவர்ண பற்பம், இவை களை சம விடை எடுத்து, இவைகளுக்கு சம பாகம் வைக்கிராந்த பற்பம சேர்தது, பிறகு இவைகளுக்கு ஐந்து பாகங்கள் அதிகமாய், சங்கு பற்பததைக் கலந்து அரைதது நான்கு குன்றி மணி யிடை தேனில சாப்பிட ஐந்து வித விக்கல்கள் போம், according to Ayurveda, calcined mercury, calcined mica and calcined gold oxides are taken in equal weight and mixed together, to which is added a quantity of Vykrantham (an inferior diamond) oxide equal in weight of the above mixture; and again to this, is added calcined conch oxide, the quantity of which should be five times that of the whole mixture mentioned above. All these are ground together into powder and 4 grains of this product, when taken in honey, is said to cure five kinds of hiccough.

சங்க நகை, நததை, snail.

சங்க நனம், நரம்பு, nerve; vein.

சங்க நாபி, ஓர் கடைச் சரக்கு, a bazaar drug; 2. வெண் ணாபி, white aconite.

சங்க நிதி, வட்டக் கிலு கிலுப்பை, rattle nail dye—Crotalaria verrucosa.

சங்க நிறக் கரந்தை, வெண். கரந்தை, white-flowered sweet basil — Ocimum basilicum- See கரந்தை.

NOTE.—Some are of opinion that it is quite different from வெள் கரந்தை.

சங்கந் தாளி, சாதி பததிரி, mace or pulp of nutmeg—Myristica fragrans.

சங்க பாஷாணம், ஓர் வகைப் பிறவி பாஷாணம், a kind of native arsenic.

சங்க பீடம், நாணல், reed; 2. நாணற் புல், coarse grass—Saccharum spontaneum.

சங்க புங்கி, கடுகு ரோகிணி, a purgative drug—Helliborus niger.

சங்க புட்பம், இலவங்கப் பட்டை, Cinnamon bark; 2. ஞாழல், an aromatic substance—Cassia genus.

சங்க புட்பி, தாமரைத தண்டு, lotus-stalk; 2. வெண் மலருடைய ஓர் கொடி, a creeper with white-flowers, See காக்கணங் கொடி.

சங்க புட்பிகம், see சஙகங் குப்பி.

சங்க போஷ்டம், புணர்ச்சி, sexual intercourse.

**சங்கம திரவியம்**, உயிர்ப் பிராணிகளின் அவயவங்களினின்று உண்டாகும் சரக்குகள், அவையாவன — தேன், பால், நெய், கொழுப்பு, மலம், மூத்திரம் முதலியன, fluids or substances such as, honey, milk, ghee, fat, feces, urine etc., secreted from certain organs of human beings including animals, and discharged by them.

NOTE.—This not only refers to the materials or substances elaborated by the process of excretion; but also includes those that are not discharged from the body, but is given off into the blood and lymph by way of secretion thus playing an important part in metabolism.

**சங்கம தோஷம்**, பெண்களோடு புணரும் காலத்திலாவது அல்லது நோய் கொண்டவர்களை புணர்ந்த பின்னாவது ஏற்படும் உடம்பு வலி, நடுக்கம், மயக்கம், சன்னி முதலிய குற்றங்கள், morbid affections such as, bodily pain, tremor, giddiness, shock, delirium etc., experienced during sexual congress with sickly women or immediately after it, as a result of reflex action; 2. மிகு மைதுனத்தினால் வேறுபடும் தோஷ நோய். இதனால் கை கால் குளிர்ந்து, உடம்பு நடுக்கம், மார் பெரிச்சல், பிரமை முதலியவைகள் காணும், morbid affection due to abnormal intercourse. It is marked by chillness of the limbs, tremor, burning sensation in the chest, delirium, etc.

**சங்கமம்**, புணர்ச்சி, பெண் கலவி, copulation.

**சங்கம விஷம்**, பாம்பு, தேள், சிலந்தி, நாய் முதலிய பிராணிகளின் கடி விஷம், animal poisons such as those caused by bites of snake, scorpion, spider, dog etc

**சங்க முத்திரை**, நிஷ்டையில் ஒரு வகையான ஆசனத்தில் இருக்கும் போது விரல்களைப் பிடித்து அநுஷ்டிக்கு மோர் ஆகம முறை, (*In Agama Philosophy*) a posture in meditation in which fingers are placed in a particular form.

NOTE.—When a man is seated in Yoga practice, Muthrai is considered to be a sign of the fingers to concentrate upon. There are different kind of such 'Muthirai' intended for facilitating concentration viz.—மூல முத்திரை, கேசரி முத்திரை, சின் முத்திரை, சுவாதிர முத்திரை and so on. A man who attempts to practice Muthrai should be a contortionist. By means of this process, psychic powers are attained. See also சங்கார முத்திரை.

**சங்க மூதி**, see சங்கதம்.

**சங்க மூலி**, see சங்கங் குப்பி.

**சங்கம்**, வெள்ளை பாஷாணம், white arsenic; 2. புணர்ச்சி, copulation; sexual intercourse; 3. நெற்றி, forehead; 4. தாலம்ப பாஷாணம், a mineral poison; 5. கணைக்கால், the leg; that portion of the leg before the knees; 6. சங்கு, conch; chank; 7. சங்க பாஷாணம், a variety of native white arsenic; 8. நெற்றி யெலும்பு, frontal bone; 9. see சங்கஞ் செடி; 10. எழுத்தாணிப் பச்சிலை, style plant—Launea pinnatifida; 11. அழகு, beauty; 12. அக்குள், arm-pit; 13. வாத தோஷத்தால் கர்ப்பிணிகளுக்கு ஏற்படும் வேதனை, rheumatic troubles in pregnant women.

**சங்கம் பட்டை**, bark of சங்கஞ் செடி, which see.

**சங்கம் வாங்கல்**, கூட்டிக் கொடுத்தல், to procure lewd women for the gratification of others.

**சங்கம் வாங்கி**, கூட்டிக் கொடுப்போன், a procurer; a pander; a bawd.

**சங்கம் வாங்குதல்**, கூட்டிக் கொடுத்தல், pimping. See சங்கம் வாங்கல்.

**சங்கம் வேர்**, சங்கஞ் செடியின் வேர், root of the four-spined monetia.

**சங்கம் வேர்ப் பட்டை**, இது கோழை, காசம், கபச் சுரம், வாதக் கடுப்பு, சிலேத்தும சோபை, பங்க விசர்ப்பி, உட் சுரம், வாத கோபம், கிருமி ரோகம் ஆகிய இவைகளைப் போக்கும், the bark of the root of four-spined monetia—Cleodendron inerme. It is prescribed for phlegm, asthma, phlegmatic fever, rheumatic inflammation, phlegmatic anemia, syphilitic tumour, internal fever, worm disease etc.

**சங்கர கிரகணி**, see சங்கரக் கிராணி.

**சங்கரக் கழிச்சல்**, ஓர் வகை செரியாக் கழிச்சல். இதனால் வயிற்றுப் பொருமல், சுரம், நெஞ்சிற் கபாதிக்கம், முதலிய குணங்களைக் காட்டும், a form of diarrhoea arising from indigestion; and it is marked by rumbling noise in the stomach, fever, excess of phlegm in the chest, etc.—Sympathetic diarrhoea.

**சங்கரக கிராணி**, see சங்கரக் கழிச்சல்.

சங்கர சாதி, கலப்பு சாதி, mixed variety; 2. உயர்ந்த குலத்தாரும இழிந்த சாதியாரும கூடுதலிலுற் பிறந்தது, the result of mixed birth of men and women of higher and lower castes.

சங்கர சாதிக் கடுக்காய், கருப்பு, சிகப்பு, வரி, பால் என்னும் நான்கு பேதங்களும் கலந்த கடுக் காய்கள், galnuts consisting of a mixture of the four varieties, viz:—black, red, striped and the white.

சங்கரத் திராவகம், ஆயுள் வேதப்படி, அய க்கந்தகம், படிகாரம், பாறை யுப்பு வகைக்கு 16 தோலா, இத் துடன், வெடி யுப்பு, 28 தோலாவும் சேர்த்து வாலேயி லிட்டு இறக்கப் படும் ஓர் திராவகம். இதை உபயோகிக்கு முன், நாக்கில் வெண்ணெய்த தடவி பல்லிற் படாமல், குடிக்க வேண்டும், (*In Ayur Veda*), an acid prepared by taking up sulphate of iron, alum and rock-salt of 16 tolas each, and then mixing up this with 28 tolas of nitre and then distilling the whole mixture. The tongue before use, should be anointed with clarified butter; and then the medicine is taken internally without touching the teeth.

சங்கர புட்பம், தின் பூ, see சங்கங் குப்பி.

சங்கர பைரவம், உருத்திரக சன்னிபாத சுரத் திற்குக் கொடுக்கும் ஓர் வித பைரவ ரசம். இது ஓர் ஆயுள் வேத மருந்து, a kind of 'Byravarasa' prescribed for a kind of typhoid fever (Ruthragam). This is an Ayurvedic preparation.

சங்கரம், பலசாதிக் கலப்பு, (உ-ம்) கலவங்கீரை, a mixture of several varieties as of greens; 2. நஞ்சு, poison.

சங்கர ரோகம், ஓர் காது நோய், a disease of the ear; 2. ஓர்வித கண்ணோய், a kind of eye disease.

சங்கர வல்லி, ஓர் வகைக் கொடி, a kind of creeper?

சங்கர வாதம், செவிபடு வாதம், deafness.

சங்கரன் பெண்டிர், கௌரி பாஷாணம், prepared-yellow oxide of arsenic.

சங்கரன் விந்து, இரசம், mercury.

சங்க ராசனம், இரண்டு கால்களையும் மடக்கி, பாதங்களையும் நெருக்கி, முகப்பின்மேல் நிற்கும் ஓர் ஆசனம், a posture in yoga practice in which the man rests on his knees with folded legs while feet remain close together.

NOTE.—Asana is that posture of the body intended for Yoga practice. Physically it helps to control the different muscles of the body so as to keep the nervous system unclogged for the free exercise of expiration and inspiration. Moreover, it keeps the body free from all impurities.

For further particulars see under ஆசனம் in Vol. I.

சங்கரா மீன், ஜாவா மீன் என்னும் ஓர் கடல் மீன், a sea-fish known as Java fish—Gaurami.

சங்கரா வாசம், கலப்பு வாசனை யுள்ள ஓர்வகை கற்பூரம், a kind of camphor with several kinds of perfumes mixed up; camphor smelling of variegated perfumes.

சங்கரிங்கி, கடுகு ரோகிணி, see சங்க புங்கி.

சங்கீ கரணம், சாதிக் கலப்பு, 2. mixture of different castes, 2. சுபாவ ஒழுங்குக்கு தவறுதலாக வேறு சாதி பெண்ணோடு செய்யும் புணர்ச்சி, unnatural intercourse with a woman of a different caste.

சங்க ரேகை, உள்ளங் கையில் அதிர்ஷ்டத்தைக் குறிக்கும் சங்கு வடிவமான ரேகை, (*In Palmistry*), a conch-mark on the palm indicating one's luck.

சங்க ரோகணி, கடுகு ரோகிணி, see சகுலாதி.

சங்க ரோகம், வாத சிலேட்டுமங்களினால், இரண்டு தாடைகளிலும், சிவந்து, வீங்கி, பழுத்து உடைந்து மூன்று நாளைக்குள் மரணத்தை யுண்டு பண்ணு மோர் நோய், a phlegmatic disease in which the tonsils are inflamed, glands swollen with redness of the parts and the characteristic exudation makes its appearance, resulting in a fatal termination within three days, probably Diphtheria.

சங்கலம், மாமிசம், meat; flesh; 2 சேர்மானம, mixture.

சங்கலிதம், கலப்புச் சரக்கு, mingled ingredients.

சங்கலீ கரணம், இயற்கைக்கு விரோதமான அல்லது முறை யற்ற மிருகப் புணர்ச்சி, ஆசனப் புணர்ச்சி, முதலிய அக்கிரமப் புணர்ச்சிகள், unnatural intercourses such as, bestiality, sodomy etc See சங்கீ கரணம்,

சங்கலேகை, see சங்க ரேகை.

சங்கல்வ கோஷ்டம், ஓர் வகை கோஷ்டம், Arabian costus—Costus speciosus.

சங்க வாத வஸ்தி ரோகம், வாயுவானது கீழ் வயிற்று மூத்ததை அடைத்து நீரை உள்ளில் சேர்த்து கட்டுப் படுத்துவதா லேற்படும் நோய், suppression of urine due to Vayu prevailing upon the downmost portion of the abdomen i e., about the genital region, and obstructing the urethra.

சங்க விஷம், வெள்ளை பாஷாணம், இது ஓர் வைப்புச் சரக்கு. பூர்வத்தில் தாளகத்தை புடமிட்டு எடுத்த வைப்புச் சரக்கு. பிறவிச் சரக்கோ நமது ஊரில் (இந்தியாவில்) கிடையாது. ஆகவே, பர்மா, பாரசீகம், சீனம் இவ்விடங்களி லிருந்து இறக்குமதி யானது. இது ஆயுர் வேதத்தில் உபயோகப்பட்டு வந்ததாகத் தெரியவில்லை, white arsenic. It was prepared artificially in ancient days by roasting orpiment. Natural white arsenic is not met with in India, as it was imported into our country from Burmah, Persian gulf and China. It does not appear to have been in use in Ayurveda; 2 சர்பசாதி விஷம், கீடகம், கீரிப் பிள்ளை, தேள, சிலந்திப் பூச்சி, நாய், நரி முதலியவற்றின் விஷங்கள், animal poisons, as those of snake, worm, mungoose, scorpion, spider, dog, jackal, etc.

சங்க வோஷ்டம், புணர்ச்சி, கலவி, sexual intercourse

சங் களவு, குழந்தைகளுக் கூட்டும் பாலடை யளவு, as much as is contained in a milk-ladle for feeding infants.

சங் கற்பம், மனோ வைராக்கியம், mental resolve or determination in mind as opposed to விகற்பம், diversity; volition; 2. கருத்து, intention; 3 கொள்கை, doctrine; 4. நியமம், fanciful delusion; wide-extending mind; 5 மனோ கற்பனை, (*In Vedanta Philosophy*) delusion of mind.

சங் கற்பிதம், முன்னதாக ஏற்படுத்தப் பட்டது, pre-determined; pre-arranged.

சங் கற்பித்தல், நிர்ண யித்தல், determining.

சங்கனட் டீசன், see கீழ்க்காய் நெல்லி.

சங்க னிலை, see சங்கிலை.

சங்கன், ஓர் சிறு வெளவால் மீன். இது ரோஜாபூ நிறம்; சிறியது, a small sea-fish known as bat-fish of pink colour and small in size—Cirrhitichthys aurues.

சங்கன் குப்பி, see சங்கங் குப்பி.

சங் கன்னம், நரம்பு, nerve; 2. நாளம், vein; 3. நரம்பு நார், tendon.

சங்காடகம், கொக்கோகத்திற் சொல்லி யுள்ள 64 லீலைகளில் ஒன்று, one of the 64 postures in the embrace of or sexual intercourse with women, described in the Erotic science of the sage named Kokkoga Muni.

சங்காத மணல், கரு மணல், black sand.

சங்காத மணற் குன்றம், black sand heap.

சங்காத மரணம், அசம்பவத்தால் அநேகர் திடீரென உயிர் துறத்தல், an accident or disaster in which several persons die suddenly and simultaneously.

சங்காதம், சமூலம், plant as a whole; 2. ஓர் தொண்டை நோய், a throat disease.

சங்கா தோஷம், பேய் பிடித்தலினு லேற்பட்ட குற்றங்கள், evil effects brought about by demoniac possession.

சங்காயம், கரும்புத் தோகையின் சருகு, the dried leaves of sugar-cane stalk; 2. வயலில் முளைக்கும் ஆனைப் புல், large and thick weeds growing in fields — Typha elephantina; 3. பதர், immature grain.

சங்கார காலத் துப்பு, அமுரி யுப்பு, uric salt; 2. கார வுப்பு, acrid salt.

சங்கார முத்திரை, சிவ பூசையில் உட்காரும் போது பெரு விரலை உயர்த்தி நீட்டியும், மற்ற விரல்களை மடக்கியும் செய்யும் ஓர் பூசை விதி, (*In Agama Philosophy*) a posture or position assumed in the worship of Shiva, in which the thumb is raised and kept erect, while the other fingers remain folded.

சங்காரம், கடிதல், suppression, as of passions and appetites.

சங்கார ருத்திர மாத்திரை, பாமபு கடி முதலிய பெரு விஷத்திற்குக் கொடுக்கும் மாத்திரை, a pill prescribed chiefly for snake-bite and other virulent poisons.

சங்காரி, குதிரை வாலி, horse-tail plant—Convolvulus tridentatus.

சங்காலி, மாசி பத்திரி, santonin wood—Artimesia indica.

சங்கால் பச்சை, செம்புக் களிம்பு, sub-acetate of copper—Verdigris.

சங்கா வர்த்தம், சங்கினுடைய உட் பக்கத்து சுழியைப் போன்ற விரணம், an ulcer resembling the inner spiral of a conch ; an ulcer of a spiral form.

சங் காவியம், கிலி யடைந் திருத்தல், to remain panic-stricken ; 2. அச்சங் கொண்டி நிலைமை, the state of mind when inspired by terror without any apparent cause ; 2. அச்சத்தால் பெண்ணை வசப் படுத்தல், the enticement of a woman by inducing fear.

சங்கா வேசம், see சங்காவியம்.

சங்காளர், கலவியிலேயே நாட்டங் கொண்டவர், persons openly devoted to lewdness or women given to indiscriminate lewdness.

சங்கான் பெண்டிர், கௌரி பாஷாணம், a prepared yellow oxide of arsenic. See சங்கரன் பெண்டிர்.

சங்கி, சிறு பூனைக் காலி, whitish passion-flower —Passiflora foetida ; 2. see சங்கஞ் செடி.

சங்கிக் கடுக்காய், யுனானி மருந்தில் வழங்கும் கடுக்காய், a species of gall-nut used in Unani medicine

சங்கி சீயம், உகா மரம், tooth-brush tree — Salvadora persica.

சங்கிதன், தீர மில்லாதவன், a timid person.

சங்கிதா துரம், கிச்சிலிக் கிழங்கு, orange root —Hedysarum spicatum alias Kompferia galanga

சங்கிதை, உச்சரிப்பு, invocation ; 2. சம்மிதை அதாவது வேதத்தின் ஓர் பகுதி, Samhita i.e., a portion of Vedic literature. See சம்மிதை.

சங்கித்தல், மனந் தடுமாறல், wavering or agitation of mind.

சங்கி பருதி, கடுகு ரோகிணி, black hellebore —Helleborus niger.

சங்கி பீடம், நாணற் கொடி, reed — Saccharum spontaneum.

சங்கிரகக் கிராணி, வயிறு பொருமி, சோறு செரியாது, அபானத்தில் சூடாகி, சுரம், வாந்தி, மயக்கங் கண்டு, இரண்டு கண்ணும் சுழலும் ஓர் வகைக் கழிச்சல், a form of diarrhoea characterised by the following symptoms viz :—rumbling noise in the stomach, indigestion, purging, burning pain at the anus, fever, vomitting, giddiness, whirling of the eyes etc. — Lienteric diarrhoea. See சங்கரக் கழிச்சல்.

சங்கிரகக் கூர்மை, சிந்து லவணம் இது நமது நாட்டு வைத்தியத்திற் சொல்லி யுள்ள 25 வகை உப்புகளி லொன்று, Sindh salt. It is one of the 25 kinds of salt contemplated in Indian Medicine.

சங்கிர மித்தல், நோய் தொத்துதல், to be infected with disease by approach or contact whether directly or indirectly.

சங்கிராகி, ஊமை அதாவது மா மரம், mango tree—Mangifera indica.

சங்கிராகி யர்சம், நாவல் மரம், jamoon tree —Eugenia jambolina.

சங்கிராணி, வயிறூதி, சீழ், சீதம், நெய் போலும், மற்றும் பல விதமாய்க் கழிந்து, ஆசனம் கடுத்து, வலியை யுண்டாக்கும் ஓர் வகை சீத பேதி, an acute form of dysentery accompanied by distension of abdomen, mucous discharge, passing of stool in varied forms, irritation of the anus attended with pain etc.

சங்கிரியம், நெய், ghee ; clarified butter.

சங்கிருதகம், ஈருள்ளி அதாவது வெங்காயம், onion - Allium cepa.

சங்கிலி, தொடை, thigh.

சங்கிலி கரணம், see சங்கலி கரணம்

சங்கிலித் துருமம், தான்றிக் காய், fruit of devil tree—Terminalia bellerica.

சங்கிலிப் பிரண்டை, ஓர் வகைக் கணுப் பிரண்டை, a kind of adamantine creeper, the links of which resemble a chain—Vitex negundu.

சங்கிலி விரியன், ஓர்வகை விரியன் பாம்பு, a variety of Russell's viper with links resembling a chain—Chain viper.

சங்கிலை, சங்கஞ் செடியின் இலை, leaf of four-spined monetia — Azima tetracantha alias Monetia barlerioides ; 2. பீச் சங்கிலை, smooth Volkameria — Cleodendron inerme.

சங்கிலைச் சாறு, சங்கஞ் செடியின் இலைச் சாறு, juice of the leaves of the shrub called four-spined monetia

சங்கிற் கூர்மை, பிடா லவணம், இதுவே வளைய லுப்பு, a white medicinal salt extracted from fuller's earth; glass gall—Fel vitri ; 2. சிந்து லவணம், Sindh salt.

சங்கினி, வழலை, fuller's earth; 2. ஐந்து மாதத்திய தலைப் பிண்டம், a foetus of five months; 3. நாபி, navel; 4. குய்யத்தைப் பற்றி நிற்கும் நாடி, an artery of the genitals; 5. தச நாடியி லொன்று. இது சுழி முனையி னின்று தோன்றி, இருதய பாகம் வழியாய் குய்யத்திற்கும் குதத்திற்கும் நடுவாகப் பற்றி முடியும் ஓர் வகை நாடி, one of the ten nerves or tubular vessels contemplated in Tamil Philosophy. It is said to rise from the cerebral region just between the eye-brows and passing through the region of the heart, terminate in the region between the anus and the genital (*genita libus et ano*); 6. சிலேட்டுமக் கூறு, nature of one of the three humors of the system viz-phlegm; 7. கொக்கோகத்திற் சொல்லிய பெண்களின் நால் வகைச் சாதிகளில ஒன்று, one of the four classe of women divided according to lust in the Erotic science of Kokkoga Muni; 8. அதமசாதிப் பெண், a term commonly used for a very wicked woman, 9. பீச்சு விளாத்தி, see சங்கங் குப்பி.

சங்கினி சாதிப் பெண், மூன்றும் சாதிப் பெண், (*In Erotic Science*), the third of the four classes of women. See சங்கினி.

சங்கினிகூடப் புகட்டல், பாலடையி விட்டு குழந்தைகளுக்குப் பால் உள்ளுக்குக் கொடுத்தல், to administer, as milk, through milk-ladle for feeding children.

சங்கினி நாடி, தச நாடியி லொன்று, one of the ten tubular vessels of the body. See சங்கினி.

சங்கினி நாத நீர், மூன்றும் சாதிப் பெண்ணின் நாத நீர், the fluid discharge from lust, of the third of the four classes of women classified according to the Erotic science; 2. see ஐங்கோல செய நீர்.

NOTE.—Tamil Siddhar's Science asserts a semen-like discharge in women called Nadam (நாதம்), while Modern science refutes this. This happens to be a great problem for Research.

சங்கினிற் கூர்மை, see சங்கிற் கூர்மை.

சங்கின் காட்டுக்குள் ளுமரி, see சங்கன் செடியிற் குடி புக்கி.

சங்கின் குடியோன், நாகர வண்டு. See சங்கஞ் செடியிற் குடி புக்கி.

சங்கின் பிள்ளை, முத்து, pearl born of or produced from oyster.

சங்கீதம், கிச்சிலிக் கிழங்கு, orange-root — Hedychium coronarium.

சங்கீத ரோமம், முடி மயிர், lock of hair.

சங்கீதல், சங்களவு கொடுத்தல், to administer to children as much as a conch-ladle could contain.

சங்கீரண கீடம், ஓர் வகைப் புழு, a kind of worm; 2. பல வித புழுக்கள், variegated worms.

சங்கீரணைச் சிலந்தி, நெருப்பாற் சுட்டது போல் எரிவையும், திரி தோஷத்தையும் உண்டு பண்ணும் ஓர் வகைச் சிலந்திப் பூச்சி, a kind of spider, the bite of which causes burning sensation and derangement of the three humours in the system.

சங்கீரண போசனம், கலப் பன்னம், a mixture of different varieties of food; 2. பலவித கறிகளோடு கூடிய சாப்பாடு, a dinner combined with several dishes of curries.

சங்கீரணம், கலப்பு, mixture; compound; 2 நானாவிதம், miscellaneous kinds, see சங்கரம், 3. மைதுனம், coition; 4. கோழி, fowl; 5 சங்கஞ் செடி, which see.

சங்கீரதம், புணர்ச்சி, combination; 2. கலவி, sexual intercourse.

சங்கீர்தம், see சங்கீரதம்.

சங்கீலகம், பிரசவத்தின் போது சிசு வெளிப்படும் காலத்தில் கை பாதம் அல்லது சிரசு இவைகளினால் யோனி துவாரத்தைத் தடுப்பது, (*In Midwifery*), obstruction to free delivery due to presentation of arm and leg or even head at the first instance.

சங்கீனி, உழ மண், see சங்கினி.

சங்கீன்ற பிள்ளை, முத்து, pearl, born of oysters. See சங்கின் பிள்ளை.

சங்கு, சிப்பி, oyster; 2. மரப பட்டை, bark of a tree; 3. கணைக் கால், shin-bone; the thick fleshy portion below the knee—Calf; 4. கூடுதல், copulation; 5. கடுகு ரோகிணி, black hellibore — Hellhiborous niger; 6. நீர்ச் சங்கஞ் செடி, a variety of monetia plant which grows near tanks; 7. see சங்க ரேகை; 8 மிடறு, throat; 9. கவரெழு சங்கம், same as No. 19; 10. சிறு நாகப் பூ, ironwood of Ceylon—Mesua ferrea; 11. சவ்வாது பூனை, Zibeth-cat; 12. see சங்க பாஷாணம்; 13. நெற்றி

வெலும்பு, frontal bone ; 14. கோழி, fowl ; 15. பாலாடை, conch ladle used for feeding children , 16. முன்னை வேர்ப பட்டை, the root-bark of Munnai — Premna integrifolia ; 17 see சங்கஞ் செடி ; 18. பொருத்து, joint ; 19. முட் சங்கு அல்லது முள் சங்கஞ் செடி, thorny monetia — Monetia barlerioides.

There are innumerable varieties of chanks or conches and the following are the chief viz :—

1. சலஞ் சலம, (ஓர் சங்கு), a conch-shell of super-eminent qualities —Voluta ryrum.
2. முட் சங்கு, prickly chank ; one with thorn-like points.
3. பட்டி அல்லது சிறு சங்கு, short chank.
4. சூற சங்கு, chank containing or impregnated with pearls.
5. தாழஞ் சங்கு, one with a wide mouth.
6. வலமபுரி சங்கு, one with the spiral opening to the right ; chank shell of happy convolutions.
7. இடம்புரிச் சங்கு, ordinary chank with an opening to the left.
8. பாலாடைச் சங்கு, small conch used for giving milk to children.
9. உவர்ச் சங்கு, same as No. 2.
10. நீர் வாழ்ச்சங்கு, conch-shell—Turbinella rapa.
11. முள்ளுச் சங்கு, same as No. 2.
12. பாற் சங்கு, white chank.
13. வெண் சங்கு, white dead shell.
14. பச்சை சங்கு, same as No. 15.
15. ஊது சங்கு, conch used for blowing in temples.
16. கிருஷ்ண சங்கு, the conch worn by Vishnu.
17. தீர்த்த சங்கு, sacred conch shell—Mazza rape.
18. வரிச் சங்கு, striped conch.
19. பாஞ்ச சன்னியம் ஓர் வித சங்கு, another variety ?
20. தொனிச் சங்கு, same as No. 15.
21. கடற் சஙகு, a large convolute shell regarded with religious veneration—Turbinella pyrum.
22. கண்டகச் சங்கு, a thorny chank in the sacred Gandhaka river near Benares.
23. கோலச் சங்கு, same as No. 2.

NOTE.—The sacred chank, conch or *sanku* (*Turbinella rapa*) is procured by divers in the Gulf of Mannar opposite to Jaffna. No. 6 mentioned above is the right-handed chank much prized by the Hindus to be used at their temples ; and being exceedingly rare, often fetches a very high price The conch is found more useful in Ayurveda than in Siddha system.

**சங்கு கடைதல்**, மரணப் பொழுதில் நெஞ்சில் ஏற்படும் களகள வென்ற சத்தம், rattling in the throat, as of dying persons.

**சங்கு கர்ணம்**, சங்கைப் போன்ற காதுடையது அதாவது ஒட்டை, camel, title from its ear resembling a conch ; 2. கழுதை, ass.

**சங்கு காசம்**, ஓர் வகைக் கண்ணோய், a disease of the eye ; 2. வெண் படலம், cataract.

**சங்கு கிளரி**, புளி நறளை, fox-grape — Vitis setosa, see சாங்கு கெளரி.

**சங்கு கீரை**, சங்கஞ் செடி யிலை, see சங்கிலை.

**சங்கு குலை**, ஆமை, tortoise , turtle — Testudo gracea.

**சங்குக் கல்**, ஓர் வெண் கல், conchite.

**சங்கு சதை**, சங்கினுள் ளிருக்கும் சதைப் பற்று, the fleshy portion inside the chank ; 2. சிப்பிச் சதை, oyster-flesh.

**சங்கு சன்னி**, உடல் வெதும்பி, நாக்கு வறண்டு, வயிறு பொருமி, வாந்தி, விக்கல், காது அடைப்பு, திடுக்கிட் டெழுதல் முதலிய குணங்களுடன, 14 நாள் வரைக்கும் நீடித்திருக்கும் ஓர் வகை சுர சன்னி, a kind of deilrium from enteric fever extending to a period of fourteen days. It is characterised by aching of the limbs, parched tongue, rumbling of the stomach, vomiting, hiccough, dullness of hearing, restlessness due to frequent and sudden rise from the bed etc.

**சங்கு சாரம்**, சங்கைச் சுட்டு எடுக்கும் உப்பு, an essence of salt extracted by burning and reducing chank into ashes.

**சங்கு சித சிகிச்சை**, பெண்கள் பிரசவித்த பிறகு முருக்கன் விதது, அத்திப் பழத்தை

அரைத்து நல் லெண்ணெயிற் கலந்து யோனிகுப் பூசி துவாரம் குறுகி சிறிதாகும் படிச் செய்தல், an application of ointment for the contraction of the vaginal orifice immediately after delivery. It is prepared by grinding fig fruit and moringa seed and mixing them with oil.

சங்கு சிதம், குருகுதல, (உ-ம்.) யோனிச் சங்கு சிதம அதாவது யோனித துவாரம சிறிதாதல், shrinking i.e. contraction of the vaginal orifice.

சங்கு சுட்ட நீறு, சங்கு சுண்ணும்பு, lime obtained by or derived from, slaking conch-shell ; slaked shell-lime.

சங்கு சுண்ணம், சஙகு சுண்ணும்பு, chank lime or chunam. See சங்கு சுட்ட நீறு; 2 முப்புச் சுண்ணம், (*In Alchemy*), a calcium compound prepared from the mystic three salts ; 3. ஆயுள் வேதப்படி சங்கை உரலில் இடித்து வஸ்திர காயம் செய்து எலுமிச்சம் பழச் சாறு விட் டரைத்து (1 சாமம்) உலர்த்தி சீலே மண் செய்து 20 விறட்டியில் புடமிட சுண்ணமாகும். இதனுல் பாண்டு, காமாலே, நீர்க் கட்டு, நீர்க் கோர்வை தீரும், (*In Ayurveda*), calcined conch. It is prepared by process of calcination after crushing and powdering conch shell and grinding it with the juice of lime and lastly subjecting the product to fire with the aid of 20 cow-dung cakes. It is prescribed for dropsy, jaundice, stranguary and other urinary complaints.

சங்கு சூலை, ஆமை, tortoise ; turtle.

சங்கு செம்பு, சங்கி னின்று எடுக்கும் செம்பு, copper extracted from the chank.

சங் குடம், கொத்தான், air-creeper — Cassytha filiformis.

சங்குணப் புல், நான்முகப் புல், square-stalked grass—Saccharum spontaneum.

சங்கு தலை, சங்கைப் போன்ற தலே, Conch-head.

சங்கு தலை யோடு, சுத்த வெண்மையான தலே யோடு, pure white skull.

சங்குத் திராவகம், குன்மத்திற்காக தயாரிக்கும ஓர் ஆயுள் வேத திராவகம், an acid prepared from chank accordidg to the process of Ayur Veda, and given for dyspepsia ; 2. சங்கு பாஷாணத்தி னின்று தயாரிக்கும் திராவகம், (*In Siddha Medicine*), an acid prepared from arsenic compound.

சங்கு திருகி, குச் சிடுக்கி, cork-screw.

சங்கு நண்டு, பெரிய சங்கிற்குள் வசிக்கும் ஓர் கடல் நண்டு, a crab living in the hollow of a big chank.

சங்கு நதி, சுத்த சலம்; பனிநீர், dew-water ; 2. பனிக் குடத்து நீர், amniotic fluid—Liquor amni.

சங்கு நிதி, வட்ட கிலு கிலுப்பை, see சங்க நிதி.

சங்கு நீர், சுத்த சலம், pure water contained in a conch ; 2. see அண்ட நீர் ; 3. பெண் மூத்திரம், urine of a female.

சங்கு நீறு, see சங்கு சுண்ணம்.

சங்குந்தி, ஓர்வித கிலு கிலுப்பை, rattle-wort —Crotalaria genus.

சங்கு பஜாரி, ஓர் கடைச் சரக்கு, a bazaar drug (unknown)?

சங்கு பாசம், கடுகு ரோகிணி, see சங்க புங்கி.

சங்கு பாஷாணம், ஓர் வகை வெள்ளை பிறவி பாஷாணம, a kind of native white arsenic ; a mineral poison.

சங்கு பாலாடை, பாஷாணம், poison ; 2. குழந்தைகட்கு பாலூட்டும் கருவி, a small ladle-like conch used for feeding milk to children.

சங்கு புகட்டல், குழந்தைக்குப பால புகட்டல், feeding children with milk in a chank.

சங்கு புட்பம், ஞாழல், cinnamomum (genus) see சங்க புட்பம், 2. மல்லிகை வகை, jasminum (genns) ; 3. காக்கணங் கொடி, mussell-shell creeper — Clitorea ternatea ; 4. தகரை, cassia—Cassia tora.

சங்கு புட்பி, சங்குப பூ, conch flower—Canscora decussata ; 2. விஷ்ணு கரந்தை, Vishnu plant—Evolvulus hirsuta.

சங்குப்பி, பீசசங்கு, see சங்கங் குப்பி.

சங் குப்பு, சங்கு சுட்ட வுப்பு, salt obtained from slaked conch ; 2. வெள்ளை யுபபு, white salt.

சங்குப் பூனை மதம், சவ்வாது, Zibeth ; a perfume from the anal gland of a cat ; 2. புனுகு, civet.

சங்கு மதம், see சங்குப் பூனே மதம்.

சங்கு மரு, வேப்ப மரம், margosa tree—Azadirachta indica.

**சங்கு மாத்திரை,** சங்கை பறப மாக்கி மற்ற சரக்குகளோடு சேர்த்து திரட்டிய மாத்திரை இது கண்ணோய்க குதவும், (In Ayur Veda), a medicinal pill prepared from calcined chank, mixed with other drugs, and used for diseases of the eyes.

**சங்கு மாருதம்,** வெம்பு, see சஙக மரு.

**சங்கு முத்து,** சஙகி னின்று எடுத்தம் முத்து oyster-pearl

**சங்கு மூடகி,** வெண் கீரைத் தண்டு, a white species of spinach — Amaranthus blitum.

**சங்கு மூலம்,** சங்கஞ் செடி வேர், see சங்கம் வேர்.

**சங்கு மேகம்,** வெண் கருச சத்து மிகுதியால் மூத்திரத்தின் வெண்ணிறம மாருத மேகம், albuminuria in which the turbidity does not disappear at all owing to excessive albumin in the urine — Albuminuria. See சல மேகம்.

**சங் குருணை,** ஆமை, tortoise ; turtle ; 2. see சங்கு குலை,

**சங்கு லிகம்,** இருப்பை அதாவது இலுப்பை மரம். honey-tree — Bassia longifolia.

**சங்கு வங்கணம்,** நற் சீரகம், cummin seed — Cuminum cyminum.

**சஙகு வடுகம்,** சகல சூலை, குன்மம், அதிசாரம் முதலிய நோயகளுக்குக் கொடுக்கும் ஆயுள் வேத மருநது, an Ayurvedic medicine given for all kinds of gout, drspepsla, diarrhoea, etc; 2, கள்ளி, எருகநு நாயுருவி இவைகளி னின்று உப்பெடுத்து திரிபலையும் கூட்டி சஙக பறபத்தையும் சேர்த்துத் தயாரித்து அசீரணம், பித்த சிலேட்டுமம் முதலியவற் றிற்குக் கொடுக்கும் ஆயுள் வேத மருநது, an Ayurvedic preparation consisting of salts derived from milk-spurge, madar and Indian burr, which are mixed with Tripala (i. e. gall-nut, Tandri fruit and gooseberry) and calcined conch. It is prescribed for indigestion, bilious and phlegmatic disorders.

**சங்கு வாதம்,** வெட்டை சம்பநதமானஓர்வகை வாதம், a kind of rheumatism associated with gonorrhoea — Gonorrheal rheumatism.

**சங்கு வெள்ளை.** see சங்கு சுண்ணம் 2. சங்கு பற்பம், calcined chank ; 3, தூய வெள்ளை, pure or bright whiteness ; 4 சங்கு பாஷாணம், which see

**சங் கூமச்சி,** ஊமசசிச் சிப்பி, boat-shell — Chank cymbium,

**சங் கெரி,** புளியாரை, Indian sorrel — Oxalis carniculata.

**சங் கேசுரம்,** மரு ளூமத்தை, head-ache plant — Xanthium strumarium.

**சங்கேசுர ரசம்,** கெந்தி, நாக பஸ்பம, ரச பஸ்பம, வெணகாரம், பலகறை, நீலத் துத்தம இவை யெல்லாம்சேர்த தரைத்து, ஆயுள் வேத முறைப்படி புடமிட் டெடுத்து சய ரோகததிற்காகக கொடுக்கு மருநது, a medicine prepared by mixing sulphur, calcined zinc and mercury, borax, cowries and blue vitriol in due proportions and grinding them all together The product is then calcined according to Ayurvedic method. It is prescribed for consumption.

**சங்கேத மொழி,** பரி பாஷை வார்த்தை technical term ; code word.

**சங்கேத மொழிப் பிரயோகம்,** சாஸ்தி ரார்த்தம்; use of term or technical expression ; technicality.

**சங்கே மாயி,** ஓர் யுனானி கடைச் சரக்த, a bazaar drug useful in Unani system.

**சங்கை,** சுக்கு, dried ginger — Zingiber officinalis ; 2. வறட் சுண்டி ; ஆடு தின்னுப் பாளை, worm-killer — Aristolochia bracteata ; 3. அளவு, measure ; 4. கணைக்கால், shin-bone ; that portion of the leg between the knee and the ankle ; 5. அசசம், fear ; 6, காற்றுச் சங்கை, a suspicion that one is possessed by a devil ; the supposed evil influence of a devil.

**சங்கை மூலி,** பெரு மருந்து, Indian birthwort — Aristolochia Indica.

**சங்கை விஷம்,** பாம்பின் விஷ பயத்தா லுண்டாகும் நோய், a morbid affection of mind through fear of poison from snake-bites

**சங் கோசகம்,** மரணத்தை யுண்டாக்கும் ஓர் விஷக் கிழஙகு, a poisonous root causing death.

**சங் கோச பிசுனம்,** குங்குமம், English saffron Crocus sativus.

**சங் கோசம்,** மஞ்சள், turmeric — Curcuma longa ; 2. குங்குமம், English saffron ;

3. அடககம, modesty ; 4. கூச்சம், bashfulness ; 5. கண் கூசசம், intolerance to light — Photobia ; 6. ஓர் மீன், a kind of fish ; 7. குங்குமப் பூ, English saffron flower — Crocus sativus.

**சங்கோ சன காரி**, தசை நார்களையும், நரம்பு களையும், சுருஙகச் செய்து, நீர் வடிதல், இரத்தப் பெருககு, அதிசாரம் முதலிய போககுகளை நிற்கச செய்யும் மருந்து அல்லது துவர்ப்பு வஸ்து remedies which contract the muscular fibres and nerves, and also arrest fluxes, hemorrhages, diarrhoeas etc — Astringents

**சங்கோல பத்திரி**, தூது வளை, three - lobed night-shade — Solanum trilobatum.

**சங் கோலம்**, தயிர், curd

**சசகம்**, முயல், hare : 2 முயற் சாதி ஆண், (In Erotic Science) one of the 4 classes of men i. e of the species of hare.

**சச காரம்**, காட்டு மா, jungle mango — Spondias mangifera.

**சச சிருங்கம்**, முயற் கொம்பு, hare's horn, a term figuratively used for indicating an impossibility or sometimes rarity.

**சச பத்திரம்**, விஷ பாலை, poison milk plant

**சசபரம்**, நான்முகப் புல் அல்லது நாணறபுல் buffalo reed -- Saccharum spontaneum

**சச மதம்**, கஸ்தூரி, musk.

**சசம பரி**, ஆமணக்கு, see சசம்பரி.

**சசம்**, முயல், rabbit; hare; 2. வெள்ளைபோளம் white myrrh; woman's bole 3. ஆண் சாதி நான்கினி லொன்று, one of the four classes of men described in the Erotic science.

**சசம்பரி**, ஆமணக்கு, castor plant — Ricinus communis ; 2. வெள ளாம்பல், white Indian water-lily — Nympaea lotus.

**சசம் பிரியம்**, வெள் ளாம்பல், see சசம்பரி; 2. முத்து, pearl.

**சசம் புரி**, ஆமணக்கு, see சசமபரி.

**சசலம்**, ஈரம், dampness.

**சச வாதம்**, நெருப்பைக் கண்டவுடன் காணும் ஓர் முயல் வாதம், a kind of fits appearing on the mere sight of fire

**சச விஷாணம்**, முயற் கொம்பு அதாவது இல்லாதன வற்றிற்கு இம் மொழியை ஏற்றிச சொல்வது. இது இன்மையைக் காட்டும். hare's horn — a term used symbolically to indicate a thing not in existence. It has a negative significance showing absurdity.

NOTE :— Such a kind of symbolical use applies equally to குதிரைக் கொம்பு also indicating rarity or absurdity.

**சசன்**, மூவகைஆண சாதிகளி லொன்று அதாவது முயற் சாதி, one of the three classes of men i e,, one of hare-like nature.

**சசா ரிகம்**, நன்னாரி, Indian sarsaparilla — Hemidesmus indicus alias Periploea indica

**சசா தனம்**, கழுகு, vulture; 2 பருந்து, heron; kite.

**சசாடம்**, சிறு நன்னாரி, small-leaved sarasaparilla ; swallow-wrot — Hemidesmus indicus (angustifolia).

**சசி**, இநதுப்பு, rock-salt; 2. கருப் பூரம, camphor — Cinnamomum camphora ; 3. பச்சைக் கற்பூரம், crude camphor : 4. கடல், sea; 5 சநதிரன், moon; 6. மழை, rain.

**சசி கலை**, சந்திர கலை, phase of the moon.

**சசி காந்தம்**, சந்திர காந்த மணி, moon-stone. It is a translucent variety of felspar ; 2. செவ வாம்பல், red Indian water-lily — Nymphaea rubra.

**சசி தாகிகம்**, வெண் சந்தனம், white sandalwood — Santanum album.

**சசிப் பிரியம்**, see சசம் பிரியம்.

**சசிய கஞ்சா**, சடை க் கஞ்சா, see சசியம்.

**சசியம்**, தானிய விளைவு, grain produce; 2, சடைக் கஞசா, a superior variety of Bengal hemp — Cannabis ; 3. மரா மரம், Ceylon ebony — Diospyros ebenum ; 4. நிலப் பனைக் கிழங்கு, ground palm — Curculigo orchioides : இந்துப்பு, rock-salt.

**சசியா**, ஆசசா அல்லது மரா மரம், see சசியம்.

**சசியா திதம்**, மாசி பத்திரி, santonin wood — Artemesia indica,

**சசியாமி**, முயற் செவிக் கள்ளி, a kind of spurge, the leaves of which resemble the ear of a hare, probably referring to leaf spurge *(இலைக் கள்ளி)* — Euphorbia neirifolia.

**சசி யுப்பு**, இநதுப்பு, rock-salt ; Sindh salt,

**சசுந்தரம்**. ஓர் கடைச் சரக்கு, a bazaar drug.

**சசுபம்**, அசோகு, Asoka tree — Polyalthia longifolia; 2. காகோளி, wing - leaved Asoka — Saraca indica; 3. நெட்டி லிங்கம், Indian mast tree — Polyalthia longifolia.

**சதூபா கிதம்**, முக்கூட்டு நெய், நோய் தீர்ந்த வுடன் தலை முழுகக் கொடுப்பது, a mixture of three oils viz. cow's ghee, gingelly oil and castor oil. It is prescribed for patients to have an oil - bath immediately after cure.

**சசோப நேத்திர பாகம்**, கண் தினவெடுத்து குத்தல் கண்டு, பீளை சேர்ந்து, சீழும் நீரும் வடிந்து விழியில் எரிச்சலை யுண்டாக்கும் ஓர் கண்ணோய், an eye disease attended with symptoms of itching sensation, pricking pain, suppuration of the eyes, deposit of mucous matters, slimy discharge lacrimation and inflammation with burning sensation.

**சச்சடம்**, தாமரை, lotus flower — Nelumbium speciosum.

**சச்சம்**, பிணக்கு, whirling nut — Gyrocarpus jacquini; 2. உண்மை, truth.

**சச்சனம்**, நாவல், common jaumoon — Eugenia jambolina

**சச்சிக் காரம்**, சோடா வுப்பு, impure carbonate of soda obtained by burning plants —Barilla; 2. உமரியுப்பு இது நரி யுமரி அல்லது உப்புக் கீரையை கொளுத்துவதிஞ லுண்டாகும், impure carbonate of sodium derived from burning the plant known as common Indian salt - wort — Suaeda nudiflora — Soda carbonus; 3. சோடா மாவு, bicarbonate of soda.

**சச்சிதானந்த முலைப் பால்**, உப்பு கரிக்கும முலைப்பால், saltish breast milk.

**சச்சிதா னந்தம்**, கல் லுப்பு, insoluble rock-salt found underneath the sea.

**சச்சிதானந்த வெளி**, see சச்சிதா னந்தம், 2. மூளை, brain; 3. அண்ட வெளி, the space above the brain and below the skul: 4. சிசுவின் மண்டை வெளி, the vacant space in an infant's cranium — Fontanelle.

**சச்சினி**, ஆருவது மாதம், the sixth month.

**சச்சு**, இழிந்த புகையிலை, inferior tobacco: 2. சுக்கு, dried ginger — Zingiber officinalis; 3. see சச் சுண்டி: 4. பறவை மூக்கு, bird's beak: 5. கொஞ்சம், little.

**சச் சுண்டி**, நீர்ச் சுண்டி, sensitive plant floating on water — Neptunia oleracia.

**சச்சு முயல் வலி**, உடம்பில் கெட்ட வாயுக்கள் சேர்வதினலை உண்டாகும முயல் வலி. இவ் வலி முயல, நாய் இவைகளுக்கு வருவது சகசம், ஆகவே இப்பெயர், a kind of spasm due to undue predoninence of morbid bodily fluids or humours in the system Such kinds of fits or convulsions are very common among rabits or dogs and hence the name.

**சச்சு வாயு**, கெட்ட வாயு, contaminated air 2. அசுத்த வாயு, impure air or gas; 3. கரி யமில வாயு, carbonic acid gas;

**சஞ்சமஞ்சம்**, கோஷ்டம், Arabian costus — Costus speciosus

**சஞ்சம்**, அரக்கு, sealing wax

**சஞ் சமனம்**, திரிதோஷ கோளாறுகளை சமனப் படுத்தி அதனுலுண்டான கோபங்களை சாந் தப்படுத்தி உடம்பினின்று கழிவு ஏற்படா மல் செய்யு மருந்து, medicine rectifying the deranged humours in the system and calm their excitement without promoting the excretions.

**சஞ்சயம்**, உதிராதி கரணம், congestion; 2. திரட்சி, collection; multitude: 3. பூர்வ கரும மூட்டை, (In Philosophy) the out standing Karma of previous births at one's credit.

**சஞ்சரம்**, உடல், body,

**சஞ்ரிச**, தேனீ, honey-bee.

**சஞ்சரிகை**, இலந்தைக் கனி, common jujube — Zizyphus jujuba.

**சஞ்சரி நேர் வாளம்**, ஓர் வகை நேர் வாளம், a kind of croton seed.

**சஞ்ச ரீகம்**, கரு வண்டு, black beetle; a large black bee

**சஞ்சல சீவனன்**, புட்ப ராகம், topaz.

**சஞ்சலம்**, காற்று, wind; 2. see சங்கர பாஷா ணம், 3. நடுக்கம், tremor; 4. துன்பம், grief; 5. வியாதி, disease; 6. மனோ சஞ்ச லம், agitation or fickleness of mind; 7. மனக் கவலை, uneasiness of mind: mental worry: 8. துக்கம், sorrow.

**சஞ்சலை**, திப்பிலி, long-pepper — Piper longum; 2. மின்னல், lightning.

**சஞ்சலிக் கீரை**, ஓர் வலைக் கீரை, a kind of greens.

**சஞ்சா**, ஆற்று மருந்து, healing balm.

**சஞ்சாங்கம்**, பெரு முத்தக் காசு, koray root Cyperus rotundus.

**சஞ்சார சமாதி**, பசி தாகத்தை சாந்தி செய்து கொண்டு நடக்கையிலும், இருக்கையிலும் கேசரியில் மனதை நாட்டி அனுசரிக்கு மோர் நிலைமை, a state or condition in which one after appeasing his hunger and thirst, concentrates his mind even while walking and sitting during his wakeful life*

**சஞ்சார பிரேதம்**, ஒருவர் காணாதபடி சீவிக்கும் உயிர்ப் பிணம், one who lives in obscurity — Civiliter mortuus; 2. நடைப் பிணம், living corpse — a burden to world,

**சஞ்சாரம்**, தொத்து, infectious; 2. புணர்ச்சி, cohabitation.

**சஞ்சார வியாதி**, எங்கும பரவும் நோய், all spreading disease such as epidemics? contagious disease; 2. தொதது நோய், Infectious disease.

**சஞ்சாரன்**. உயிர், life; 2. திரிந்து வாழபவன, one leading a wandering life.

**சஞ்சாரி**, பூனைக் காஞ்சொறி, cowhage plant —Tragia involucrate (cannabina): வன வாசி, one who roams about in the forest, 3. see சஞ்சாரன்

**சஞ்சா வரம்**, தகரை, cassia or ringworm plant — Cassia tora.

**சஞ்சா ளிகம்**, வண்டு, beetle.

**சஞ்சிகை**, இலந்தை. see சஞ்சரிகை,

**சஞ்சிதம்**, கட்டுப்பட்ட வினை: (In Philosophy) accumulated Karma or actions of previous birth; 2. மூட்டை, bundle.

**சஞ்சி திகை**, இலந்தைக் கனி, jujube fruit.

**சஞ்சி மூலி**, சஞ்சீவி மருந்து, elixir. See சஞ் சீவி மூலி

**சஞ்சி ரீகம்**, see சஞ்சாளிகம்.

**சஞ்சினி**, புளிக் கரணை, a species of sour-sorrel plant — Oxalis genus,

**சஞ்சீவ கரணி**, புளிய மரம், tamarind tree — Tamarindus indica; 2. புளி, tamarind —Tamarindus indica, 3. புளியம் பட்டை, tamarind bark· 4. மூர்ச்சை தீர்ந் துயிர் தரு மருந்து, a medicine by which one recovers from swoon; a medicine efficacious in restoring suspended animation; 5. ஆறறு மருந்து, warm medicine which increases the circulation of blood — Cordial; 6. காய கற்ப மருந்து, rejuvenating drug: 7. சீவனி, a medicine for long life; 8. நோய் தீர்க்கு மருந்து, a panacea for all diseases.

**சஞ்சீவ கரணியம்**, பாலை, iron wood—Mimusops hexandra.

**சஞ்சீவ காசிகம்**, முசுறுப் புல், maritime grass —Pommereulla cornucopia.

**சஞ்சீவகி**, புளிய மரம். tamarind tree—Tamarindus indicus.

**சஞ்சீவனம்**, உயிர்ப் பிசசை, animation; revival of life; 2. மா மரம், mango tree — Mangifera indica; 3. பாலி லுள்ள சருக்கரை, sugar of milk—Lactose.

**சஞ்சீவனி**, உயிர் தரு மருந்து, a restorative; any madicine bringing to life or promoting long life. See சஞ்சீவ கரணி, 2. பூ நாகம், earth - warm.

**சஞ்சீவனை**, see சஞ்சீவனி,

**சஞ்சீவன்**, மா மரம், mango tree — Mangifera indica.

**சஞ்சீவி**, see சஞ்சீவனி; 2. கருங் குன்றி,, black jeweller's bead; 3. இந்திர கோபப் பூச்சி, lady'a fly or scarlet moth — Mutella occidentalis; 4. புளி, tamarind; 5 மலைப் பூண்டு, mountain herb; 6. பூ நாகம், earth-warm, 7. see ஆடு தின்னுப் பாளை, 8. முலைப்பால், woman's breast milk: 9. சிந்தில், moon creeper — Menispermum cordifolium; 10. உயிரைக் காப்பாற்றி நீண்ட ஆயுளைக் கொடுத்து, உலோகங்களை பொன்னாகச் செய்யு மருந்து, the philosopher's stone supposed to have the power of protecting and prolonging one's life; and it also said to be capable of transmuting inferior metals into gold; 11. மூர்ச்சை தீர்த் துயிர் தரு மருந்து, a restorative or revivifying medicament restoring from swooning or suspended animation, death etc, and ensuring long life—Elixir; 12. சதை யொட்டிப் பூடு, a a plant uniting the cut portions or ends of flesh, See சதை யொட்டி,

**சஞ்சீவிக் கண்டம்**, கரு நாகம், black cobra.

**சஞ்சீவிக் கருணை**, see காட்டுக் கருணை.

Note.—The bitter aromatic bark of this tree approximates in properties to that of Magnolia glauca of North America It is also employed in the treatment of low intermittent fevers.

Further trials with this bark therefore appear desirable. The flower should not be confounded with—Artabotrys odoratissima (மனோரஞ்சிதம்),which is quite a different one. It is also considered as a curative in cases of haemoptysis, and is also said to have both cooling and heat-making potency and to subdue the deranged Kapham (phlegm). There is also another tree of the same name champauk—Mappia tomentosa, of the species of அரலி known as—Mappia foetida.

சண்பகம், கொடிச் சண்பகம், creeper champak — Pergularia genus; 2. சிறு சண்பகம், small champak—Canangium odoratum.

சண்பசாதிப் பிரண்டை, முப்பிரண்டை, a species of adamantine creeper having three corners or faces—Vitex genus.

சண்பங் கோரை, see சம்பங் கோரை.

சண்பு, see சம்பங் கோரை

சண்முகக் கொடியோன், கோழி, fowl; 2. சேவல், cock.

சண்முக சாலம், அகஸ்தியர் செய்த நூற்களிலொன்று, one of the several treatises compiled by sage Agastiya; a book on Magic.

சண் முகத் திராவகம், கொங்கணவன் வாத காவியத்திற் சொல்லி யுள்ள ஓர்வகைத திராவகம். இது மூலிகைச் சுட்ட சாம்பலைக் கரைத்து தெளி விறுத்து, அததுடன் சீனம், வெடியுப்பு முதலிய கடைச் சரக்கு உப்புகளையும் சேர்த்து வாலையி லிட்டுக் காய்ச்சி வடித்த திராவகம். இதனுல் சாரம், வீரம், சூதம் முதலிய ஓடும் சரக்குகளெல்லாம் கட்டும், an acid preparation contemplated in Konganava works on Alchemy. It is obtained by distilling a solution of salts filtered from a mixture of ashes, combined with the salt sold in the bazaars such as, alum, nitre etc. It is useful for binding or consolidating volatile substances such as, sal ammoniac, corrosive sublimate, mercury etc , which evaporate when heated.

சண்முக ரசம், சகல சூலை நோய்களுக்கும் கொடுக்கப் படும் ஓர் ஆயுர்வேத மருந்து, an Ayurvedic medicine given for all kinds of gout, acute rheumatism and colic.

சண்முகி முத்திரை, சிவ பூசையில, பெரு விரல்களாற் காதுகளையும், நடு விரல்களால் கண்களையும், அணி விரல்களால் மூக்குத துவாரங்களையும் மறைப்பது அல்லது அடைப்பது, a kind of symbolical expression of fingers in the worship of Shiva. It is performed by blocking the ears with the thumb, the eyes with the middle finger, and the nostrils with the two ring fingers.

சத கண்டம், பொன், gold.

சதகம், தான்றி மரம், devil's abode—Terminalia bellerica; 2. சாதிக்காய், nutmeg—Myristica fragrsns; 3. குதிரைச் செவி, horse-ear plant; 4. நூறு, hundred; 5. ஆனை மீக்குவம், Cathery mardah—Terminalia tomentosa (coriacea).

சதகரம், சாதிக்காய் see சதகம்.

சத காசம், நுரையீரல் கோளாறடைந்து இரும்பும்போது இரததம் வெளி வருவதுடன் மார்புவலி, நொதிக்கும் வலி முதலிய குணங்களைக் காட்டும ஓர்வகைக் காச நோய், a kind of asthma affecting the lungs. It is marked by bloody discharge followed by soring pain in the chest; 2. இரததம் கக்கும் இருமல், cough attended with vomiting of blood—Hemoptysis.

சத குப்பி, இதன் இலையே சோகிக் கீரை எனப்படும். இதற்கு சத குப்பை என்றும் பெயர். இது 2-4 அடி உயரம், இலைக் கொழுந்து நூலைப்போல் மிருதுவாக விருக்கும், அடித தண்டு வெண்மையான உரோமங்கள் உள்ளது; மடல் வட்டம், காய் நீளம், அடர்த்தி, இதற்குள் இரண்டு விதைக ளுண்டு; பூக்கள் மஞ்சள் நிறம். இக் கீரை கறிகளில் உபயோகப படும்; விதைகளை கறி மசாலையில் சேர்ப்பார்கள். இவ விதைகளை நசுக்கி தண்ணீரில் கொதிக்க வைத்து, கைகால் பிடிப்பு முதலிய மூட்டு வியாதிகளுக்கும், வீக்கத்திற்கும் உபயோகப் படுத்தப்படும்; கஷாயமிட்டு எல்லா வயதினர்க்கும் கொடுக்கலாம். அநேக பெண்களுக்கு அதிக அவசியம், ஏனெனில், வயிற்றுப் பொருமல், அசீரணம், வயிற்று வலி, முதலிய வைகளுக்குக் கொடுக்க குணமாகும். இதை வாலையி லிட்டு தீநீர் இறக்கி, தலைவலி, விக்கல், வயிற்று வலி, சல தோஷம், கர்ணசூலை, ஆசனக் கடுப்பு, இவைகளுக்குக் கொடுக்கலாம். வாலையி லிட்டு இறக்கிய விதையின்

எண்ணெய் மேற்கண்ட நோய்களுக்கும் உபயோகப்படும். இலைகளுக்கு எண்ணெய்த் தடவி வதக்கிக் கட்ட, கட்டிகள் உடையும், இதன் விதைகளைத் தண்ணீரில் கொதிக்க வைத்து மூட்டு வீக்கங்களுக்கு ஒத்தடம் கொடுக்க உபயோகப்படும். அத்திப் பாலுடன் இதன் விதைகளை அரைத்து அதிசாரத்திற்கு கொடுக்கலாம், bishop's weed; common dill—Anethum graveolens alias A. sowa. 2 - 4 ft. leaflets filiform, stem curved with white pubescence, petals roundish: fruits long, compressed containing two seeds; flowers yellow. It is useful in cookery. Seeds form a chief ingredient in curry-powder. When bruised and boiled in water, the seeds are applied externally in cases of rheumatism and swelling; a decoction of seeds is useful for children and men of all ages. It is highly useful to women in confinement especially in cases of rumbling of the stomach, indigestion, colic etc.; the distilled dill-water (Aqua anethi) of this seed is much valued in cases of headache, hiccough, abdominal pain, cold, earache, rectal inflammation etc. Essence of oil (oleum anethi) from the seeds is prescribed by Veidyans for the above mentioned complaints. Leaves are used externally for abscesses to hasten suppuration by applying them warm and moistened with oil. The seeds boiled in water prove to be useful for fomenting in cases of affections of the joints; when ground and mixed with the sap or juice of the fig-tree, it proves a useful remedy in diarrhoea.

சதகுப்பி சக்களவன், காட்டுச் சதகுப்பை. இது ஓர் கடைச் சரக்கு, a wild plant akin to common dill—Anethum graveolens. It is a bazaar drug.

சதகுப்புகம், முருங்கை, Indian horse radish —Moringa pterygosperma.

சதகும்பம், பொன்மலை, mountain from which gold is dug out.

சதகுயா, see சத குப்பை.

சதக் காசிதம், முல்லைப் பூ, smooth jasmine —Jasminum trichotomum.

சதக் காரை, ஓர் வகைக் காரைச் செடி, a kind of webera—Canthium genus.

சதக் கிரதம், மின்னல், lightning.

சதக் கிராணி, ஓர் வகைக் கழிச்சல், a kind of diarrhoea.

சதக்கிறு, அரக்கு, sealing wax; shellac.

சதக்கினி ரோகம், கண்டத்தி னுள்ளே சதை வளர்ந்து பலா முள்ளுகளைப் போல் எழும்பி, இரும்புத் தண்டைப் போல் வீங்கிக் கஷ்டமடைந்து, தொண்டையை அடைத்து சுரம், வலி, இவைகளை யுண்டாக்கு மோர் கண்ட நோய். இது திரி தோஷத்தினால் பிறக்கும். இதில் அனேக விதங்க ளுண்டு. எல்லாம் அசாத்தியமாக முடியும், a disease of the throat in which the inner muscles become hard by the obstruction of the jagged membrane, edged like an iron weapon beset with fleshy excrescences, which are formed along the inner lining of the throat pipe. It is due to the derangement of the three humours of the body—Diphtheria. There are different varieties which will all be found incurable and sometimes fatal.

சதக்கேசம், நீரடி முத்து, hydrogogue nut—Hydnocarpus inebrians.

சதங்கம், குளிர்ச்சியைத் தரும் அறுவகை சரக்குகள், அவையாவன—வெட்டிவேர், கோரைக் கிழங்கு, பற்பாடகம், பேரா முட்டி, சந்தனம், சுக்கு, the six cooling drugs viz.—cuscus root, common sedge-grass root, sparrow leg, fragrant sticky mallow, sandalwood and dry ginger.

சதங்கை, சிறு மணி, small beads; 2. சதுரக் கள்ளி, square spurge—Euphorbia antiquorum.

சதங்கைக் கொதி, உலை நீர் தள புளவென்று சப்தத்தோடு கொதித்தல், the agitation caused in boiling by sending up bubbles with a violent motion—Ebullition.

சதங்கைப் பூரம், see சதங்கைப் பூரான்.

சதங்கைப் பூரான், ஓர் வகைப் பூரான், a kind of centipede with several links.

சத சஞ்சீவி, நீண்ட காலம் உயிரோ டிருப்பவன், long-lived person; one living for one hundred years or more — Centenarian. See சஞ்சீவி.

சத சதத்தல், சொத சொதத்தல், becoming muddy and moist.

சத சதப்பு, ஈரம், dampness, as of soil or mire.

சித் சத்து, உள்ளதும் இல்லாததும், that which is real and unreal; 2. ஆதஅமா, the soul; 3. உயிர், life.

சதச பகந்திரம், ஆசன வாயிற் காணும் பவுத்தி ரத்தை சரிவர சிகிச்சை செய்யாததினால், மறுபடியும் கிளைத்துக் குதறி, கிருமிகளுண்டாகி ஆசனவாயைச் சுற்றிலும் அரித்திடும், a kind of fistula *in ano* which, if not properly treated or neglected, will develope ulcers and the worms which are bred, burrow the anal orifice.

சத சல்லியம், பல விததிலும் ஏற்பட்ட தொல்லை, worry or trouble from various sources.

சத சிருங்கம், நூற்றுக் கணக்கான அடையானங்கள், hundreds of innumerable symptoms.

சத சுக்கிலம், கரு விழியிலாவது பார்வையிலாவது காயம் படுவதாலேற்படும் கண்ணோய். a disease of the eyes due to an injury to the iris or to the lens.

சத சுலோகம், பதார்த்த குணங்களைப் பற்றிய நூறு பாட்டுகளடங்கிய ஓர் ஆயுள்வேதநூல், an Ayurvedic materia medica written in 100 stanzas, treating of plants and drugs.

சத சுலோகி பண்டிதன், பதார்த்த குணத்தில் தேர்ச்சி யடைந்த வைத்தியன், one who is well-versed in Materia Medica; 2. வைத்தியத்தில் நிபுணன், a skilful or an expert physician.

சதச் சதம், தச்சன் குருவி, wood-pecker; 2. வெண்ணாரை, white cormorant.

சதஞ் சீவி, நூறாண்டு வரை சீவிப்பவன், a person living for 100 years; 2. நெடுங் காலம் உயிர் வாழ்வோன், long-lived person.

சதத சுரம், பகலில் ஒருதரம், இரவில் ஒரு தரம் வரும் சுரம். இதனால் அதிக உணவு கொள்ளும், fever occurring once in the day and once in the night, and in such cases, one is inclined to take more food; 2. எப்பொழுதும் சுரம் காய்தல், Kala-azar or tuberculosis in which there is always a rise of temperature. See சந்தத சுரம்.

சததம், சந்ததம் அல்லது எப்பொழுதும், always.

சத தளம், தாமரை, see சத பத்திரம்.

சத தாரை, இடி, thunder.

சதத்துவம், சுபாவம், nature; 2. சுபாவப் பழக்கம், second nature.

சத பதம், நூறு கால்களை யுடைய செந்து, any creature or insect with 100 legs; 2. பூரான், centepede.

சதபதி, சாணிப் பூரான், centepede which originates in the dung of animals; 2. நாட்டு மரவட்டை, wood-louse.

சத பதுமம், see சததளம்.

சத பத்திரம், தாமரை, lotus flower; so called from its containing 100 petals; 2. கிளி, parrot; 3 மயில், pea-cock; 4. தச்சன் குருவி, see சதச் சதம்; 5. வெண்ணாரை, see சதச் சதம்; 6. வறட் சுண்டி, see சதபத்திரி.

சத பத்திரா, ஆடு தின்னாப்பாலை, see சத பத்திரி.

சத பத்திரி, தாமரை, see சத பத்திரம்; 2. ஆடு தின்னாப்பாலை, ulcer plant — Aristolochia bracteata; 3. நரிப் பயறு, fox-gram; jackal-gram—Rothia trifoliata; 4. கஸ்தூரி ரோஜா, musk rose flowers — Rosa moschata; 5. புழுக் கொல்லி, worm-killer, same as No. 2.

சதபரு, வெள்ளை நீர் முள்ளி, white-flowered water-thistle—Hygrophila spinosa.

சதபருவ சுதா, கருப் பறுகு, see சத பருவம்.

சத பருவம், நீர்முள்ளி, blue-flowered water-thistle, see சதபரு; 2. கருப் பறுகு, dark panic grass—Cynodon genus.

சத பர்வம், பல கணுக்களை யுடைய கரும்பு, a sugarcane with several knots or joints.

சத புட்பம், see சத குப்பை; 2. எருக்கு, madar plant—Calotropis gigantea; 3. பிற புண்டரீகம் அதாவது அல்லித் தாமரை, white Indian water-lily—Nymphae lotus; 4. சதாப்பிலை, which see.

சத புட்பி, சதகுப்பி, dill plant—Peucedanum Sowa; 2. அகச்சுலி, toon-tree—Cedrela toona.

சத பேதி, வாத முறையில் நூற்றுக் கொன்று பேதித்தல், (*In Alchemy*) transmutation of metals effected in the proportion of 100 : 1.

சதபேதி காணல், நூற்றுக் கொன்று சேர்க்க வாதங் காணல், seeing, that transmutation of metals is effected after experimenting with the proportion of 100 : 1.

சதபேதி திட்டம், நூற்றுக்கொன்று கணக்குள்ள மதிப்பு, calcination based on the estimated proportion of 100 : 1.

சதபோனக பகந்தர விரணம், ஓர் வகை விரண நோய். இது சாதாரணமாய் ஆசனத தண்டை காணும். இதனால் அநேக பகந்தரக் கட்டிகள் பழுத் துடைந்து, புற்றைப் போல் சிறு சிறு துவாரங்களுள்ள விரணங்கள் ஏற்பட்டு, அவைகளினின்று கெட்ட நாற்றத்தோடு சீழ, இரத்தம் வடிந்து சலம் ஒழுகும், a kind of anal fistula. The term is generally applied to sinuses burrowing under the skin with several openings, but here, chiefly to fistula in ano. It is attended usually with discharge of pus and blood with fetid smell due to the oozing of watery or serous fluids constantly.

சத போனகம், ஆண் குறியில் ஏற்படும் கிரந்தி நோய். இதனால் குறி முழுவதிலும் சிறு சிறு துவாரங்கள் ஏற்பட்டு இரத்தம் வடிந்து மூத்திரம் வெளிப் படும் போது அதிக எரிச்சலை யுண்டாக்கும், a kind of syphilis or chancre marked by small perforating ulcers on the penis with bloody discharge and giving rise to extreme burning sensation while urining.

சதப் பிராசம், அலரி, oleander — Nerium odorum.

சதமுகக் குருவி, ஓர் வகைக் குருவி, a mystic sparrow ?

சத மூலம், see சத மூலி.

சத மூலி, தண்ணீர் விட்டான் கிழங்கு, water root—Asparagus racemosus.

சதம், இடி thunder ; 2, இலை, leaf ; 3. நூறு, hundred ; 4. திலக மரம், அல்லது தயில மரம், sandal wood tree ; 5. ஓர் நாணயம், a coin ; 100 cents ; 6. இறகு, feather ; 7. நித்தியமானது, that which is eternal or permanent.

சதம்பவாசி, கற்பரி பாஷாணம், a kind of native arsenic ; a mineral poison.

சதரி, நாட்டு அதிமதுரம், Indian or country liquorice—Abrus precatorius (root of).

சத ரோகம், see சத போனகம்.

சத ரோணிதம், கந்தகம், sulphur

சதர்ச்சி, சதுரக் கள்ளி, square spurge — Euphorbium antiquorum.

சதவல், சதுப்பு நிலம், damp soil ; 2. குப்பை, rubbish ; dirt.

சத விசர்ப்பி, ஆயுத முதலியவற்றால் காய மடைந்தவர்களுக்கு, இரத்தம் கெட்டு தடிக்கும் போது, எண்ணிறந்த கருநிற செந்நிற கொப்புளங்களை யுண்டாக்கும் ஓர் விசர்ப்ப நோய், innumeral red and blue septic vesicles on the skin due to the contamination of blood with putrefied matter, arising from wounds caused by weapons.

சத வீரியம், வெள்ளறுகு, bermuda grass— Exacum physsopifolium.

சத வீரு, ஓர் மல்லிகை, Arabian jasmine— Jasminum sambuc.

சத வீருகம், முந்திரிப் பருப்பு, cashew-nut — Anacardium occidentale.

சத ஊசிக் காந்தம், பத்து அல்லது அநேக ஊசிகளைப் பிடிக்கும் காந்தம், a magnet having the power of attracting ten or several needles.

NOTE — *(In Siddha Medicine)* The several gradations in the Magnet are differentiated or otherwise distinguished by the prefix viz.— சதஊசி, ஏகூசி, மூஊசி, etc. which is only an indication to show the attracting power of the Magnet to the number of needles hanging one below the other.

சத வேதிரம், புளிவஞ்சி, a sour plant ?

சத வேலி, see சதாவேரி.

சதனம், இலை, leaf ; 2. இறகு, feather ; 3. நீர், water ; 4. வீடு, house.

சதனயம், வெள்ளை யவரை, white bean.

சதன ரோகம், குழந்தைகட்கு ஆசனத்தி லுண்டாகு மோர் வித விரணநோய். இது வயிற்றில் புளித்த மலம் சேருவதாலும், அதிசார ரோகத்தாலும் பிறக்கும். அப்பொழுது குதஸ்தானத்தில் மொதகையைப் போல் சிவந்த விரணத்தை எழுப்பி, நமைச்சலையும், வலியையு முண்டாக்கும், sores or ulcers in the anus or rectum in children. It is due to accumulation and retention of old stools in the intestines or to diarrhoea ; and it is marked by inflammation of the part, local itching and pain —Prurigo.

சதா, எப்பொழுதும், always ; constantly.

சதா அவம், சோம்பு, anise seed—Anisum.

சதா கதி, ஓயா நடை, constant walk ; unceasing movement ; 2. காற்று, wind in perpetual motion ; 3. நிர்வாணம், nakedness ; annihilation.

சதா காசம், மாங்கிஷபேதி, a mineral capable of curing overgrowth of flesh in the system or ordinarily dissolving flesh.

சதா காலம், எப்பொழுதும், always; at all times; 2. சந்ததம், eternity; endless past or future time.

சதா குழை, குக்கில், Indian gum or resin —Vateria indica.

சதாக்கினி, எரிச்சலை யுண்டாக்கும் கொடுக் குள்ள தேள், scorpion with a fiery sting.

சதா சர்வ காலம், சந்ததம், eternity; 2. எப் பொழுதும், always.

சதா சிவத்தி, சீனக் காரம், alum— Alumen.

சதா சிவம், சவர்க் காரம், fuller's earth, 2. ஆகாயம், sky; 3. மூளை, brain; the cerebral region.

சதாசிவன் பெண்டீர், கந்தகம், sulphur; 2. கௌரி, see சங்கரன் பெண்டிர்.

சதா சிவன் மிடறு, துரிசு, blue vitriol; copper sulphate or acetate.

சதாசிவன் மூலி, கஞ்சா, gunjah plant.

சதா சிவன் வாசம், பொன் மலை, mountain containing gold ore, 2. கைலாச மலை, Mount Kailas.

சதா சைவம், ஓருக் கொம்பு, an unidentified plant?

சதாச்சி, சதுரக் கள்ளி அல்லது நான்முகக் கள்ளி, square-spurge—Euphorbia antiquorum.

சதாநபம், எருக்கு, madar plant — Caltropis gigantea.

சதா பச்சை, எப்பொழுதும் பச்சையாகவே காணப்படும் பூடு, an ever green plant.

சதா படம், எருக்கு, see, சதாநபம்.

சதா படலம், எருக்கு, madar plant —Caltropis gigantea.

சதாபதி, மர வட்டை, a kind of millipedes; wood louse, see ஆயிரங் காலி.

சதா பத்திரம், தாளிச பத்திரி, East Indian plum—Flacourtia catarphracta.

சதா பத்திரி, see சத பத்திரி.

சதா பரி, தங்கம், refined gold; pure gold.

சதா பரிகம், எருக்கு, see சதா படலம்.

சதா பரி மாற்று, see சதா பரி.

சதா பருவா, நீர்முள்ளி see சத பருவம்.

சதா பல சித்தி, வேம்பு, neem or margosa tree—Azadirachta indica.

சதா பலம், அத்திமரம், fig tree—Ficus glomerata; 2. எலுமிச்சை, a lemon or lemon tree — Citrus - medica - acida, so called from its yielding fruit constantly; 3. வில்வ மரம், bael tree — Aegle marmelos; 4. தென்னை மரம், cocoanut tree.

சதா பலை, இதுவே சதாப்பிலை. இவ் விலையினால் பால் மாந்த சுரம், கணப பேதி, கப வமனம், பிரசவ வேதனை இவைகள் போம். பசி தீப னம் உண்டாம், the leaves of rue plant which are useful in cases of fever arising from milk indigestion, vomitting or ejecting phlegm in children and pangs of child-birth during delivery. It also promotes hunger. See சதாப் பிலை.

சதா பாத நடை, அதிக கால் நடை, அதாவது எப்பொழுதும் நடந்து கொண்டே யிருத தல். இதனால் தேகக் காந்தி. சகச தேக புஷ்டி, பலம் முதலியன மதிபமாம். அன் றியும், சுக்கில வீனம், கிழத தன்மை யுண் டாம். Constant or excessive walking which tend to lessen the bodily lustre, strength and bulk. It usually causes not only premature old age, but also tends to lessen the secretion of semen.

சதா புசம், வண்டு, beetle; 2. ஓர் வண்டினம், a kind of beetle—Scarab; 3. சதா ஒலி யிடும் வண்டு, humming beetle.

சதா புடம், எருக்கு, madar plant—Caltropis gigantea.

சதா புட்பி, முல்லை, smooth jasmine — Jasminum trichotonum; 2. எருககு. இது வெள்ளை, சிகப்பு, என இரண்டிற்கும் பொருந் தும், madar plant — a term referring to both the varieties red and white.

சதா புட்பிலி நாபம், செம்மரம், red wood tree. See சதா புட்பினி.

சதா புட்பினி, செம் மரம், Indian red-wood tree—Soymida febrifuga.

சதா புயம், வண்டு, beetle.

சதா பூடம், எருக்கு, see சதா புடம்.

சதாப்பன், எருக்கு, see சதா புட்பம்.

சதாப் பிலை, இதற்கு அருதா அல்லது அரு வதா, செதாபலை, சதாப்பு என்றும் பெயர். இது ஐரோப்பாவிலும், தென் அமெரிக்கா விலும், நமது நாட்டில அனேக வீடுகளி லும், தோட்டம், கொல்லைகளிலும், தொட்டி

யிலும் வைத்து பயிரிடப் படும். இதன் இலை, பச்சை, சாம்பல் நிறம்; இதற்கு எண்ணெய்ப் பசை யுண்டு ; வாசனையும், கிரு கிருப்பு முள்ளது ; கசப்பும், குமட்டலும் வாய்ந்தது. உடம்பிற்கு உஷ்ணமும், கிருமிகளை அழிக்கவும் செய்யும் தன்மையது. அதிக வளவில் விஷத தன்மையது. இலையை இடித்து சாராயத்திற் கலந்து சருமத்தில் கட்ட, தோல் சிவந்து பாரிச வாயுவை ஒருவிதமாய் குணப் படுத்தும். கர்ப்பிணிகளின் கருப் பையை வெளிப படுத்தது மென சிலர் அபிப்பிராயம். இது இருமலால் வருந்தும் நோயாளியிருக்கு மிடததில தூபம் போட வுதவும். அன்றியும், சூதகக் கட்டு, சீதபேதி, காக்கை வலி, வயிற்று வலி, முதலியன குணமாகும். குழந்தைகளுக்குக் குளிய லாட்டும் போது உடம்பில் பூசுவ தண்டு ; இசிவுக்குக் கொடுக்கவும் உதவும். மேலும், சில இலையுடன் மிளகு சேர்தது அரைத்து முலைப் பாலில் கலக்கிக் குழந்தைகளுக்குக் கொடுக்க கோழையை அகற்றும். இது தங்கத்தை பற்ப மாக்கும், இச் செடியில் தோன்றும் புழுவை நல்லெண்ணெயி விட்டு ஓமம் சேர்தது வெயிலில் இட்டு மூக்கில் சில துளிவிட பீனிசம் போம், herb grace or Rue—Ruta graveolens. It is a small shrubby plant cultivated in Europe and S. America ; and in our country in gardens and backyards, as a pot-herb. Its leaf is green, ash-coloured, has a peculiar strong odour, acrimonious and bitter in taste, nauseous. The leaves are medicinally stimulant, carminative, stomachic, antispasmodic and emanagogue ; poisonous in large doses ; leaves powdered and mixed with spirit and applied to the skin cause inflammation ; but it is a cure in cases of paralysis ; it is also used in abortion. They are used for fumigating rooms of asthmatic patients ; moreover, it is a cure for suppression of menses, dysentry, epilepsy, stomach ache, etc. ; they are applied externally when giving a bath to a child ; juice mixed with bazaar drugs is prescribed for children's fits. The leaves ground with pepper and mixed in women's breast milk, is given to chidren to bring out phlegm. The plant is used for calcining gold. The worm found in this plant mixed with ajowan is soaked in gingelly oil and used as nose drops for nasal catarrh after exposing the oil to sun-shine.

Note,—The essential oil distilled from this herb is used as a stimulant to the uterine and nervous system ; and is also given in hysteria and amennorrhoea. The drug ordinarily is a stimulant and antispasmodic in large doses ; it acts as a narcotic poisoning. Externally it acts as a rubefacient. It is an abortifacient to pregnant women.

The tincture of fresh leaves can be used with advantage in the initial stage of paralysis In most parts of India, Rutea *angustifolia—a closely allied species* is cultivated in gardens in India ; and it is held in high esteem in the same way as Ruta graveolens esteemed in Europe.

சதாப்பு, (in Hindi) ஓர் பூண்டு, a plant—Trifolium indicum ; 2. சதாப்பிலை, rue leaves—Ruta graveolens.

சதாப்பு யிலை, see, சதாப் பிலை.

சதாப் பூ, see சடைப் பூம்பாதிரி.

சதா மலகி, தாளிச பததிரி, see சதா பததிரம்.

சதா முர்க்கம், புழுக் கொல்லி, herb of repentence—Ruta graveolens.

சதா முர்க்கியம், பேய்க் கொம்மட்டி, bitter cucumber—Citrullus colocynthus.

சதா மூலம், ஓர் வகை தண்ணீர் விட்டான் கிழங்கு, a kind of water-root — Asparagus racemosus.

சதாமூலி, முலாம் பழம், melon fruit.

சதா மூலிகம், see சதாமூலி.

சதாயுசு, நூறு வயது, age of 100 years.

சதாயு சோன், நூறு வய துடையோன், one aged 100 years — Centenarian ; 2. கிழவன், an old man ; 3. வயது முதிர்ந்தவன், an elderly person.

சதாரு குட்டம், ஓர்வகைக் குட்டநோய். இதில் சிவப்பும் கறுப்புமாக அனேக கொப்புளங்கள் எழும்பி, உடம்பு முழுவதும் பரவி, காடு கட்டி இரணங்களாக மாறும். அதில் எரிச்சல், வலியுடன் கிருமிக ளுண்டாகி மிக்க தொந்தரவு கொடுக்கும். இது சிலேட்டும வாதத்தா லுண்டாகும், a kind of leprosy. It is characterised by red and dark eruptions which afterwards assume the form of chronic ulcers, (*phagedenic*) followed by developement of microbes (bacillus leprae) with burning sensation and pain. It is said to be caused by the concerted action of the two humours - phlegm and wind in the system.

சதா ருஷ்ய குட்டம், see சதாரு குட்டம்.

சதாரை, சதுரமான ஓர் வகை ஆரைக் கீரை, a water plant called sweet green — Marsilea quadrifolia. It is so called from its 4 sides.

சதாவரி, பாம்பு கொல்லி, plant curing snake-bites; 2. தண்ணீர் விட்டான் கிழங்கு, see சதாவேரி.

சதாவரி மண்டூரம், மண்டூர பற்பத்துடன் தண்ணீர்விட்டான் கிழங்கு ரசத்தோடு,பால் பசு நெய் இவைகளைக் கலந்து, ஆயுள் வேத முறைப்படி சமைத்து, வாதபித்த பரிணம சூலைக்குக் கொடுக்கும் ஓர் மருந்து, an Ayurvedic medicine prepared by mixing up calcined ironstone with the juice of water-root, milk, cow's ghee in due proportions. It is prescribed for colic and gout arising from deranged humours viz. wind and bile, in the system.

சதாவளி, வெள்ளைக் காக்கணம்,white-flowered mussell-shell creeper—Clitoria ternatea (*albiflora*); 2. see சதாவாதம்.

சதா வாதம், கிராத வாதம், chronic rupture.

சதா வாந்தி, குழந்தைகளுக்கு ஓயாது அல்லது அடிக்கடி உண்டாகும் வாந்தி, incessant or frequent vomitting in infants or children.

சதா வியர்வை, பித்தாதிக்கத்தினால் உடம்பில் எப்பொழுதும வியர்த்தல், the constant perspiration due to excess of bile in the system.

சதா வுட்காருகை, எப்பொழுதும் உட்கார்ந்திருக்கும் பழக்கம். இதனால் மூலம் அல்லது மூலக் கடுப்பு, அதிதூலம், கண் ரோகம், அக்கினிமந்தம், இவைகளுண்டாம், sedantary habit promoting irritation of rectum, piles, corpulency, eye-complaints, dull appetite etc.

சதாவுதல், அழுகல், rotting; decaying.

சதா வெழுச்சி, வெள்ளை முதலிய மேக நோயினால், ஆண் குறி அடிக்கடி எழும்பி வலியையுண்டாக்கு மோர் நிலைமை. இது பெண்மேல் மோகம் அல்லது நினைவு கொள்ளாமலே ஏற்படும், persistent painful erection of the penis unattended by sexual desire or concuspiscence—Priapism.

Note,—This should not be confounded with Satyriasis—a term referring to erection due to lasciviousness or lust occuring in males. Such a condition occuring in females, is known as Nymphomania.

சதா வேதி, சுக்கான் கீரை, a kind of sour-sorrel—Rumex vesicarius.

சதா வேதை, Ceylon lead-wort—Plumbago Zeylanica.

சதா வேரி, வட தேசத்தில் விளையும் ஓர் வகைத் தண்ணீர் விட்டான் கிழங்கு, a kind of water-root grown in Northern India—Asparagus racemosus.

Note.—It should not be confused with Asparagus sarmentosis, a similar variety with the same properties, obtained in Southern India known as in Tamil தண்ணீர் விட்டான் கிழங்கு.

சதாவேரிக் கியாழம், (ஆயுள் வேதப்படி) தண்ணீர் விட்டான் கிழங்கு, கர்சு தர்ப்பை,நெருஞ்சில், நிலப் பூசணி, கரும்பு, பே யாவாரை இவைகளைச் சேர்த்து போடும் கஷாயம். இதனால் மூத்திரக் கிரிச்சரம் குணமாகும், (*In Ayur Veda*), a decoction prepared with water-root, sacrificial grass, small caltrope, ground pump-kin, sugar-cane, bitter Cassia as chief ingredients. It is prescribed for stricture of urine.

சதாவேரிக் கிருதம், தண்ணீர் விட்டான் கிழங்கை ஆதியாகக் கொண்டு, மற்ற மூலிகைச் சாறுகளுடனும், கடைச் சரக்கு சூரணத்துடனும், நெய்யுடன் கலந்து பக்குவப்படுத்திய ஆயுள் வேத மருந்து. இது மூத்திர நோய்களுக்குக் கொடுக்கப் படும், an Ayur Vedic medicinal ghee prepared with water-root as a chief ingredient along with juices of other plants combined with the powdered bazaar drugs and boiled in ghee. It is given for urinary complaints.

சதாவேரிக் கிழங்கு, நிலப் பனைக் கிழங்கு, root of ground palm—Curculigo orchioides; *C.f.* சதா மூலம்.

சதாவேரிச் சூரணம், குரற் கம்மலுக்காக கொள்ளும் தண்ணீர் விட்டான் கிழங்குச் சூரணம், a medicinal powder made of water-root and prescribed for sore-throat.

சதானகம், இடு காடு, burial ground; 2. சுடு காடு, cremation ground.

சதானபம், see சதாநபம்.

சதானம், பருத்தி, cotton-tree—Gossypium herbaceum.

சதி, சோறு, boiled rice; 2. உடன் கட்டை ஏறல், self-immolation of a widow;

ascending a funeral pyre ; 3. கற்புடையாட்டி, chaste woman.

சதி கொலை, படு கொலை, deliberate murder.

சதி செய்தல், தீங் கிழைக்க சூழ்ச்சி செய்தல், surprisingly lying in wait; designing or plaining to do harm to a life.

சதிச் சாரம், சோற் றுப்பு, common salt.

சதி நாகம், மூங்கி லரிசி, bamboo sago—Bambusa arundinacea (Seed of).

சதிரக் கள்ளி, see சதுரக் கள்ளி.

சதிரம், ஓர் கக்கரி, a kind of cucumber; 2. உடம்பு, body.

சதிரவம், see சதிரம்.

சதிரா கூவி, ஆவாரை, tanner's cassia — Cassia auriculata.

சதிராசா, பார்ப்பை அல்லது பரம்பை மரம், suma tree—Prosopis spicigera.

சதிரி, செம்பை, sesbane—Sesbania aegyptiaca.

சதிரேசம், கார்போக வரிசி, psoralea seed—Psoralea corlifolia.

சதிலகா, ஆவாரை, see சதிரா கூவி.

சதீலகி, மூங்கில் see, சதீலம்.

சதீலம், காற்று, wind ; 2. மூங்கில், bamboo.

சதீலிகி, முள்ளுக் கததிரி, prickly brinjal—Solanum xanthocarpum.

சதீனகம், பயறு, pulse ; 2. மொச்சை, Indian bean—Dolichos genus ; 3. see சதிரா கூவி.

சதீனம், see சதீனகம.

சதுக மரம், இது உடம்பை இறுகச் செய்து பலததை யுண்டாக்கும் ஓர் காய சித்தி மூலிகை, an unknown tree which is said to invigorate the system. It is a rejuvenating drug.

சதுகம், பெருங் காயம, asafoetida ; 2. மண்டை யெலும்பின் அடி பாகம, the bottom portion of the skull; the bone forming the base of the skull—Sphenoid bone; 3 கடுக் காய், gall-nut—Terminalia chebula.

சதுக வெலும்பு, கபாலத்தி னடியில பூனைக் கிருந்து, கபாலத்தி லுள்ள எலலா எலும்பு களுடனும் பொருந்தி அவைகள் உறுதிப்பட இணையுறும் எலும்பு. இது இறகைகை விரித்த வெளவாலைப போ லிருக்கும், a bone forming the base of the skull and resembling a wedge (bat-wing shaped) — Sphenoid bone. It locks together most of the other bones in the skull and keep them firm. See சதுகம.

சதுகளவி, திருகு கள்ளியின் புல்லுருவி, a parasite grown on twisted spurge—Euphorbia tirucalli.

சதுகாசி, see சதுக மரம.

சது காயம், பெருங் காயம், asafoetida.

சது காரம், see சதுக மரம்.

சதுக்கினி, இசங்கு, four-spined monetia—Azema tetracantha.

சதுங்கம், பறவை, a bird.

சதுச்சகம், சந்தனம், அகரு, கஸ்தூரி மஞ்சள், கஸ்தூரி இவைகள் சேர்ந்த குழம்பு, an unguent of four ingredients viz.—sandal, agallochum, musk turmeric and musk.

சதுட்டம், வால் மிளகு, tail-pepper — Piper cubeba.

சதுட் பாதம், நாற்கா லுள்ளது, quadrupeds ; four-legged animal ; 2. நாய, dog.

சது தாரம், சுவாதிட்டானம், one of the six mystic centres of the human body in the genital region. See சக்கரம்.

சதுப்பு நிலம், சேறு நிலம், marshy land ; swampy soil ; 2. புல் வெளி, grassy plot or tract—Moor.

சதுமணி நோய், மச்சையைப் போக்கும் ஓர் எலும்பு ரோகம், a disease of the bone depriving the marrow See மச்சை.

சதும்பை, பேய் மருட்டி, devil frightener—Anisomeles malabarica.

சதுரகக் கள்ளி, see சதுரக் கள்ளி

சதுர கிரி, இது கொல்லி மலையின தொடர்ச்சி, சேலத்தி லிருந்து மதுரை ஜில்லா வரையுள் ளது. இதில சித்தர்கள் வசிப்பதாகச் சொல் லப படும். அனேக அபூர்வ மூலிகைகளும் உண்டு, it is a mountain or hill range extending from Salem to Madura, which is said to be frequented by Siddhars and to be the seat of many rare drugs.

சதுரக் கள்ளி, சதுர்முக வேதி யெனனும் ஓர் வகைக் கள்ளி. அடிமரம் கணுக்கள் வாய்ந் தது, நேராகவும் நான்கு மூலைகளாகவு முள் ளது. இம மூலைகளில் முள்ளுகள் வாய்ந்த

புடைய புண்டு. காம்புகளில் மூன்று பூக்க ளிருக்கும். பூக்கள் பச்சை நிறங் கலந்த மஞ்சள், அடிமரத்தி லிருந்து உறைப்புள்ள பால் வடியும். இது காடுகளிலும் மைதான முதலிய வெளிகளிலும் முளைக்கும். கொல்லி மலையில் விசேஷம்.

பொதுவாகவே, இதற்கு கரப்பான், நமைச்சல், காணுக்கடி, கப நோய், வாத குன்மம் இவைகளை பேதி மூலியமாய் நீக்கும் குணமுண்டு. இதன் வேர்ப் பட்டைக்கு விரேசன குணமுண்டு கிளைகளில் வடியும் பாலை நல்லெண்ணெயில் கொதிக்க வைத்து வாதப் பிடிப்பு, பல்வலி, சூலைநோய் முதலியவை நோய்களுக்கு மேற்பூச்சு மருந்தாக உபயோகப் படும். இதன் வேருடன் பெருங்காயம் சேர்த்து வயிற்றுக் கிருமியினால் வருந்தும் குழந்தைகளுக்கு வயிற்றின் மேல் பூசலாம். இதன் பாலுடன் எண்ணெய் கலந்து மலக் கட்டுக்காக உள்ளுக்குக் கொடுக்க பேதியாகும். அன்றியும், இப் பாலினால், குட்டம், காணுக்கடி, சூலை, வாதப் பிரமேகம், வாதாதிக்கம், கிருமி விரணம், இவைகள் போம். இதற்கு உறைப்பும், மயக்கம், பேதி, வாந்தியையும், உண்டாக்குந் தன்மை யுடையதால் மிகச் சாக்கிரதையோடு உபயோகப் படுத்த வேண்டும். அடிமரத்தின் பட்டையைக் கஷாயமிட்டு சூலை நோய்க்குக் கொடுக்கப் படும். அன்றியும், நரம்புநோய், பாண்டு, பாரிச வாய்வு, செவிடு, கண்குருடு, முதலிய நோய்களுக்கும் உபயோகப் படும். பாலும் இதின் பிசினும் எண்ணெயிற் கலந்து கண்டமாலை, கிரந்தி, தீரா விரணம், முதலிய நோய்களுக்கு மேற் பூசலாம். சூலைக் கட்டு, வாத வீக்கம், யானைக் கால், கீல் வீக்கம், இவைகளுக்குக் கள்ளிப் பாலை மேலே தடவி, வேரின் மண்ணை எடுத்து அதன்மேல் தூவுவ துண்டு. இதன் பட்டை நரம்பு சிலந்திக்கு வைத்து கட்டலாம். உறைந்தபாலை உள்ளுக்குக் கொடுக்க மேகரோகங்கள் நீங்கும்; இதன் விதை பாஷாணத்தைக் கட்டுவதாகக் கருதப்படும், square spurge ; ancient spurge—Euphorbia antiquorum. Its stem jointed, erect, four-angled; angles furnished with protuberances of two short spines; peduncles usually with three flowers; flowers greenish yellow. It is very common in forests and tract of waste land especially in the mountain or hill ranges of 'Kollimalai' extending from Salem (Eastern ghauts).

Generally, it has the virtue of curing by purgation, carpaung (skin eruptions) in children, irritation, venomous bites of small creatures, phlegmatic diseases, dyspeptic trouble from indigestion etc.

The milk of this plant is useful in cases of leprosy, small venomous bites, all kinds of rheumatic complaints, wounds infested with worms, etc.

The bark of the root is a purgative; juice from the branches used in rheumatism and in toothache; when diluted with gingelly oil and boiled, it is an external application. Plaster, prepared from roots and mixed with asafoetida, is applied externally to the stomachs of children suffering from worms. When diluted with oil, it is given in obstinate constipation. The juice has acrid, narcotic, drastic and emetic properties, and so, it must be used with great care and caution. Decoction of stem-bark is given for gout, and it is also prescribed in nervous affections, dropsy, palsy, deafness and total blindness. The gum resin boiled in oil, forms an effective external application in scrofulous and other deep-rooted or chronic ulcers. The fresh milky juice is applied externally and the mud surrounding the root is sprinkled over the coating to effect a cure in cases of rheumatic affections, Cochin leg, arthritis etc. The bark is a useful application in cases of guniea-worm. The inspissated juice is also prescribed for venereal diseases. The seed is efficacious in consolidating chemical poison as is generally supposed.

NOTE.—This should not confounded with திருகு கள்ளி twisted spurge (Euphorbia tirucalli) which is quite a different variety although, by some writers, the same botanical name (E. artiquorum which is four-cornered) is given to both the kinds. It is not a triangular spurge, but evidently it is quadrangular in form. The term 'Sadhur' itself denotes four sides. All the preparations from this plant should be made with great care and caution Siddhars speak very highly of the milk of this plant. The milk plant is also applied to rat, dog and cat-bites.

NOTE.—2. The fresh milk juice, of this plant when mixed with cantharides, forms a plaster which is chiefly used in gout. The stem is warmed and applied as an external covering to whitlows just like lime fruit, to favour the discharge of pus and other matter.

சதுரக் கள்ளிப் புல்லுருவி, இதற்கே பணி கொண்ட பாலி, நீல மாகு சோதி யெனறும் பெயர். இது சரக்கெல்லாம் கட்டிக் கொல் லும். சூதம் மணி போலாகும். இலைதத தூளாய் இடிதது சீனி, மிளகு சேர்தது, வாழைப் பழததில் வைதது சாப்பிட ஈளை, இருமல், சயம் தீரும், a parasite on the plant—square spurge. It is known by several names as mentioned above. It consolidates all volatile substances and kill them. Mercury will be turned into a bead. The leaves powdered and mixed with China pepper and taken in a plantain fruit, is said to cure phlegm cough and consumption.

சதுரங்க புடம், see கஜ புடம்.

சதுரங்குலம், கொன்றை, common cassia—Cathartocarpus fistula alias Cassia fistula.

சதுரங் குளம், கொன்றை, a kind of cassia—Cathertocarpus fistula.

சதுரசம், ஏலம், இலவங்கம், நாகப் பூ, இலவங்கப் பட்டை இது நான்கும் சேர்ந்தது; இது நோயை குணப படுத்தும் ஓர் சிறந்த மருந்து, a composite of the four essential drugs viz, cardomon, cloves, Ceylon iron wood and cinnamon. It is a preparation having great curative power.

சதுர சாதம், see சதுரசம்; 2. சதுரசம் சேர்ந்த அன்னம், food cooked with four ingredients *C.f.* திரி சாதம்.

சதுர சுக்கிலம், வெள்ளை யாமணக்கு, Moghul castor oil plant—Jatropha curcas.

சதுரச் சாகன், தாமரை, lotus flower.

சதுரச் சாரம், ஆடா தோடை, தூதுவளை, கண்டங் கததிரி; திரிசங்கு, ஆகிய இந்த நான்கு மூலிகைகளின் சாறு, a composite of juices or essences of four drugs viz. Malabar winter cherry, three-lobed night shade, prickly night shade, and four-spined monetia; 2. உமரிச் சாரம், நவச் சாரம், சத்திச் சாரம், சங்கு சாரம், ஆகிய இந் நான்கு வகை உப்பும் சேர்ந்த கூட்டு, a mixture of four different kinds of salts viz: salt wort soda, (2) sal-ammoniac (3) a synthetic salt known as *Sathi* salt, (a salt manufactured from a mixture of nitre sal ammoniac, fullers earth and common salt) (4) chank salt.

சதுரத் தியாயம், see சதுர்ப் பாடம்.

சதுரப் பிரண்டை, நான் முகப் பிரண்டை. இதற்கே பொதுவாக பிரண்டை யென்றும் பெயர், square-stalked vine or adamant creeper—Vitex negundu.

சதுரப் புளி, தமரததை, square tamarind—Averrhoa carambola; Quadrangular tamarindus indica.

சதுர மாங் கள்ளி, see சதுரக் கள்ளி.

சதுரம், see சதுரக் கள்ளி; 2. நான்கு மூலையுள்ளது, square or quadrangle; 3. விவேகம், wisdom; 4. நான்கு மூலை யுள்ள ஓர் மீன், a square fish—Cyprinus rohita.

சதுர வேதி, see சதுரக் கள்ளி.

சதுராங்கம், see சதுச்சகம்.

சதுராமிலம், இலந்தை, புளியாரை, நெல்லி, மாதுளை ஆகிய நான்கு திரவியங்கள், the four drugs consisting of Ilandai, sour-sorrel, Indian gooseberry and promegranate.

சதுர், நான்கு, four; 2. வட்டம், round; 3. பாலை, milk-creeper—Dregea volubilis; 4. முன்னை, Indian head ache tree—Premna integrifolia.

சதுர் காளி, see சதுர் கூவி.

சதுர்க் கதி, ஆமை, tortoise; turtle.

சதுர்க் கரணம், see அந்தக் கரணம்; 2. ஓர் காம லீலை, see சதுரப் பாதம்.

சதுர்க் கலவை, நான்கு சரக்குகள் சேர்ந்த கலப்பு, a composite of four substances or drugs—Quarternary compound.

சதுர்க் காலம், வருஷத்திய நான்கு காலப் பருவம், the four seasons of the year.

சதுர்க் கூவி, ஆவிரை, tanner's cassia—Cassia auriculata.

சதுர்ச் சாதகம், see சரசாதம்,

சதுர்ச் சாதம், see சதுர சாதம்.

சதுர்த்தகம், ஒவ்வொரு தடவையும் முறைப்படி நான்காவது நாள் வரும் சுரம், அதாவது நான்கா முறைக் காய்ச்சல். இது எலும்பையும் இதனுட் பசையையுந் தாக்குவதால் இந் நோய் மிக்க அபாயகரமானது. அனேகமாக மரணததை யுண்டாக்கக் கூடியது, a kind of fever appearing or recurring once in four days—Quartan fever. It affects the bones and is infiltrated into the marrow. It is of a very dangerous type, often ending in death.

சதுர்த் தசம், பதினான்கு, (4 + 10) or fourteen.

சதுர்த் தச வேகம், உடம்பி லுள்ள பசி, தாகம், மல, சலம், முதலிய பதினான்கு வேகம், the fourteen impetuosities or natural urgings of the human system such as, hunger, thirst, feces, urine etc.

சதுர்த்தயம், வேம்பாடம் பட்டை அல்லது சுருள் பட்டை, red-creeper — Ventilago madraspatana.

சதுர்த் தளம், ஆரைக் கீரை. See சதாரை.

சதுர்த்தி, போர மல்லி, long-tubed Arabian jasmine—Jasminum sambac(heyneana).

சதுர்த்திக சுரம், சதுர்த்தகம், which see.

சதுர்த்திகை, கால் பலம், ¼ palam weight.

சதுர் பத்திரகம், சுக்கு, நாபி, கோரைக் கிழங்கு, சீந்தில் ஆகிய நான்கு சரக்குகள். அவர்ப்புச் சக்தியால் இவை சீரண சக்தியை வலுக்கச் செய்யும், the four drugs viz:—dry ginger, aconite, sedge grass root, moon-creeper, which act as astringents and increase the digestive fire.

சதுர்ப் பரணி, புளி யாரை, sour - sorrel—Oxalis pusilla.

சதுர்ப் பலம், நான்கு பல மிடை, weight of four palams.

சதுர்ப்பாக மாக்கல், நான்கு பாகமாகப் பிரித்தல், to divide into four parts ; 2. நாலில் ஒன்றாய்க் காய்ச்சல், (உ-ம்) கஷாயம், to boil down to a fourth quantity (4 : 1) as decoction.

சதுர்ப் பாகம், நான்கு பாகம், four parts ; 2. நாலி லொன்று, one-fourth.

சதுர்ப் பாடம், நான்கு பிரிவுள்ள வைத்திய நூலைப் பற்றிச் சொல்லும் நூல், a treatise dealing with the four parts of Medical science.

சதுர்ப் பாதம், ஓர்வித காம லீலை அதாவது பசுகரணம், (*In Sexology*) a kind of sexual intercourse of men like animals called 'Pasukaranam'; 2. நாற்கால் பிராணி, a quadruped.

சதுர்ப் புடம், சதுர்ப் புடம் ; நான்கு புடம், calcination of medicine effected four times ; 2. சதுரமான குழியில் போடும் புடம், calcination performed in a quadrangular pit.

சதுர்ப் பேதி, see சதுர் வேதி.

சதுர் மண்டலம், சூரிய மண்டலம், sun's orbit.

சதுர் மித்திரம், நான்கு வகை மித்திரம், அவை யாவன :—சாரம், வெண்ணெய், இந்துப்பு, மெழுகு, the four kinds of allied drugs or substances viz :—sal ammoniac, butter, rock-salt and wax.

சதுர்முக பற்பம், காரீயம், தாம்பிரம், நாகம், வங்கம் ஆகிய விந் நான்கு உலோகங்களைக் கொண்டு, இராம தேவர் முறைப்படி செய்து முடித்த பற்பம், a calcined oxide prepared from a mixture of black lead, copper, zinc and lead according to the process of Rama Devar.

சதுர் முக வேதி, செப்பு சதுரக் கள்ளி, a red variety of square-spurge. It is so called from its use in Alchemy.

சதுர் மூலி, பருத்தி, herbaceous cotton.

சதுர் வாய், நான்கு முகம், four-faced.

சதுர் வாய்ப் பொருமல், வயிற்றுப் பொருமல், rumbling noise of the stomach.

சதுர் வேதி, வாத முறையில் நானகி லொன்றிடப் பழுத்தல், (*In Alchemy*) transmutation effected by a proportion of 4 : 1.

NOTE.— In transmutation of inferior melats into gold, the proportion varies according to the ingrediants and processes described in the works of several Siddhars each following his own way

சதுவல், சதுப்பு நிலம், swampy soil.

சதுவற் பயன், சதுப்பு நிலத்தில், விளையும் தாழை, a kind of pine growing in swampy soil ; swamp pine—Pinus palustris ; 2. மடல், swamp pine apple—Pandamus.

சதனி, வெளவால், bat.

சதாகை, see இரண்டு ; 2. see கச்சோலம் ; 3. வெளவால், bat.

சதுஷணம், உஷ்ண முள்ள நான்கு வித வாசனைத் திரவியங்கள் :—மிளகு, திப்பிலி, இஞ்சி, திப்பிலிமூலம், the four hot spices viz., black pepper and long pepper, ginger and root of long pepper.

சதூ தலம், ஆரைக் கீரை, a kind of four-leaved marseila—Marseila quadrifolia.

சதேக முக்தர், இம்மையிலேயே அதாவது இப்பிறப்பிலேயே இறக்காததற்கு முன்னம் ஆத்ம ஞானத்தை யடைந்து உலக பாசத்தினின்று விலகியவர்கள், that type of a

person who has attained liberation of Soul, having been restored from the influence of worldly Maya or bondage.

NOTE.— Such types of men of liberated or or emancipated souls (சீவன் முக்தர்கள்) of two classes viz —A class who are really lost to the world and centered in the bliss of awakening existence. They are mostly indifferent to all concerns of life and hidden in the mood of thought of *Atman* The other class of men are those actuated by a universal sympathy and they have a natural bent of mind to be helpful to others and so they have no selfish desire, but always endowed with a cosmic sense to do good to others. They live for others and love others for, in them they find the identity of Being

In this way they go on working and moving freely untill the occasion arises when they enter the Deep and forsake the flesh and the acquired personality. (Sircar) *C f.* விதேக முக்தர்.

சதேக முத்தி, சீவன்முத்தி, emancipation of the soul ; 2. இறக்கு முன்னதாகவே, பிறவிக்குக் காரணமான பாசத்தி னின்று விலகல், (*In Agama Philosophy*), that state of the soul which is freed from the illusive power, thus ensuring the prevention of future birth before the death of the body.

சதேகரு, இலவங்கப் பட்டை, cinnamon — Cinnamomum Zeylanicum.

சதேகை, இம்மையிலேயே சீவன் முத்தி நிலையில் நிற்றல், the state or condition preparatory to emancipation of the soul in the present birth itself.

சதை, தசை, flesh ; பாலை மரம், iron-wood-tree—Mimusops hexandus ; 3. முனை, see சதிர் ; 4. பழச்சதை, the fleshy portion of a fruit; 5. சதைப் பற்று, any fleshy portion.

சதை குலுக்கம், உடம்பின் சதை நடுக்கம், violent agitation of muscles ; trembling or tremor of the body.

சதைக் காண்டி, சதையை அரிக்கும் பூடு, a plant that corrodes the skin ; 2. சதையை அரிக்கும் புழு, a worm or bascillae corroding the skin; 3. விரண வைத்தியத்தில் அழுகிய அல்லது கெட்ட சதையை சுரண்டி யெடுக்க உபயோகிக்கும் கருவி, (*In Anatomy*), a spoon-like instrument used for scraping the rotten or morbid flesh in a cavity—Scoop.

சதைக் கல் லடைப்பு, கல் லடைப்பு நோய், stone in the urethra, stranguary ; 2. சதை யடைப்பு, the contracted state of a tube or duct in the body, as in urinary passage— Stricture.

சதைக் கழலை, மாமிச மொத்தை, a swelling or enlargement caused by morbid growth of a tissue—Tumour ; 2. மாமிசத் திரளுள்ள கட்டியை இமையில் உண்டாக்கு மோர் கண்ணோய், a disease of the eye marked by a fleshy growth or tumour occuring on the eye of the eyelid—Stye, see கண் கட்டி 3. தசையா லுண்டான கழலைக் கட்டி, muscular tumour—Myoma ; 4. பொய்க் கருப்பம், an imaginary tumour produced by a peculiar action in the abdomen simulating pregnancy; Muscular tumour — Phantom tumour ; 5. விதையி லுண்டாகும் கழலை, a fleshy tumour of the testicle —Sarcocele ; 6. சதைப் பற்றுள்ள ரணக் கழலை, a tumour of malignant character—Sarcoma.

சதைக் கழித்தல், உடம்பி லுள்ள அதி மாமிசத்தை கத்தியால் வெட்டி யெடுத்தல், chopping or pulling off the morbid flesh from the body ; 2. அன் மாமிசத்தை நீக்குதல், (*In Surgery*) to remove or get rid of the overgrowth of flesh ; to pull off the flesh ; 3. உடம்பின் ஒரு பாகத்து சதையை மற்றொரு பாகத்திற்கு வைத்து ஒட்டுவதற்காக் கத்தி கொண்டு அறுத்தெடுத்தல், removing the flesh of one one part of the body for purposes of grafting ; 4. எலும்பில் ஒட்டியுள்ள சதையை நீக்குதல், removal of the flesh sticking to the bones.

சதைக் கழிப்பு, see சதைக் கழித்தல்.

சதைக் கன்றுதல், சதையில் இரத்தங் கட்டுவதால் கன்றிப் போகுதல், contusion of the skin as by blow.

சதைக் குந்தம், கரு விழியைப் பற்றும் சதை வளர்த்தி. இதனால் கண் பார்வை முழுவதுங் கெடும், a disease of the pupil of the eye marked by a morbid or an over growth of flesh ; a muscular protrusion in the cornea of the eye in which the complete blindness of the vision is distinct—Amaurosis.

சதைக் குமிழம், பெண்களின் அல்குலில் உள்ள 1. சளி சவ்வில மேடிட்ட அனேக சிசப்பு கொப

புளங்களை எழுப்பு மோர் வகை மேக நோய், a kind of venereal disease in women in which will be formed many small red boils on the surface of the mucous membrane of the vagina.

சதைக் குமிளம, வெள விழியில் கறுதத கொப் புளததை எழுபபு மோர் கண்ணோய், a disease of the eye characterised by the appearance of a black boil on the white or the sclerotic portion of the eye.

சதைக் குவை, கடைக் கண்ணில கருப்பு குன்றி மணியைப போல சதையை வளர்ப்பிதது அன்புறுதது மோர் கண்ணோய், a disease developing black or dark tubercle on the corner of the eye; 2. சதை வளர்ந்த ஓர் வெள் விழி ரோகம், a disease of the white of the eye marked by a morbid growth of flesh.

சதைக்குள் தோஷம், உடம்பின் சருமததைப பற்றிய தோஷம், a constitutional dis. position or diathesis relating to skin diseases; morbid affections of the skin.

சதைக் கெந்தம், வெண் கடுகு, white mustard —Brassica alba; 2. செம்பு, copper; 3. வசம்பு, sweet flag—Acorus calamus.

சதைக்கேடு, சதை சீர் கெடல, muscular atrophy.

சதைக் கொட்டுவான், அட்டை, leech; 2. தேள், scorpion.

சதைக் கொழுப்பு, உடம்பில் சதையை யடுதத கொழுபபு அல்லது திணம், the fat surrounding or sticking to the muscles or the flesh; 2. உடம்புச் சதை கொழுதத பாகம், the fatty muscular portion of the body; 3 கொழுத திருக்கை, corpulency.

சதைச் சுவர், விதானம், உடம்பின் இரண்டு அறைகளையும் சுவரைபபோல் பிரிததலா லிப பெயர், diaphragm, which is so called of its separating the chest from the abdomen like a wall,

சதைதல், see சதைத்தல்

சதைத்தல், துணிததல், to cut into pieces, 2. நெரிததல், to crush; 3. சதை பற்றுதல், growing in flesh, to put on flesh; புஷ்டியாதல், body growing in bulk.

சதைத் திப்பி, சுதது நீங்கிய சதை, dead muscle—Myosin.

சதைத் திரம், மாங்கிஷச் சிலை, a kind of mineral stone capable of dissolving flesh.

சதை நார், தசை நார், muscular fibre.

சதை நிறம், மாங்கிஷ பேதி, a mineral stone resembling the colour of the flesh.

சதை நீர், சதையின திப்பி நீங்கிய திரவம், a muscle plasma deprived of its myosin—Muscle serum.

சதை பருத்த புண், சதைவளர்ந்த புண், morbid growth of flesh in a sore.

சதை பிடித்தல், இளைதத உடம்பில மறுபடி தசை யுண்டாதல், a renewal of the loss of flesh after recovery; to put on flesh.

சதை பிடுங்கல், தசையைக் கருவி கொண்டு களைதல், tearing the flesh with an instrument.

சதை புஷ்டி, சதையோடு கூடிய கொழுப்பு, fat clinging or adhering closely to the flesh; 2. சதைப் பருமன, corpulence or fleshiness of the body; bodily bulk.

சதை புரளல், சுளுக் கேறல, to be sprained; to overstrain as the muscles.

சதைப் படர்த்தி, இமைக் குட்புறததில் வெள் விழி பாகததில் மிருதுவான தசையை தடிக் கச் செய்யுமோர கண்ணோய், an eye-disease in which the mucous membrane which covers the conjuctiva and turns back over the inner surface of the eyelids is thickened; the thickened state of the conjuctiva—Pterygium.

சதைப் படலம், கருவிழியின் மேற் றோலில் சிவந்த சதையை வளாபபிததும், குததலை யும் நோவையும் உண்டாககு மோர் கண் ணோய், vascularity of the cornea in which its membrane-like covering presents the appearance of a dense pellicle. It is marked by pin-prick pain — Pannus, 2. கண்ணில் விழும் ஓர் வகைப் பூ. இது இமைக்குள் பொடிச் சதையை வளாபபித்து கண் பார்வையை மறைக்கும், a tract in the eye causing opacity of the cornea arising from the granulation of the eyelids—Granular conjuctivities; 3. வெள் விழி பாகததில் இமைககுள்ளாக சதை படர் ந்து அதனால இரபபை சுருஙகி, அவலட்ச ணமாகக் காணபபடும, the thickened conjunctive of the lids attended by atrophy and deformity of the eye-lids — Trachoma.

சதைப் பதுமம், இமைக்குள் தளதள வென தாமரையைப் போன்ற தின் மாமிசத்தை வளர்ப்பிக்கும் கண்ணோய், a disease of the eye attended with the formation of rounded skin tubercles containing semi-fluid matter on the inner surface of the eyelids—Mulluscum conjunctivitis.

சதைப் பற்று, வெள் விழியில் இரத்தததினால் சிவந்த சதையை வளர்ப்பிக்குமோர் கண்ணோய், red thickened membrane of the sclerotic coat of the eye due to in flammation; 2. சதை பாகம், the fleshy portion; muscle; 3. பழததி னுட் சதை, the pulpy portion inside a fruit.

சதைப் பிடித்தல், வலி நீங்க அல்லது சொஸ்த முண்டாக்க உடம்பின் சதையை கையால் அழுததிப் பிடிதது அமுக்குதல், the process of pressing and rubbing the parts of a person's body to bring relief or to effect to cure—Massage.

சதைப் பிடுங்கல், சதையைக் கிழிதது வாங்கல், tearing or lacerating the flesh.

சதைப் புஷ்டி, தடிப்பு, seeing the body full in flesh; stoutness of the body.

சதைப் புரட்சி, sprain, a violent strain of muscles.

சதைப் புரளல், சுளுக் கேறுதல், to get sprained due to an excessive exertion.

சதைப் புற்று, வெள்விழி யழற்சி, 'inflammation of the cornea of the eye; see சதைப் பற்று; 2. சதையில் காணும் புற்று ரோகம், a malignant growth or tumour in the body—Cancer; 3. வெள் விழியில் சிவந்த சதையை வளர்ப்பிக்கு மோர் கண்ணோய், reddish growth on the sclerotic coat of the eye.

சதைப் பொருத்தி, see சதை யொட்டி.

சதை மலடு, பெண்களுக்கு கருப் பையில் சதை வளர்ந்து, அதினாலுடமபு புண் போல் நொந்து, மயக்கததை யுண்டாக்கு மோர் நோய் (திருமூ. 600). a disease of the womb arising from the thickened state of peritoneal coat. It is marked by pain and giddiness.

சதை முள்ளிகா, see சதை முள்ளிப் பூடு.

சதை முள்ளிப் பூடு, யானை நெருஞ்சில், crow-thorn—Pedalium murex.

சதை மூடி சவ்வு, சருமத்தின் வெளி பாகத்தில் கவிந் திருக்கும் தோல் உறை, the outer covering of the skin—Scarf-skin; 2. பீத தோல், the epidermis.

சதை மூர்க்கம், காம விச்சை, lustiness; lasciviousness; 2. see சதைக கொழுப்பு.

சதை யடைப்பன், மாட்டுக்குவரும் அடைப்பன் நோய், a kind of anthrax in cattle.

சதை யடைப்பு, பிரமேகததினால் நீர்த்தாரையில் ஏற்படும் தடிப்பு, stricture of the urethra.

சதை யண்டம், see சதையண்டரோகம்.

சதை யண்டரோகம், பீடுக்கின் தோல் பருத்தல், elephantiasis of the scrotum.

சதை யழுகா மருந்து, சதை கெடாது தடுக்கு மருந்து, substances which resist or correct putrefaction in the flesh of the system—Antiseptics.

சதையழி புண், தசை யழுகிய நாற்றப் புண், a gangrenous sore—Carious ulcer.

சதை யழுகல், தசை யழிதல், disintegration or decay of flesh—Ssrcolysis.

சதை யழுகி, சதையை அழுகச் செய்வது, that which causes putrefaction—Septic.

சதை யழுகி விஷம், சதை அழுகியதா லேற்பட்ட விஷம், septic poison.

சதை யிழுப்பு, தசை யிழுததபடி வலித்தல், twitching of the muscles; 2. குறக்கு வலி, cramp.

சதை யுருக்கி, சதையை மெலியச் செய்வது that which causes to lose flesh gradually; 2. சதை யுருக்கி நோய், wasting disease.

சதை யெழுச்சி, கொப்புளம், boil; blister.

சதை யொட்டி, ஓர் நீர்ப்பூடு, an acquatic plant; 2. துணுக்குண்ட சதையை அதாவது வெட்டு காயத்தைப் பொருந்த வைக்கு மோர் மூலிகை. இதுவே கோடக சாலை, drug capable of uniting the cut ends of the flesh; flesh-joiner—Justicia procumbem. See தசை யொட்டி யிலே.

சதை வலி, உடம்பின் சதை பாகததி லேற்படும் வாதப் பிடிப்பு, muscular rhematism attended with pain—Myalgia; 2. குரக்கு வலி, pain due to contraction of the muscles—Cramp.

சமாதி நிலை, தன்னையும் சுற்றினு முள்ளதை யும் மறந்திருக்கும் ஓர் உயர்ந்த நிலைமை, a superior spiritual and transcendental stage at which one forgets himself and all his surroundings.

சமாதி பண்ணுதல், சமாதி யிருததல், to enter into Samadhi i.e., the state of supreme unitary consciousness ; 2. மனம் ஒருமைப் பட யோகாப் பியாசம் செய்தல், to sit at Yoga practice for the seekieg of union by intellect ; 3. புதைததல், to bury.

சமாதி புகுதல், தன்னை மறந்து யோக நிலையில் இருக்க வேண்டி சமாதி யறை யுட் புகுதல், to enter into a Samadhi cellar or vault built for the purpose of attaining trance while in silent contemplation.

சமாதி பெறுதல், யோகாப்பி யாசத்தில் சமாதி யடைய வேண்டி குருவி னிடம் பெறும் தீட்சை, initiation obtained from a spiritual guru for purposes of attaining Samadhi in Yoga practice.

NOTE.— When the mind of the disciple is sufficiently fertilised by faith, the Teacher plants the seed of Spirituality in his mind. This instruction is called Upadesh (உபதேசம்) or Theetchai (தீட்சை). To get the blessings of a Spiritual Teacher or Guru is the most important requisite in the carrier of a disciple.

சமாதி பேதம், அறுவகை சமாதி, ths six kinds of Samadhis. See சமாதி ; 2. பொதுவாக இரு விதம், commonly it is divided into two varieties as mentioned above :—

1. சம்பிக சாதனம்—சுபாவததை வெல் லப் பழகுதல், practising to get all powers of controlling nature.
2. அசம்பிக சாதனம — மேலான வுணர்ச்சி பெறல், training oneself to attain perfect super-consciousness.

சமாதிப் போக்கு, சமாதி நிலையில் ஒருவனைக் கொண்டு போகும் துறை அல்லது பல வழிகள். நினைவையும், உணர்ச்சியையும் அறவே ஒழிததலினால்தான் சமாதி கை கூடும். ஆகவே, சமாதி யென்பது ஒருமை யுணர்ச்சியே ஒழிய வேறல்ல. இந் நிலைமை யில் சாதாரணமாக காயம் நெடுநாள் நீடித் திராது. ஏனெனில் ஆரம்ப முதல் உணர்ச்சி யற்று இருப்பதால் ஒன்றும் உட்கொள்ள முடியாது. வாயின் வழியாய் பால் புகட்டி னும் வழிந்து வெளிதான ஒழுகும். ஆகவே, இருபத்தோர் நாட்கள் கழிந்தபின் மரணத திற் கேது வாகும். அப்படி மரண முண்டாகாமல் சமாதி நிலைக்க வேண்டு மெனில் முன் னதாக காயத்தை சித்தியாக்க வேண்டும்.

சமாதி நிலைததுவிட்ட பின் தான் செய்த பூர்வ கர்மம் ஒழியும். நானென்பது அறவே நீங்கும, பிரமக்கியானம் உதய மாகும். அப் போது தான் தனக்கு இனி இறப்பு, பிறப் பென்பது இல்லை யென உணர்வான், the severai ways which the stage of Samadhi leads one into. It is only by the restraint of impressions or thoughts that Samadhi comes in, and so, it is only a concentration of mind. At this stage, the body generally does not last long as man remains unconscious throughout, he cannot eat anything and even if milk is poured into his mouth, it trickles down outside and so, he dies after twenty-one days. To prevent such an occurrence of death and to attain Samadhi, one ought to have rejuvenated the system.

Moreover, after attainment of Samadhi his karma drops away, ego is blotted out and supreme wisdom (பிரமக்கியானம்) is realised. The man will then realise that he has neither birth nor death.

சமாதி மான், தியான நிட்டை செய்வோன், one who enters into silent contemplation ; 2. யோகததில் தேர்ச்சி யடைந்தவன், an adept in Yoga practice.

சமாதி மூலி, கருங் குன்றி, black jeweller's bead—Abrus genus.

சமாதி யடைதல், தன்னை மறந்து யோகம் செய தல், Yoga practised to attain a superphysical state in which consciousness is functioning in the mental plane.

சமாதியில் வைத்தல், யோகிகள் உட்கார்ந்த படி நிட்டையிலிருக்கு முறையாய் பிணததை குழியில் வைததல், to bury the dead by keeping it in a pit in a Yogic sitting posture.

சமாதி யுப்பு, உடம்பி னுப்பு, salt taken or extracted from the human body ; 2. உடம்பு கெடாதபடிக்கு நீடித்திருக்க சமாதிக் குழியில் நிரப்பும் உப்பு, salt filled to a portion in the grave-pit just to prevent putrefaction ; 3. சவக் குழியினின்று சில காலஞ் சென்று எடுக்கும் உப்பு, salt dug out from a pit some years after the burial of a corpse ; 4. பிணததி லிருந்து

கிலநாள கழிந்த பின் எடுக்கும் பூர்தத உப்பு, a medicinal salt found deposited on the corpse interred and this is scraped out or gathered up after some time.

சமாதி யெரு, வயிததிய முப்பு, a quintessence salt used in medicine, perhaps referring to சமாதி யுப்பு.

சமாதி விட் டகலல், உணர்ச்சி திரும்பிய பின் பல நினைவுகள் ஏற்படுவதினால் சமாதி நிலையி னின்று வெளிப படுதல், to get out from the state of Samadhi, being disturbed by all kinds of thoughts after the return of consciousness.

சமாதி விட்டுக் கலைதல், see சமாதி விட் டகலல; 2. சில காலம் பொருத்து நிட்டையி னின்று வெளி வரல், to come away from Samadhi after the restoration of physical consciousness, which may prevail sometime after.

சமாதி வைத்தல், பிரேத மடக்கல் அதாவது பிணததைப் புதைததல், to bury the dead ; 2. எதையாவது சிலகாலம் புதைத்து வைததல், to keep anything buried for some time.

சமாது, ஊமததை, datura — Datura fastuosa ; 2. see கருமததை ; 3. see சமாதிக் குழி.

சமாலி, சடைக் குறண்டி, a kind of thorny shrub—Lepidagathis scariosa.

சமாலுகம், பெருங் குறிஞ்சா, see சகடம்.

சமாலு காரிகம், வறட் பூலா, white honey plant—Securinega leucopyrus.

சமாலுகிகம், see சமாலுகம்.

சமா லேபனம், சாணததால் மெழுகுதல், cleaning with cow-dung.

சமா லோங்கம், ஈருவல்லி மரம், an unidentified tree ?

சமால் கொட்டை, சேர்வாள விதை, croton seed—Croton tigilium.

சமான கரணி, see சமணிய கரணி.

சமானதா, நரி முருக்கு, devil coral tree — Erythrina ovalifolia

சமான வாயு, நாபிக்குக் கீழாக விருக்கும் உறுப்புகளின் வேலைகளை காரண கர்ததாவாக நின்று சரிவர நடததிக் கொண்டு வரும் ஓர் வாயு. இது தச வாயுக்களில் ஒனறு. இது கந்தரக் குழியின சந்திடை நிறகும்; உடம்பிற்கு நடுவே சமாக்கினி யண்டை இருந்து கொண்டு, உண்ட வுணவை விபாகப் படுததியும், இரததமாக மாற்றியும் வைக்கும். அன்றியும் கொட்டாவி, விக்கல், வியர்வை முதலியவைகளுக்கு இதுவே காரணமாகும், one of the ten vital airs operating on the internal organs below the navel region and as such, it take its seat in the digestive organs of the abdominal cavity and helps chiefly assimilation, transformation into blood and other changes in the chief constituents of the body, thus spreading out energy throughout the sytem. It is also supposed to be responsible for yawning, hiccough perspiration etc.

NOTE—It courses in or governs the stomach and in the region of intestines (பக்குவாசயம்). Its function consists in digesting the chyme brought down into the intestines in unison with digestive ferment (அக்கினி) and especially in disintegrating its essence from its refuse or excreted matter.

A deranged or aggravated condition of this Vayu causes dysentery, dyspepsia and other impaired indigestion etc. It is the same as the energy of the epigastric plexus

சமானன், see சமான வாயு.

சமி, வாழை மரம், plantain tree — Musa paradisiaca; 2. வன்னி மரம், Arjuna penance tree—Prosopis spicigera ; Acacia suma ; 3. தணக்கு; potter's tree—Gyrocarpus jacquini ; 4. சீரணி, to digest.

சமிக்கத் தக்க, சீரணமாகக் கூடிய, digestible.

சமிக்கும் சக்தி, செரிக்கும் சக்தி, digestive faculty.

சமிக்கை, உணவு சீர ணிக்கை, digestion of food ; 2. கண் சிமிட்டு, winking of the eyes.

சமி சுக்கிலம், வன்னி, see சமி.

சமிஞ்ஞை, ஆடு தின்னாப்பாளை, see சமனம் ; 2. தொட்டால் வாடி, a sensitive plant — Mimosa pudica.

சமிதம், நெருப்பு, fire,

சமிதா, வன்னி மரம், suma tree. See சமி.

சமிதி, } தாகம் புல், an unknown
சமிதி தாகம், } fragrant grass ?

சமித்தல், சீரணித்தல், to digest ; 2. பதனழிதல், becoming decomposed or putrified ; 3. வலி பொருததல், bearing pain.

சமித்திகா, கஞ்சா, Indian hemp — Cannabis sativus.

சமித்திர சுத்தி, ஆரல் மீன், see சமுத்திர சித்தி.

சமித்து, கஞ்சா, see சமித்திகா ; 2. கள்ளி விரகு, fuel of spurge ; spurgewood ; 3. சூடு நீர், pot water ; 4. ஒம விறகு, sacrificial fuel of nine trees or plants.

சமித்துப் போதல், சீரணித்துப் போதல், to be digested away as food.

சமிந்தனம், விறகு, fuel.

சமி பத்திரா, வறட் சுண்டி அல்லது ஆடு தின்னாப் பாளை, see சமனம்.

சமிப் பாகம், கொன்றை, Cassia genus ; 2. வேல மரம், acacia genus.

சமிப் பாடு, சீரணமாகுங் காலம், the period of digestion of food ; 2. சீரணிக்கை, the process of digestion.

சமிப்பு, சீரணிப்பு, digestion.

சமியாகம், see சமிப்பாகம்.

சமியாக் குணம், சீரணிக்காத தன்மை, incapability of or difficulty in digesting food.

சமியாதது, சீரணிக் காதது, that which is not digested.

சமியா திருத்தல், சீரணிக்கா திருத்தல், the state of remaining undigested ; 2. செமியாத் தன்மை, the condition of indigestion.

சமியாமை, அசீரணம், indigestion.

சமிரகம், உப் பறுகு, a species of Bermuda grass found grown in saline soils.

சமிரம், சிறு வன்னி, a small species of suma tree—Prosopis spicigera.

சமிலாகி, see சமிலாகிகம்.

சமிலாகிகம், திப்பிலி, long-pepper — Piper longum.

சமிலாதி, திப்பிலி வேர், root of long-pepper. See சமிலாகிகம்.

சமி வாசி, திப்பிலி, see சமிலாகிகம்.

சமி விருட்சம், வெண் கருங்காலி, egg-fruited ebony—Dyospyros oocarpa.

சமீப திருட்டி, ஓர் கண்ணோய். இதனால் அருகி லிருக்கும் வஸ்துக்கள் மாத்திரம் கண்ணுக்கு விளங்கப் புலப்படும், an affection of the eye in which only near objects are seen distinctly ; near sightedness or short-sight—Myopia.

NOTE.—It is explained as a defective eyesight due to too great refractive power of the eye, so that the rays coming from an object beyond a certain distance are focused in front of the retina.

சமீப திருட்டியான், அருகி லிருக்கும் வஸ்துவைப் பார்க்கக் கூடிய பார்வையுடைய வன், one who can see only objects near at hand—Myope.

சமீர கசகேசரி ரசம், புதிய அபினி, எட்டிக் கொட்டை, புதிய மிளகு இவைகளை சம எடையாகச் சூரணித்து, அதில் குன்றி யளவு தாம்பூலத்தில் கலந்து போட உதவும் ஆயுள் வேத சூரணம். கஞ்ச வாதம முதல சகல வாதம் வீக்கம், நடுக்கம், பேதி, அபஸ்மாரம் முதலியன போம், an Ayur Vedic powder consisting of the following ingredients viz :—fresh opium, nux vomica, black pepper, in equal weights. It is used in cases of affection of the sciatic nerve, tremor, diarrhoea, epilepsy etc. by mixing it while chewing betel nut.

சமீரணம், கிடாரங்காய் மரம், citron tree — Citron aurantium (bigaradia); 2. கொடிப் பாசி, moss creeper—Hydrilla verticillata.

சமீரணன், காற்று, wind.

சமீர பன்னக ரசம், ஆயுள் வேதப்படி, அபிரேக்கு பற்பம், கெந்தி, வசநாபி, திரிகடுகு, பாத ரசம், வெண் காரம் இவைகளைச் சம யிடையாக எடுத்து கரிசாலை சாறறி லரைத்து குன்றி யிடை கற்கண்டோடு சாப்பிட பற்பல வாத ரோகம் அப்பொழுதே குணப் படும், an Ayur Vedic medicinal pill prepared by taking calcined mica, sulphur, aconite, dry ginger, black pepper, long pepper, mercury and borax, in equal weights and grinding them with the juice of eclipse plant. It is said that a grain of this pill taken along with sugar-candy is a speedy cure in all cases of rheumatic complaints.

சமீரம், see சமீரணன்.

சமீலகம், மஞ்சட் கடுக்காய், fully-riped yellow gall-nut.

சமுகவளை, நை வேளை, vailay plant — Cleome pentaphylla.

சமுக்கா, தூரதிருஷ்டிக் கண்ணாடி, telescope ; 2. காந்தப் பெட்டி என்னும் திசை யறி கருவி, an instrument box with a suspended magnetic needle always point-

ing to the north by which the other cardinal points may be determined.

சமுக்காக் குழல், தூரதிருட்டிக் கண்ணாடி குழல், a tube in which the lens is fixed for viewing distinct objects.

சமுசார பந்தம், இல்லற வாழ்க்கையில் கட்டுப் படல், bondage of married life.

சமுசாரம், உலகப் பற்று, attachment towards worldly pleasures; 2. மனைவி, wife; 3. உலக வாழ்க்கை, mundane state; 4. இம்மைக் குரிய அல்லது லௌகிக நிலைமை, secular condition; 5. இல்லற வாழ்க்கை, domestic life.

சமுசார யோகி, வயிற்றுப் பிழைப்புக்காக வேண்டி, வாத முறையில் ஈடுபட்டு தானும் சீவனம் பண்ணி, வேறு பரதேசிகளுக்கும் அன்னமிட்டு, மற்ற வேளை முழுவதும் தேவியுட பூசையே வகுததவன், one who indulges in Alchemy not only for the purpose of his own livlihood but also for maintaining the other Sadhus, and then spending the rest of his days in the worship of Sakthy—the Universal energy.

NOTE — In Europe during the sixteenth century there were such kind of men called Rosycrucians — a sect supposed to have been founded by a monk called Rosen Kruez who was the leading exponent in Alchemy and Medicine. It is also said that they were the followers of Paracelsus who combined Medicine with Philosophy, Asronomy, Alchemy and especially Virtue, the most important of all that is difficult to understand, particularly the ways of Providence.

In Tamil Siddha Medicine, it will be found that Siddh rs also maintained that all medicines rested upon four pillars viz.— வாதம், வைத்தியம், யோகம், ஞானம், just in the same way as mentioned above. So, it gives room one to surmise if Paracelsus could have borrowed his ideas from the teachings of Siddhars several centuries old.

சமுசார வாழ்க்கை, இல்லற வாழ்க்கை, married life.

சமுசாரி, இல்வாழ் பெண், woman in married life; 2, கற்புடை யவள், chaste woman; 3 மலததிற் சிக்குண்டவன் அதாவது கர்மபந்த முடையவன்; (*In Moral Philosophy*), one subjected to actions of Karma being involved in the suffering in the present birth for the actions done in the previous birth.

சமுசோதனம், வாந்தியாலும், பேதியாலும், உடம்பைச் சுத்தி செய்யு மருந்து முறை, medication which purifies the system by simply vomiting and taking purgative.

சமுச் சரணம், பிள்ளைப் பிறப்பு, child-birth.

சமுதாய குணம், பொதுக் குணம், common quality; quality common to all: 2. பௌதிகக் குணம், chemical quality.

சமுதாய சோபை, உடம்பின் அங்கங்கள் தனித்தனியாக கருதாது ஒருங்கு கூடுதலால் தோன்றும் அழகு, beauty not considered in respect of each organ individually, but in due proportion of the several parts of a body or structure to each other thereby producing a pleasing whole—Symmetrical beauty.

சமுதை, கள்ளி விறகு, see சமித்து.

சமுத் திட்டம், ஆனைத் திப்பிலி, elephant pepper—Scindapsus officinalis.

சமுத்திர கந்தகம், சாதிக் காய், nutmeg — Myristica fragrans.

சமுத்திர கபம், கடல் நுரை, sea-forth engendered by submarine fire.

சமுத்திர குக்குலு, சீமை குக்குலு, African googal—Balsmodendron kataf.

சமுத்திர கோசம், } கடல் நுரை, see சமுத்திர கபம்.
சமுத்திர கோட்டம், }
சமுத்திர கோபம், }

சமுத்திரக் கடம்பு, வெண் கடம்பு; கொந்தள மரம்; சமுதத்திராப் பழம். இது ஓர் மரம். பட்டை சிகப்பு; இலைகள் இரு பக்கமும் வழ வழப்பு; பூ பெரியது; வெள்ளை யோடு கலந்த சிகப்பு நிறம் வாய்ந்தது; காய் முட்டைப் பருமன்; விதது ஒன்று; வைகாசியில் பூர்க்கும். வேர் கொய்னவைப் போல இருக்கும். சிறு கசப்பு, மலததை இளக்கும், குளிர்ச்சி. இக் காயைப் பொடித்து ஆக்கிராணப் பொடியாக உபயோகப் படுத்தலாம், sea-side Indian oak or white Indian oak —Barringtonia racemosa alias Eugenia racemosa. Tree with reddish bark; leaves smooth on both sides; flowers large, and white with a rosy tinge; fruit about the size of an egg, and one seeded; flowering in May. Root resembles chincona root, slightly bitter, aperient and cooling. Fruit powdered and used medicinally like snuff,

**சமுத்திரக் கல்லுப்பு**, கடலி னுள் பாறைகளில் உறைந் திருக்கும் கல் லுப்பு. இதை வெட்டி யெடுக்கப் படும். இதற்குப் பாறை யுப்பு என்றும் பெயர், rock salt found adhering to the surface of rocks at the bottom of the sea from where it is dug out.

**சமுத்திரக் காக்காய்**, கடல் காக்கை, sea-crow; fish snatcher — Laridae; or Xema Brunnicephala.

**சமுத்திரக் காக்கை**, கடல் நாரை, sea-swallow of the tern family. See சமுத்திரக் குக்குறு.

**சமுத்திரக் காற்று**, கடற் காற்று, sea-breeze.

**சமுத்திரக் குக்கில்**, சிந்து குக்கில். இது சிவப்பு நிறம் கொடுக்கும், foreign googal — Balsmodendron kataf alias Amyris kataf. It gives a gum-resin more reddish than myrrh.

**சமுத்திர சித்தி**, ஆரால் மீன், lamprey fish—Rynchobdella aculeata.

**சமுத்திர சுண்டி**, ஆரல், see சமுத்திர சித்தி; 2. கிளிஞ்சில், bi-valve shell; elephent creeper.

**சமுத்திர சுத்தி**, ஆரல் மீன். இதனால் அரோசிகம், நீரிழிவு, உதர வாயு போம், sea-lamprey. It is said to cure nausea, diabetes and flatulency See சமுத்திர சித்தி; 3. சமுத்திரப் பச்சை, Argyreia speciosa.

**சமுத்திர சோகி**, வட்டத் திருப்பி, Indian pareira—Cissampelos pareira; 2. சமுத்திராப் பழத்தின் விதை, seeds of Andaman Indian oak.

**சமுத்திர சோஷி**, see சமுத்திர சோகி.

**சமுத்திர சோஷி விதை**, வட்டத் திருப்பி விதை. இது கோழை, அரோசிகம், உதிர வாதம், அதிமூத்திரம் போம். உதர வாயுவைக் கண்டித்து வயிற்று வலியைப் போக்கும், சில சமயம் பெண்ணின் கருப்பத்தை யும் வெளியாக்கும். ஆகவே, வைத்தியர்கள் நோக்க மறிந்து உபயோகப் படுத்துதல் சாலச் சிறந்தது, the seed of Indian pareira — Barringtonia racemosa. It cures phlegm, nausea, nodose rheumatism and menstrual disorders as amennorrhoea, diabetes inspidus, flatulency, stomach ache etc. At times it may bring on abortion in females; and so, physicians should be discretional and careful while using it.

**சமுத்திரச் செடி**, சமுத்திராப் பழம். மரம் 30–50 அடி உயரம்; இலைகள் 15–7 அங்குலம்; தென் னிந்திய தோட்டங்களில் பயிராகும். பழம் 2–3 அங்குலப் பருமன். இலை பெரிது, மலர்ந்த பூக்களில் சிகப்பு காம்புகள், Indian bottle brush tree—Barringtonia speciosa alias Convolvulus speciosus, Tree 30–50 ft; leaves 15 by 7 inches; found in gardens of S. India; fruit by 2" by 3", large foliage, heads of blossoms with flowers of red filaments. Seeds mixed with bait inebriate fish.

**சமுத்திர தாமரம்**, மஞ்சள் அகில், yellow agilwood. See அகில்.

**சமுத்திர தோயம்**, முடக் கொத்தான், palsy curer — Cordiospermum halicacabum alias C. canescens,

**சமுத்திரத் தானம்**, கடல் முழுக்கு, sea-bath.

**சமுத்திரத் திரயம்**, see சமுத்திரா திரயம்.

**சமுத்திர நவநீகம்**, see சமுத்திர நவ நீதம்.

**சமுத்திர நவநீதம்**, ஒரு காலத்தில் கடலினின்று கடைந் தெடுத்த வெண்ணெய் யாகிய அமிர்தம், nectar or ambrosia supposed to have been derived once upon a time from the churning of the sea.

**சமுத்திர நாதம்**, முப்பு, (*In Alchemy*), quint. essence salt or the mystic three salts.

**சமுத்திர நீருப்பு**, கட லுப்பு, manufactured sea-salt, so called from its being derived from the sea-water by evaporation; 2. கறி யுப்பு, common salt used for curries or in culinary.

**சமுத்திர நீர்**, கடல் நீர். இதனால் கவிசை, பெருவியாதி, உடம்புக் குடைச்சல், இரத்த குன்மம், வாத குன்மம், சுரம், உதர வாதம், நீராமைக் கட்டி, பெரு வயிறு, பீலிக நோய் இவைகள் போம், sea-water. It is said to cure ascites, leprosy, bodily pain, uterine tumour, dyspepsia, fever, spleenic abscess, dropsy and other abdominal troubles.

**சமுத்திர நீலக் கல்**, நீலப் பவளம், acorus.

**சமுத்திரந்தம்**, see சமுத் திராந்தம்.

**சமுத்திர பேனம்**, கடல் நுரை, supposed to be the solidified form of sea-froth.

சமுத்திரப் பச்சை, சமுத்திரப் பாலை அல்லது கடற் பாலை, sea-green — Argyreia speciosa, see சமுத்திராப் பச்சை; 2. ஓர் வாசனைப் பூடு, a fragrant plant; 3. தமாலம அல்லது மலைப் பச்சை, hill green— Garcinia Xanthochymus.

சமுத்திரப் பழம். ஓர் கடல் மீன், a sea-fish.

சமுத்திரப்பாலாவி, கடம்பு மரம், cadamba tree. See சமுத்திரக் கடம்பு.

சமுத்திரப் பாலை, see சமுத்திரப் பச்சை, or சமுத்திர சோகி.

சமுத்திரப் புல்லாணி, கடற் பாலை, see சமுத்திராப் பழம்.

சமுத்திரப் பொட்ட பாகு, ஓர் மூலிகை, an unknown plant?

சமுத்திர மட்டப் பாரை, ஓர் வகை கடல மீன், a kind of sea-fish; mackeral—Caranix.

சமுத்திரம், கடல், sea, ocean; 2. see சமுத்திரக் கடம்பு; 3. முடக் கறுத்தான், palsy curer. See சமுத்திர தோயம்.

சமுத்திரம் புக்கல், கடல் புக்கல் அதாவது நோய் குணப் படல், seeking refuge into the sea, said of disappearance of a disease with no prospect of revival.

சமுத்திரயம், கடலினுண்டான பொருள், that which is borne by sea as chank, pearl, salt etc.; sea-borne articles.

சமுத்திரயானம், கடல் யாத்திரை, sea-voyage.

சமுத்திர யோகம், see கடற் பாலை

சமுத்திர லவணம், கடலுப்பு, sea-salt.

சமுத்திர வண்ணக்கல், see கருடப் பச்சை, 2. பச்சை படிகக் கல். இதற்கு ஆறு பட்டையுள்ளது, Beryl—Aqua marina. It is a mineral composed of silicate of Aluminia and glucina, crystalising in the hexagonal system, see படிகப் பச்சை; 3. ஓர் வகைக் கருங் கல, a kind of granite stone.

சமுத்திர வண்ணச் சிலை, see சமுத்திர வண்ணக் கல்,: 2. கோமேதகம், cinnoman stone—Sardonyx.

சமுத்திர வர்ணக கல், see சமுத்திர வண்ணச் சிலை.

சமுத்திர வுப்பு, கல் உப்பு, sea-salt (borne of the sea) as distinguished from கறியுப்பு, common salt (sun-dried sea-salt) also obtained from the sea-water; 2. பாறை யுப்பு, rock salt. See சமுத்திரக் கல் லுப்பு.

சமுத்திர வூதியம், கடல் நுரை, sea-froth.

சமுத்திரா, see சமுத்திராப் பழம்; 2. see குட்டி விளா; 3. முடக் கொததான், see சமுத்திர தோயம்; 4. சமுத்திராப் பழம், see சமுத்திரக் கடம்பு; 5. கடம்பு, cudamba tree—Barringtonia racemosa.

சமுத்திராச் செடி, see சமுத்திரப பச்சை.

சமுத்திரா தேவி புத்திரி, சோனகப் பூ, an unknown plant?

சமுத்திராத் தாழை, see கடற் றாழை.

சமுத்திராத் திரய, கடல் நுரை, sea-froth.

சமுத்தி ராந்தகம் பருததிச் செடி, see சமுத்திராந்தம்.

சமுத்திராந்தம், சாதிக்காய், nutmeg—Myristica fragrans; 2. சிறு காஞ்சொறி, small climbing nettle — Tragia involucrata (cannabina); 3. பருததிச் செடி, cotton plant — Gossypium herbaceum alias G. typium.

சமுத்திரா பகிரி, கடற் குருவி, அதாவது கல் உபபு, insoluble salt dug out at the bottom of the sea.

சமுத்திராப் பச்சை, இதற்கு கடற பாலை யென்றும் பெயர். இது அனேக இடஙகளிற் பயிராகும். பூ பெரிது. ரோஜாப் பூ வர்ணம். கட்டிகள் பழுத துடைவதற்கும், வீக்கங்களை கரைப்பதற்கும இதன் இலைகள் உபயோகமாகும். இவ்விலையின் உட்பக்கம் வெண்ணிறம், இது தான் கட்டிகளை பழுக்கச் செய்வது. விதைக்கு பல முண்டாக்குங் குண முண்டு. இது கீல் வாயு, நரம்பைப் பற்றிய வாத ரோகம் இவைகளுக்குபயோகமாகும. இதன் வேரை காடியிற் கலந்து உடம்பிற தேய்க்க பருதத தேகம் இளைக்கும், sea-greens. Ocean dryer — Argyrcia speciosa alias Convolvolus nervosus. It is cultivated in many parts of India; large climber with big flowers, red like rose; leaves used for abscess and for reducing swelling. The under or white side of the leaf is a maturant, whereas the upperside of the leaf is used as a discutient. Seeds are used as a tonic and as such used for rheumatism and gout; the root is medicinally an alterative; mixed with vinegar, it is rubbed over the body to reduce obesity.

சமுத்திராப் பழம். இப் பழம் கிழக்கு தீவுகளி லிருந்து கொண்டு வரப் படுகிறது. இது பெரிய எலுமிச்சம் பழம் போன்ற அளவின தாயும், நானகு பிளவு ரேகை யுள்ள தாயும, கசப்பாயு மிருக்கும். இது அதிசார பேதி, சூதகக் கட்டு, இருமல, தலைவலி, சுரம் முத லிய நோய்களைப் போக்கும். இச் செடியின் பட்டையை கொய்னாவிற்கு பதிலாக கஷாய மாக உபயோகிக்கலாம. இப் பழததின் தனிச் சூரணததை நசியமிட்டுக் கொண்டு வர, ஒற்றைத் தலைவலி, நீர் பீனிசம், குண மாகும். இதன் விதையை பொடி பண்ணி சிறிதளவில் குழந்தைகட்கு கொடுக்க வாந்தி மூலமாய் கோழையை வெளிப்படுததும், பழததின சூரணம தொண்டைப் புண்ணை யும் சரும நோயையும் குணப் படுததும. Samutra fruit—Barringtonia racemosa alias Eugenia racemosa. It is imported from the Eastern Archipelgo and is about the size of a big lime fruit having four grooves and bitter in taste. It is used in cases of diahorrhoea, suppression of menses, cough, head ache, and fever. The bark of this plant is reputed to possess properties similar to those of Cinchona and so, it is used as decoction The fruit as a powder is used like snuff to clean the nostrils in cases of head-aché, cold and catarrh of the nose. The powdered seeds given in small doses to children, acts as an expectorant and emetic. The powder is also said to cure lesion of the throat and cutaneous affections.

NOTE. — The seeds mixed with baits are used to inebriate fish just like those of Cocculus indicus. The tree when in flowers has a most beautiful appearence from its long racemes of rose-coloured flowers. It is also commonly to be met with along the banks of the back waters in Travancore. They are considered by the Native physicians valuble on account of t eir aperiant, deobstruent and cooling properties.

சமுத்திராப் பழம், see சமுத்திரச் செடி ; 2. சவுரிப்பழம் ; 3. சமுத்திரக் கடம்பு, Barringtonia racemosa. Andaman Indian oak.

சமுத்திராப் பழ விதை, see சமுத்திர சோஷி விதை.

சமுத்திராப் புளியன், சில்லு, match-box bean — Entada scandens.

சமுத்திராப பூண்டு, ஓர் பூடு, a plant — Thyme.

சமுத்திரார்த்தம், சிறு நாகப் பூ, Ceylon iron-wood—Mesua ferrea (typica).

சமுத்திரோதயம், see சமுத்திர தோயம்.

சமுப்பவம், நை வேளை, five-leaved cleome —Cleome pentaphylla alias Cleome felina.

சமுர்ப் பன்னம், ஊசிப் பாலை, rosy-milk-wort —Uystelma coculentum.

சமுலவம், see சமுப்பவம.

சமுள், சவண்டலை, Ceylon ash — Berrya ammonilla.

சமுற்பவம், பிறப்பு, birth.

சமுன, தேக்கு, teak-wood — Teotona grandis.

சமுவணயம், ஈரம், moisture.

சமூலச் சாம்பல், பூண்டு முழுவதையுங் கொளுத்தி யெடுதத சாம்பல, ashes derived from burning plants as a whole as potash etc.

சமூலத்தில் காய சித்தி, விருதத், murdah or winged myrobalam—Terminalia tomentosa (typica).

சமூலத்தில் தாம்பிர வெள்வள, வெள்ளை நீர் முள்ளி, water-thistle with white flowers —Hygrophila spinosa (alba).

சமூலத்துவம், நீர்ப பூலா, black honey shrub —Phyllanthus multiflorus.

சமூலம், வேராதி முழுப பூடு அல்லது செடி, the whole plant including the root.

சமேதம், கூடி யிருததல், living as companion ; keeping company with another.

சமேதன், கூடி யொன்று யிருப்பவன், one in union by marriage ; husband.

சமை கடை, பல்கீறு, gum of the teeth.

சமைதல், திரளுதல், to mature as a girl ; 2. புழுக்கமா யிருததல், to be sultry ; 3. பொருதத மாதல், becoming apt.

சமைத்த கந்தகம், பக்குவப் படுததிய கந்தகம், synthetic or prepared sulphur ; 2. தீ முருகற் பாஷாணம, a prosphorus compound with sulphur ; 3. கந்தக மருந்து, any compound of sulphur ; 4. பதங்கிதத கந்தகம, sublimed sulphur.

சமைத்த கறி, பொரித்த கறி, cooked or fried curry.

சமைத்தல், உணவை பக்குவப் படுத்தல், to cook as food ; 2. கொல்லல், to kill ; 3. புதிதாக உண்டாக்கல், to create afresh ; 4. செய்தல், making.

சமைத்திடு கெந்தகம், தீ முருகல் பாஷாணம், see சமைத்த கந்தகம்.

சமைந்த கன்னி, ருதுவான பெண், a matured girl.

சமைந்தவள், see சமைந்த கன்னி.

சமையல், பாகப படுத்தல், cooking ; சமைத்தவுணவு, cooked food.

சமையாமை, பெண் ருதுவாகாமை, immaturity of a girl.

சம், மிகுதி, excess ; 2. பிறப்பு, birth ; 3. தாமரைப பூச் சாறு, juice of lotus flower ; 4 அன்பு, love ; affection.

சம் சுருக்கம், புணாச்சி, copulation ; 2. காமத தாலாகிய நட்பு, friendship or association induced by love.

சம்சா, கரண்டி, spoon.

சம்சாமனம், medicine or measure which neutralises the Dosha's in the system.

சம் சோதனம், பேதி வாந்தியால் உடம்பைச் சுத்தமாக்கல், a medication which purifies the system by purgative and vomiting.

சம்ஞை, சைகை, gesture.

சம்பகம், see சண்பகம், 2. காந்தக் கல், load-stone ; 3. காட்டுச் சண்பகம், white champak—Michelia nilagirica.

சம்பங்கி, see சண்பகம் ; 2. கொடி சம்பங்கி, Indian cowslip creeper — Perugularia minor ; 3. வாசனைத் திரவியம், perfumery; 4. see சாலங்க பாஷாணம.

சம்பங்கிக் கொடி, சீதா மனோகரம், prim rose creeper—Pergularia odoratissima.

சம்பங்கி சேதனம், சம்பங்கிப் பூ, champak flower—Michelia champaca.

சம்பங்கிப் புல், புற் சம்பங்கி, a fragrant champak grass.

சம்பங்கிப் பூ, சண்பகப் பூ, champak flower. The different varities of champak are :-

1. மர சம்பங்கி, tree champak — Michelia champaca.
2. நில சம்பங்கி, ground champak — —Polyanthns tuberosa.
3. அகச் சம்பங்கி, Indian magdolina —Plumeria acutifolia.
4. காட்டு சம்பங்கி, wild champak — Michelia nilgriaca
5. சிறு சம்பங்கி, cananga flower tree Canangium odaratum.
6. கொடிச் சம்பங்கி, creeper champak —Pergularia minor.
7. நாக சம்பங்கி, white champak— —Tecoma undulata.

சம்பங்கி யெண்ணெய், சம்பங்கிப் பூ கலந்த ஓர் வாசனை தைலம், any medicated oil in which champak flower forms the chief ingrediant, 2 வாசனைக்காக சம்பங்கிப் பூவை ஊறப் போட்ட எண்ணெய், any oil in which champak flower is soaked for purposes of fragrence.

சம்பங் குடலை, சம்பங் கோழி, which see.

சம்பங் குலிகம், விஷ மூங்கில், Asiatic poison bulb—Crinum asiaticum.

சம்பங் கூடு, see சம்பங் குடலை,

சம்பங் கோரை, யானைக் கோரைப் புல், elephant sedge grass — Typha Elephantina ; 2. கோரை, sedge grass — Cyperus rotumdus.

சம்பங் கோழி, ஓர் வகை காட்டுக் கோழி. இது சம்பங் கோரையின் விதையை தின்பதால் இப் பெயர், grey jungle fowl — Gallus sonne raltii. It is so called beeause of its feeding on the seeds of sedge grass.

சம்படம், சீலை, cloth, lint ; 2. சோம்பல், laziness, sluggishness of the system.

சம்பண மேதி, எருமை நாக்கிக் கள்ளி, buffalo-tongued spurge—Euphorbia genus.

சம்ப தைலம், எலுமிச்சை யெண்ணெய், lime oil ; lemon oil.

சம்பத்தி, சேர் வாளம், crotou seed—Croton tigilium.

சம்பந்தத் தசை நார், சதை, தோல், கொழுப்பு. நாடி, எலும்பு இவைகளை ஒன்று பட இணைக்கும் நுட்பமான நார் வஸ்து, a delicate stringy substance which usually binds and packs skin, muscle, fat, blood-vessels and bones all together so as to allow freedom of motion— Connective tissue.

சம்பந்தம், புணர்ச்சி, sexual connection ; 2. உறவு, relationship ; 3. விவாகம், marriage ; 4. தொடர்பு, adaptation. See சம்மந்தம் ; 5. இணக்கம், union *i.e.*, the adaptation of parts in relation to each other viz.—

1. ஆன்ம சம்பந்தம், relation to spirit, — Spiritualism.

2. தேக சம்பந்தம், relation to body— Physicism.

3. விஷய சம்பந்தம், relation to body— Materialism.

4. காரண சம்பந்தம், relation to cause — Causationism.

சம்பந்தி, துவையல் வகை, a kind of condiment used as a relish in food.

சம்பம், எலுமிச்சை யிலை, lime-leaf ; 2. தண்ணீர், water ; 3. பேரெலுமிச்சை, lemon ; 4. மர வயிரம், the solid portion in the heart of a tree—Core ; 5. நாக மரம், jambu tree — Eugenia jambolina ; 6. சாலாங்க பாஷாணம், a mineral poison.

சம்பம் புல், see சம்பங் கோரை ; 2. பாழ் நிலங்களில் விளையும் ஓர் வகைப் புல், grass growing on waste lands—Heath.

சம்பர நாரை, ஓர் சிகப்பு நாரை, a red crane.

சம்பரம், சிவப்பு மெல்லிய மான், a species of red and slender deer — Samber stag ; 2. கடம்பை, the jerrow of Himalayas — Rusa aristotelis ; 3. சரபம் என்னும் எட்டுக் கால் பறவை, a bird of ancient times supposed to be endowed with eight legs ; 4. குளிர்ந்த நீர், cold water ; 5. மருத மரம், murdah tree—Terminalia alata.

சம்பரி, நேர் வாளம், croton plant — Crotou tigilium ; 2. எலிச் செவி, rat's ear plant —Evolvulus emarginatus.

சம்பரித் தணக்கு, செந் தணக்கு, catamaran wood tree—Givotia rottleriformis.

சம்பர்க்கம், புணர்ச்சி, copulation ; 2. கலப்பு, mixture.

சம்பலச் சீரம், எருக்கம் பால், milk of madar plant—Calotropis gigantea.

சம்பலம், எலுமிச்சை, lime fruit — Citrus medica ; 2. எருக்கு, madar plant — Caltropis gigantea. See சம்பழம்.

சம்பல் வேர், கஸ்தூரி வாசனை யுள்ள வேர், sambal root or musk root ; 2. ஓர் புல் வேர், the root of a grass.

சம்பவம், பிறப்பு, birth ; 2. நிகழ்ச்சி, occurrence ; 3. ஒன்றின் காரணம், causation ; 4. தற்கிழமை, (*In Philosophy*), the necessary existence of one thing in or with another, as one in a lot ; 5. எலுமிச்சை, see சம்பலம் ; 6. சம்பவிக்கும் காரணம், cause of occurrence.

சம்பவாகிகம், எழு முன்னுக் கொடி, axil-spined mulberry — Plecospermum spinosum.

சம்பழ நீர், எலுமிச்சம் பழச் சாறு, lime-juice ; 2. நடு மூலம், (பரி பாஷை), (lit) water or fluid secreted in the middle of the body, probably referring to urine or semen or woman's menstrual blood.

சம்பழம், எலுமிச்சம பழம், lime fruit — Citrus aurantium (Bergamia) ; 2. புளிப்பு எலுமிச்சம் பழம, sour lime fruit.

சம்பளம், see சம் பழம் ; 2. செம் மறிக் கடா, ram ; 3. பொறாமை, malice ; envy.

சம்பன சாரம், எழிலைப் பாலை, seven-leaved milky plant—Alstonia scholaris.

சம்பன்ன கரணி, இரணத்தைத் தீர்க்கு மருந்து a medicine capable of healing up wounds and injuries. See இரண நாயகம்.

சம்பன்னன், நிறை அறிவுடையோன, one attained perfection in knowledge, 2, பாக்கியம் பெற்றவன், an accomplished man rich in everything or complete in requirements.

சம்பா, தஞ்சையில் விளையும் ஓர் உயர்தர சம்பா நெல், a species of superior paddy grown in Tanjore District, see நெல் ; 2. சம்பா அரிசி, rice derived from Chamba paddy.

சம்பாகம், நன்றாகச் சமைத்தது, that which is cooked properly ; wholesome preparation of victuals for the table.

சம்பாதின் கனி, எலுமிச்சம் பழம், lime fruit.

சம்பா நெல், நெலின் ஓர் வகை, a kind of paddy. Chamba See நெல்.

சம்பார இட்டலி, உளுந்த மாவுடன் காரம் சேர்த்துச் செய்த இட்டலி ; காஞ்சிபுரம் இட்டலி, a baked rice cake prepared with chillies and other condiments mixed with black gram flour.

சம்பாரங் கூட்டல், கறிக்கு மசாலை சேர்த்தல், mixing up condiments and other curry-stuffs.

சம்பாரத் தோசை, மிளகு, இஞ்சி, கறிவேப்பிலை முதலிய சாமான்கள் சேர்ந்த தோசை, leaf-like thin rice cakes mixed with condiments such as pepper, ginger, curry leaf etc.

சம்பாரப் புல், சுக்கு நாறிப் புல், ginger grass, 2. ஓர் வாசனைப் புல், any fragrant grass as kuskus etc. ; 3. கற்பூரப் புல், lemon grass—Andropogon aromaticus.

சம்பாரப் பொடி, கறிப் பொடி, curry-powder.

சம்பார மிடுதல், மருந்துச் சாமான்களைக் கலத்தல், to mix up ingredients in medicine ; 2. கறி மசாலை சேர்த்தல், to form or prepare condiments or curry powder.

சம்பாரம், கூட்டு வகை, ingredients ; 2. சாமான், substance ; 3, கலப்பு, mixture ; 4. கூட்டு வகை அல்லது மசாலை, curry-stuffs ; 5. நீர் மோர், a mixture of water and butter-milk ; whey.

சம்பார வல்லி, ஓர் வகை திராட்சை, Indian grape vine—Vitis indica ; 2. காட்டுத் திராட்சை, Indian wild grape vine—Vitis rugosa alias Vitis latifolia ; 3. see கற்பூர வள்ளி.

சம்பாலம், ஆட்டுக் கடா, he-goat.

சம்பால், ஓர் வகைப் பச்சடி, a kind of seasoning or relish taken along with food.

சம்பா வரிசி, சம்பா நெல்லின் அரிசி, rice from chamba paddy.

சம்பாவனை, மனோமய சிந்தனை, serious contemplation.

சம்பா வாலுகி, வாலுளுவை, spindle tree—Celastrus paniculata.

சம்பிக பாகம், கொன்றை, common cassia—Cassia fistula.

சம்பீகோ, எலுமிச்சை, lime—Citrus medica-acida.

சம்பிரக் காய், எலுமிச்சங் காய், lime fruit.

சம்பிரக் குழம்பு, எலுமிச்சை ரசத்தைக் கொண்டு தயாரித்த ஓர் மருந்து, a medicine prepared with lime-juice as a chief ingredient.

சம்பிரதம், இந்திர சாலம், a magical performance through hypnotism ; jugglery ; 2. சித்து, miracle. See சாலம்.

சம்பிரதாயம், தொன்று தொட்ட வழக்கம், a long-established custom or usuage ; 2. குரு பாரம்பரியம், (*In Philosophy*), traditional communication of religious doctrines from teacher to teacher.

சம்பிரத்தின் கனி, see சம்பீரம்.

சம்பிரத் தீட்சண கெநதம், கஞ்சாங் கோரை. white basil—Ocimum album.

சம்பிரமம், பறங்கிப் பாஷாணம், a mineral poison — Mercurius sublimatus ; 2. கலியாணம், marriage ; 3. உடலசைதல், moving the body.

சம்பிராசன், பதினெண் வகை பிரமேக நோய்களி னொன்று, one of the eighteen kinds of venereal diseases.

சம்பிரி, சேர்வானம், see சம்பரி ; 2. சேரான், dhoby nut—Semicarpus anacardium.

சம்பிரோ வத்தி, see சம்பீரம்.

சம்பினத் தாதி, வாயு விளங்கம், wind-killer—Embelia ribes.

சம்பீரத் தைலம், எலுமிச்சம் பழச் சாற்றை முன்னிட்டுத் தயாரித்த மருந்துக் கூட்டெண்ணெய், a medicated oil in which lime juice forms the essential portion.

சம்பீர நவநீ தாஞ்சனம், எலுமிச்சஞ் சாற்றுடன் மருந்து கூட்டி வெண்ணெயைப் போல் செய்து கண்ணுக் கிடு மோர் மைக் கூட்டு, a collyrium for the eyes prepared like an ointment in which lime-juice forms the chief essence along with other ingredients.

சம்பீரம், எலுமிச்சை, lime — Citrus medica acida ; 2. கிச்சிலி, jambiri orange—Citrus aurantium-nobilis (jambira).

சம்பீர ராம், பறங்கிப் பாஷாணம், see சம்பிரமம்.

சம்பீர லவணம், எலுமிச்சை யுப்பு, lime-salt.

சம்பு, எலுமிச்சை, lime tree ; 2. நாவல் மரம், jambu tree — Eugenia jambolina ; 3. சம்பங் கோரை, sedge grass ; 4. see ஆடு தின்னாப் பாளை ; 5. சீர்பந்த பாஷாணம், a kind of native arsenic ; a mineral poison ; 6. நரி, jackal ; 7. சடைப் பூண்டு, see சடைச்சி ; 8. see சம்பு நாவல் ; 9. ஆனைப் புல், elephant grass—Typha Elephantina ; 10. கரு நெலலி, black-berry, 11. வன்னி மரம், Arjuna's penance tree

—Prosopis spicegera ; 12. தக்கைப் புல், pith-grass—Typha angustifolia.

சம்புகர்,-நரி, fox ; 2 குள்ள நரி, jackal ; 3. சங்கை போ விருக்கும் சிறிய பலகறை, a small cowry resembling the chank.

சம்புகா, நத்தை யோடு, shell of a snail.

சம்புகாதி மாத்திரை, சங்கைப் போன்ற சிறிய பலகறையில் பஸ்பம் செய்து அததுடன் உப்பு வகைகள் சேர்த்துத் திரட்டிய ஆயுள் வேத மாத்திரை. இது பரிணாம சூலைக்குக் கொடுக்க நிவர்த்தி யாகும், an Ayurvedic pill prepared by mixing up several salts with the calcined powder prepared from a small cowry resembling the chank. It is prescribed for gastralgia.

சம்புகா வர்த்த பகந்தர விரணம், ஓர் விரண நோய். அது திரிதோஷத்தினாற் பிறந்து, ஆசன வாயிலில நத்தை யோட்டுச சுழியைப் போல், அவாரங்களை யுண்டாக்கும். அப் போது நடக்கும்போது விரணம் அறுபடு வது போல் வலியை யுண்டாக்கும், a form of fistulous tract with sinuses developed in the shape of curls like those of snail shell, by the side of the rectum. This is marked by cutting pain rendering the patient unable to walk.

சம்புக் கோரை, see சம்பங் கோரை.

சம்பு சம்பல், சத குப்பை, dili-seed — Anethum graveolens.

சம்பு சயனம், ஆல மரம், banyan tree ; 2. திரு வாத்தி, holy mountain ebony — Bauhinia tomentosa ; 3. பாம்பு, snake.

சம்புடசம், சிமிழ், a small metallic box for holding or preserving medicines ; 2. காம லீலையி லொன்று, one of the 64 postures in embracing a woman during sexual congress. See சம்புடம்.

சம்புடம், செப்பு, a small mud vessel for preparing medicine as in calcination ; 2 மருதோன்றி, henna plant—Lawsonia alba ; 3. தமிழ் கொக்கோக நூலின்படி 64 லீலைகளில் ஒன்று. இது அடியிற் கண்டபடி இரு வகைத்து, according to Tamil Kokkogam, this is one of the 64 postures contemplated in sexual intercourse. It consists of two classas as mentioned below viz :—(1) உத்தான சம்புடம் and (2) பாற் சம்புடம்—

1. உத்தான சம்புடம். இதில் மல்லார்ந்து படுத்த பெண்ணின் சம்போக காலத்தில் குறி புகுந்தவுடன் இருவரும் கால்களை நீட்டிப் படுத்துக் கொண்டு இரு தொடைகளையும் நெருக்கிப் பிடித்தலாகிய ஓர் லீலை, it is a posture in which the woman is lying on her back with her thighs and vaginal orifice tightly closed up after penetration, both of them stretching their legs in the bed. The thighs should be closed together only *after* penetration.

2. பாற் சம்புடம். இதில் ஒருக்கணித்த படி படுத்த பெண், மேற்கண்டபடி புரியும் லீலை, a posture in which the woman is lying on her *side* and continue the above position during intercourse after penetration.

NOTE—According to the Tamil Erotic Science of Kokkoga Muni, this posture taken up during coitus consists in the woman who is middle-aged, keeping her thighs closely, and then seperating them little by little according to the requirements. This is applicable only to an *aged* woman of the class " Loose-fit Union."

சம்புதம், பிறப்பு, birth ; coming to life.

சம்பு நாகை, see சம்பு நாவல்.

சம்பு நாவல், நரி நாவல், small jaumoon—Eugenia arnottiana , 2. see சம்பு மலக்கா மரம் ; 3. நீர் நாவல், water-jaumoon — Eugenia munronii.

சம்பு நாவல், காட்டில் வளரும் பெரு நாவல் மரம். இதுவே பன்னீர் பழ மரம். சம உயரம், பழம் பெரிது. இம் மரத்தை எங் கும் பார்க்கலாம். இலைகள 1½—2 அங்குல அகலம் ; நீளம் பலவாறு. பூக்கள் பெரிது. பழம் சிறிய ஆப்பில் பழத்தைப் போ விருக் கும். பன்னீர் வாசனையா யிருக்கும். இது அவ்வளவு ருசியா இராது, இதை ஊறுகாய் போடலாம். சிறிய பழத்திறகும் இதற்கும் குணத்தில் வித்தியாசமுண்டு. இதன் கொட் டையை எடுத்துவிட்டுப் பின்பு இப் பழத்தி னின்று பன்னீர் காய்ச்சலாம். இதன் பட் டை துவர்ப்ப பானத்தினால் கஷாய ரூபமாக கிராணிக் கழிச்சல், சீதபேதி இவைகளுக்கும், கொப்புளிக்கு நீராக தொண்டைப் புண் ணுக்கும், குழகுழத்த பல்லீறு நோய்க்கும் உபயோகிக்கலாம் இதன கொட்டையைத தூள் செய்து நீரழிவுக்கு கொடுக்கலாம். இலையின் கொழுந்துச் சாற்றுடன் ஏலம், கரு

வாப் படடை இவைகளைச் சேர்த்து வெள்ளாட்டுப் பாலில் கலக்கி குழந்தைகளின் கழிச்சலுக்குக் கொடுக்கலாம். இப் பழத்தைக் கொண்டு ஷர்பத் அல்லது காடி யிறக்கி, வயிற்றுக் கோளாறுகளுக்கும், வாயுவைக் கண்டிக்கவும் உபயோகப் படுத்தலாம். அன்றியும், இது அவர்ப் பாகவின் மண்ணீரல் வீக்கத்திற்கும், நாட்பட்ட கழிச்சலுக்கும் கொடுக்கலாம், large-fruited jaumoon or East Indian rose-apple — Eugenia jambos. The tree is of moderate size bearing large fruit. It is grown all over India, leaves $1\frac{1}{2}$-2'' broad, but variable in length; berries 1–2 in diametre; large flowers. Fruit is of the size of a small apple and with a fine delicate rose-water perfume, hardly eatable being of a poor flavour and taste, made into preserves, differs from the smaller jaumoon fruit in quality. Rose-water can be distilled from the fruit, taking the seed out first. The bark is an astringent and as such, is used in decoction in cases of chronic diarrhoea and dysentery, and as a gargle in sore throat and spongy gums. The seed or stone of the fruit is used for diabetes. The juice of the tender leaves mixed with cardamons and cinnamon is given in goat's milk for diarrhoea in children. The syrup or vinegar prepared from the ripe fruit is a stomachic and carminative. It is also useful in the enlargement of the spleen and chronic diarrhoea being an astringent.

NOTE.—This should not be confounded with கொட்டை நாவல், black plum — Eugenia jambolina.

சம்பு நீர், கடல் நீர், sea-water.

சம்புப் புல், see சம்பங் கோரை

சம்புப் பூகி, வரிக் கடுக்காய், yellow-striped gall-nut.

சம்புப் பொற்சரம், சரக் கொன்றை, common cassia—Cassia fistula.

சம்பு மலாக்கா, மரம், சம்பு நாவல். இது ஓர் செடி. 6-8 அடி உயரம், சிறிய கிளைகள்: இலைகள் 9–12'' by $3\frac{1}{2}$''; இரு பக்கமும் பளபளப்பா யிருக்கும்; பூக்கள் பெரிது, அழகா யிருக்கும். காய்கள் சிறிய ஆப்பில் பழத்தைப் போலிருக்கும். தின்பதற்கு அவ்வளவு ருசியா யிராது, Malay rose-apple; Malacca jaumoon—Eugenia malaccensis. A small shrub 6-8 ft. high; leaves 9-12'' by $3\frac{1}{2}$'' inches; glossy on both surfaces; flowers large and handsome. Fruits are of the size and form of a small apple, perfectly smooth, translucent, white with a bluish of crimson, not worth eating.

சம்பு ராகம், கொன்றை, cassia—Cassia fistula.

சம்பு ரோதம், முள் வெள்ளரி, foreign cucumber—Cucumis sativus.

சம் புல்லம், மலர்ந்த பூவை யுடைய மரம், any tree with blossomed flowers.

சம்பு வக்கு, கொன்றை, see சம்புராகம்

சம்பு வன்னி, பரம்பை மரம், Arjuna's penance tree—Prosopis spicigera.

சம்புவாசி, சுணங்கன் விருட்சம், an unidentified tree ?

சம்பு விபூடம், ஆண் குறியின்தோலின் மேலுண்டாகும் தடித்த விரணங்கள், raised patches of wounds on the surface of the penis.

சம்பூ, நாவல் மரம், common jaumoon tree—Eugenia jambolina.

சம்பூக சீரிஷ வாதம், நரித்தலை வாதம். மிக்க சீதள காலத்தில் சிலேட்டும வஸ்துக்கள், பிண்ணாக்கு, வாயு வுள்ள வற்றல் முதலிய பண்டங்களைப் புசிப்பதாலும், அன்றியும், அதிக நடை, பகல் நித்திரை, மிகுமைசயோகம் முதலியவைகளாலும் ஏற்பட்டு,பிறகு வாதக் கோளாறினால் அவிழ்ந்த திரவபமசை சீர் குலைந்து முழங்காலின் சில்களில் தங்கும். அதனால் முழங்கால் நரித் தலையைப் போல் வீங்கி, தடிப்பு, திமிர், வலி, குத்தல், மலச் சிக்கல் முதலிய குணங்களைக் காட்டும், a disease of the knee arising from dietetic errors, such as, taking phlegmatic substances, oil-cake and other fried things causing fistulence; and it is also due to extraneous circumstances as, excessive walk, or indulging in day sleep or excess of sexual intercourse. Pathologically, it is due to deranged Vayu (humour) in which the excited synovial fluid becomes settled in joints. It is marked by inflammatory overgrowth of the articular cartilages resembling the head of a jackal attended with numbness, and at times with acute pain, constipation etc—Synovitis of the knee-joint, See நரித்தலை வாதம்.

சம்பூகச் செடி, ஓர் கருப்புப் பூச் செடி, elder bush or elder berry—Sambucus nigra.

சம்பூகத் தைலம், நத்தைக் கறியும், கடுகு எண்ணெயும் சேர்த்து இறக்கும் ஓர் வகைத் தைலம். இதை காதில் எழும்பும் புண்களுக்குபயோகிப்பது, a medicated oil prepared from snail flesh and mustard oil. It is used as ear-drops in the affection of the ear.

சம்பூக பற்பம், ஆயுர் வேத முறைப்படி தயாரித்து பங்கத்தி சூலைக்குக் கொடுக்கு மோர் சூத்திர சங்குபற்பம், an Ayurvedic medicine prepared by calcining the small species of chank. It is prescribed for acute colic of the abdomen.

சம்பூகப் பூ நீர், சம்பூகப பூவி னின்று வாலையி லிட்டுத் தயாரிக்கும் நீர். இது மற்ற மருந்துகளோடு அனுபானமாகச் சேர்க்கப் படும் இது சுறு சுறுப்பை உண்டாக்கும், distilled water obtained from fresh elder flowers —Aqua sambuci. It is used as a vehicle for other medicines especially in lotions. It is a mild stimulent.

சம்பூகம், சங்கு, conch ; 2. நத்தை, snail ; 3 நரி, fox ; 4. நாவல், jaumoon ; 5. கிளிஞ்சில் bivalve-shell, See சம்புகம்.

சம்பூகை, கிளிஞ்சில், bi-valve-shell ; mollusc.

சம்பூதம், see சம்பு நாவல ; 2. போதுமான அளவு, sufficient quantity.

சம்பூரண பருவம், யௌவனத்திற்கும் கிழத்தனத்திற்கும் இடையே யுள்ள பருவம், that period of middle age intervening youth and oldage—Middle-aged.

சம்பூரணம், மேலும் பெறுது, கடைசியாகப் பெறும் பெண் குழந்தைக் கிடும் பெயர், the name given to the last female child, wishing to have no more.

சம்பேதனம், கரையச் செய்யும் கர்த்தா, a dissolving agent as gastric juice—Katalysis.

சம்பை, see சம்பங் கோரை ; 2. மின்னல், lightning ; 3. மீன பொது, fish in common-

சம்பைச் சரக்கு, எளிதில் அழியும் சரக்கு, easily perishable article ; 2. மட்டச் சரக்கு, drug of inferior quality.

சம்போக கஷ்டம், கலவி அல்லது புணர்ச்சி காலத்தில், ஆண் பெண் இருவருக்கும் ஏற்படக் கூடிய கஷ்டங்கள், அவையாவன, the sexual and other difficulties which may be experienced by both man and woman during sexual intercourse viz :—

1. சோபன கல்யாண இராத்திரி முதல் சம்போகமாதலால், புருஷனுக்கு தன் பெண்சாதியின் கூச்சம், வெட்கம் முதலியவைகளை நீக்கி, மார்பைத் திறக்கவும், இடுப்பு சேலையை களைந்து நிர்வாண மாக்கச் செய்வதற்கு, இது முதல் தடவையாதலால மிக்கச் சிரமம் ஏற்படும். அன்றியும், முதல் தடவை புணர்ச்சி செய்யப் புகுவதால், இருவர்களுக்கும் இயற்கையாகவே வலியும், தொந்திரவும ஏற்படும், in the intercourse on the nuptial night, it is a great problem for the husband to fight over the shyness and the delicacy for exposing the wife's breasts, and the removal of her garments to appear naked for the first time. This night may be a trial for both, as the first coitus will naturally be painful to both of them.

2. சம்போக காலத்தில் சாதாரணமாக பெண்களுக்கு பிணக்கு அல்லது ஊடல் என்னும் காமப போர் இயற்கையாகவே ஏற்பட்டதை, பிடிவாதமாகக் கொள்வார்களாதலால், புருஷர்கள் அதைத் தப்பாக நினைக்காமல், சாந்தமாகவே யிருந்து அதைத் தணிக்க வேண்டும், a woman sometimes makes very effective use of a certain holding back which we used to call 'Pinakku' or love quarrel. So, the man has to contend against this in a peaceful way, and should not misunderstand.

3. பெண்களின கன்னி முதத்திரை முதற் சம்போக காலத்தில் கிழிவு ஏற்படுமாதால், யோனி மார்க்கம் புண்ணாகவே யிருக்கும். ஆகவே, சிலநாள் வரை சம்போகத்திற்கு மிக்கக் கஷ்டமாகத் தான் இருக்கும, when the hymen is ruptured during the first sexual intercourse, the vagina may be sore and so inter-

couse will naturally be difficult for a few days.

4. புருஷர்கள் விடாதபடி தொடர்ச்சியாய் நின்றபடி சம்போகம் செய்வதால், முதுகிலுள்ள வீணைத் தண்டுக் கயிறு சீர்குலைந்து, அதனால் பாரிச வாயு ஏற்பட்டு கைகால்களை விழச் செய்யும். அதுவுமன்றி, இடுப்பு வலியும், அடக்க முடியாத மூத்திர வொழுக்கு முதலான கஷ்டங்களும் சம்பவிக்கும், man by persistently assuming an erect posture may be affected with congestion of the spinal cord and paralysis of the extremities, pain in the lumbar region, incontinence of urine etc.

5, சில பெண்களுக்கு ஆரம்பத்தி லிருந்தே பெண் குறி பின்னுக உள்ளடங்கி இருக்கும் பட்சததில் சம்போகததிற்கு கஷ்ட மேற்படும. அதறகாக பெண்களின் பின்னுக அதாவது முதுகுப் பக்கமிருந்து சம்போகிப்பது எபபொழுதமே நன்மை யெனக் கருதப் படும், the backward location of the vulva, according to the early development in them, presents difficulties in intercourse, and in such cases, rear entry is always credited.

6. ஆண், பெண்ணின் சனனேந்திரியங்கள் ரூபததில் மாறுபட்டும், இருக்க வேண்டிய நிலை குலைந்தும் இருப்பதாலும், தங்களுடைய வாழ்க்கையில் தேக வசதிக்கு மாறுக அங்கத்திலும், குறிப் பொருத்தங்களிலும், அனேக சந்தர்ப்பங்களில் முரண்பாடு ஏற்பட்டு, ஒவ்வாத காரணததினுல் சம்போகததில் கஷ்டங்கள் ஏற்படக் கூடும், malformation, malposition of sex organs, physiological disparities etc. in several stages of life of both man and woman, may also lead to difficulties in sexual intercourse-

NOTE.—Consummation is the first intercourse which makes the coup as husband and wife No doubt, it is a trial for both the parties, especially to a woman who may feel shame greatly with intimacies outside the sexual act such as, love-play which is not a new thing amongst the Hindus.

This love-play originates even on the *third* day of the Hindu marriage itself openly in the midst of relatives and friends, so that the pair may continue this on the wedding night without any shyness, hesitation or mental reservation—which is the root cause of all the future troubles.

So, love-play or petting is of greatest importance on the wedding night. A shy bride should be slowly initiated into the intimacies of wedded life, as a brusque and rushing attitude may have harmful effects.

சம்போக காலம், காம நூலின்படி பெண்கள் மாத விலக்கான நான்காம் நாள் முதல் 12 நாள் வரை புணர்ச்சிக்குரிய காலம். மற்ற 14 நாட்களில் கருபபம் தரிக்காவிட்டாலும, பெண் விரும்பினு லன்றி புருஷன் வலிய புணர லாகாது. அன்றியும், அமாவாசை, பௌர்ணமி நாட்களை விலக்க வேண்டும். ஆகவே, இவவிதி விலக்குகளை அனுசரிக்க வேண்டிய தவசியம், the period according to Sexual science, prescribed for sexual intercourse is between 4th and 12th day after menses. Although the remaining 14 days are not intended for conception, the man cannot have recourse to sexual intercourse unless desired by the woman. Moreover, new and full moon days, are generally restricted for such intercourse. It is essential that the rules should be strictly adhered to.

NOTE.—According to Tamil Sexual Science, 'Kokkogam', the days selected for conception is from the 9th—16th day after menses. During the remaining period of 17th—30th day, sexual intercourse is not allowed unless the woman shows her inclination for it, and she is in a receptive mood, because the female generally when in heat, appears to have an almost unlimited capacity for sexual intercourse; and it is only then, the man's sexual craving is very easily satisfied, and both the parties will have equal satisfaction

The best time for intercourse is when interference or any disturbance, and in convenience to body and mind, will not occur. The time for sexual relations should be chosen in a way that the temporary excitement or after exhaustion resulting from it, may not interfere with the daily avocation in life. It is a great mistake to think that, so long as the genital organs are capable of action at any time, it is no matter or little importance and consequence what time or place is chosen and under what circumstance. Some medical authorities suggest the evening time; but Hindu Science enjoin

breathing and exhibits in addition, bodily lustre, strength, and voice without any deficiency or defects therein, then the disease is considered curable.

சாத்திய சாந்தகம், நாணற்புல், reed grass —Saccharum spontaneum.

சாத்திய சுரம், சிகிச்சைக்கு வசப் படும் சுரம், fever which can be easily cured.

சாத்தியசுர லட்சணம், உடம்பு இளைப்பு, நாவறட்சி, உள்ளங்கை உள்ளங்கால் சில்லிடல், வயிற்றுப்பிசம், இருமல், தூக்கமின்மை கபம் தடைபடல், உடம்பு பாரம் முதலிய கெட்ட குணங்கள் இல்லாதிருத்தல் எளிதில் குணப்படும், fever is considered easily curable in the absence of the following characteristic bad symptoms viz—emaciation, dried tongue, chillness of the extremities, distention of the stomach, cough, sleeplessness, obstruction of phlegm in the chest, heaviness of the body etc.

சாத்திய நாடி, நோய் குணப் படலாமென அறிவிக்கும் நாடி நடை, the pulse indicative of possible recovery from illness.

சாத்தி யந்தன், பிறவிக் குருடன், a born blind man.

சாத்திய மிகல், நோய் குணப் படும் தன்மை அதிகப் படல், increase in the progress of recovery from a disease.

சாத்தியம், குணப்படுகை, curability, 2. சாதிக்கத்தக்கது, that which is possible for practice; 3. சாதனத்தால் உறுதிப் பட்டது, that which is strengthened by practice; 4. தின்பீர்க்கு, acute-angled cucumber; vegetable gourd—Cucumis acutangularis; 5. மருந்துக்கு வசப்பட்டது, that which is amenable to medicine.

சாத்திய ரோகம், சொஸ்தப் படுத்தக் கூடிய நோய், curable disease as opposed to அசாத்திய ரோகம், incurable one.

சாத்தியா சாத்திய நோய்கள், சிகிச்சைக்கு சாத்தியமானவும், அசாத்தியமானவுமாகிய நோய்கள், curable and incurable diseases for treatment.

சாத்திர பேதி, ஓர் உபரசச்சரக்கு, see சஸ்திர பேதி; 2 மலைசாதம், a fluid oozing out from rocks—Bitumen; 3. ஓர் நீர்க்கும் சரக்கு. இதை ஆயிரத்திற் கொன்றுகச் சேர்க்கில் தண்ணீராக கரைந்து விடும், a mineral dissolvent added to anything in the proportion of 1 to 1000 for converting into a liquid.

சாத்திரம், நூல், science; 2. சோதிடநூல், astrology or astromony; 3. தயிர், curd; 4. வைத்தியம், medical science.

சாஸ்திரம், see சாத்திரம்.

சாத்திர வசம், பூ நீறு, efflorescent salt found on fuller's soil.

சாத்திர வாராய்ச்சி, நூலாராய்ச்சி, scientific research.

சாத்திர வேதி, see also சஸ்திர வேதி and சாத்திரபேதி.

சாத்திர வேரி, தண்ணீர்விட்டான், water-root —Asperagus racemosus.

சாத்திர வேர், see சாத்தா வாரி.

சாத்திரா லவணம், பொட்டிலுப்பு, saltpetre.

சாத்திரீகம், சாஸ்திர சம்பந்தமான, relating to science—Scientific.

சாத்துகர், see சாத்துக்குடி.

சாத்துக்குடி, ஓர் வகை தித்திப்புக் கிச்சிலி, a kind of sweet orange, Batavian orange —Citrus; 2. சாத்துக்குடி கிச்சிலி, orange —Satgarh.

சாத்துணி மாதா, மச்சம், fish.

சாத்துதல், பூசுதல், smearing; 2. மாலை சாத்தல், garlanding.

சாத்துப் பனை, சாற்றுப் பனை, palmyra, yielding fruit or toddy; 2 பெண் பனை, female palmyra tree.

NOTE.—The palmyra tree consists of two kinds viz. male and female (ஆண்பனை, பெண்பனை) the one is not fruitful, but the other yields not only fruit, but also useful for toddy. It is for this reason, the tree is called (சாத்துபபனை) which means the palmyra yielding juice (toddy).

சாத்துவ குணம், see சாத்துவிகம்.

சாத்து வாதி, சித்திரமூலம், Ceylon leadwort-Plumbago zeylanica.

சாத்துவிகம், முக்குணத்தி லொன்று, one of the three qualities i.e. mildness in thought, word and deed; purity.

சாத்தாலம், புலிதொடக்கிச் சாறு, the juice of tiger stopper—Caesalpinia sepiaria.

சாத்தேயம், சத்திபூசை செய்யும் ஓர் வகுப்பார், a class of people devoted to Sakthi worship.

சாத்மியம் எப்பண்டங்களினால உடம்பிறகு கேடு உண்டாகிறதோ அப்பண்டத்தையே கொஞ்சம் கொஞ்சமாக உடம்பிற் செலுத்தி சாதகப்படுத்திக்கொள்வது, habituating or making familiar with, by bringing into practice anything injurious or disagreeable to health by taking it frequently in minute quantities; and by doing so such substances would then become agreeable to health.

சாத்மிகம், சாந்த குணம், mild or amiable quality; meekness.

சாத்மிகன், அடக்கமானவன், quietman.

சாநகி, கொடிக் கொத்தான், green thread creeper-Cassytha filiformis; 2. மூங்கில், bamboo; 3. பொன்னாங்காணி, sessile plant—Illecebrum sessile.

சாநம், அம்மி, grind stone; 2 உரைகல், touchstone, 3. சாதிலிங்கம், vermilion.

சாநிலை, சாகும் நிலைமை, dying condition.

சாநீகம், அயத்திராவகம், ferric acid, see உலோகத் திராவகம்.

சாநு, முழங் கால, knee.

சாந்தகம், நான்முகப் புல், (lit) four-faced grass; buffalo reed—Saccharum spontaneum.

சாந்தகலம், தணக்கு, whirling nut—Gyrocarpus jacquini.

சாந்தக வன்னி, திருநீற்றுப்பூடு, an unknown plant which is said to suspend the action of fire.

சாந்த சந்திரோதயம், ஓர் சிறந்த ஆயுர்வேதக் குளிகை, an Ayurvedic pill of a mild and superior quality.

சாந்த பூரிதம், சந்தனம், sandalwood,—Santanum album.

சாந்த பேணி, நெட்டிலிங்கம், Indian mast tree—Polyalthia longifolia.

சாந்தப் படுத்தல், நோய்களை குணப் படுத்தல, to cure diseases; 2. அமைதி யாக்கல், to alleviate as sufferings; 3 வலியைக் குறைவு படுத்தல், mitigating pain.

சாந்தப் படுத்து மருந்து, நோய் அல்லது வலியைத் தணிக்கு மருந்து, any medicine which tends to diminish irritative activity or assuage pain—Sedative.

சாந்தப் பார்வை, mild and modest look.

சாந்த பரிகாரம், அமைதியை யுண்டாக்கும் சிகிச்சை, palliative treatment.

சாந்த மாக்கல், see சாந்தப் படுத்தல்.

சாந்தமா யிருத்தல், நோய் அல்லது வலி சிறிது குறைவா யிருத்தல், being toned down by favourable representations; dimunition of pain in any disease; 2. அமைதியாய் யிருத்தல், to be gentle.

சாந்தம், குளிர்ச்சி, coolness; 2. சாணி, dung of an animal; 3. சந்தனம், sandalwood; 4. அமைதி, mildness, see சாத்மிகம்; 5. கனலிப் பூடு, apple bladder plant—Turpinia pomifera.

சாந்த ரூபம், யோகத்தில் அசையாநிலை, entire passivity as in yoga practice.

சாந் தர்ப்பணம், சாந்தப் படுத்தும் முறை, soothing measures.

சாந்த வாரி, தண்ணீர்விட்டான், water-root—Asparagus racemosus.

சாந்த விரேசனம், சுகபேதி, mild purgative; medicine which gently opens the bowels—Aperient.

சாந்தருத்தம், மாவிலிங்கம். lingam tree—Crataeva religiosa.

சாந்தனி, நோயின் குரூரத்தைத் தணிக்கும் மருந்துகள், soothing medicines which go to lessen the virulence of the disease—Depressant. It is opposed to stimulant; 2. சதையை மிருதுவாக்கு மருந்து, soothing medicine; an agent which diminishes the tone of the living tissues and causes relaxation—Emollients.

சாந்தனிகம், சந்தனக் கலவை, a perfume chiefly composed of sandal with other ingredients

சாந்தவரை, சாகும் வரை, till the time of death.

சாந்தன், காந்த பாஷாணம், a mineral poison containing magnetic compound; 2. சாந்த குண முடையவன், man of amiable quality.

சாந்தானிகன், மகப பெறுதலை விரும்புவோன, one desirous to have children to extend progeny.

சாந்தி, ஆற்றுதல், cure; 2. தோஷத்தைப் போக்கல், a ceremonial cleanliness effected with the observance of solemn supplication by way of public worship; 3. கழிப்பு, the removal of evil effects or influences of planets or demons; 4. ஓமம், litany effected in presence of sacrificial fire; 5. தணிவு, mildness, 6. பரிகாரம், antidote; 7. சாந்தம், composure of mind; 8. சாந்தி கலியாணம், nuptials; 9. பிராய சித்தம், atonement; reconciliation.

சாந்தி கழித்தல், சாதாரணமாய்க் குழந்தை கட்குண்டான தோஷங்களை, மந்திரத்தினால் நிவர்த்தி செய்தல், the removal of evil effects of the planets or the influences of devils and demons by religious rites or mantrams laid down in Tantric System.

சாந்தி செய்தல், கழிப் பெடுத்தல், (*In Mantric science*) the removal of evil influences by ceremonial magic, see சாந்தி கழித்தல; 2. ரோகத்தைத் தணிவு படுத்தல், (*In Therapeutics*), to give a palliative treatment.

சாந்திச் சரக்கு, ஓமத் திரவியம், the requisites for sacrificial ceremony.

சாந்தி மருந்து, சாந்தப் படுத்தும் மருந்து, pallative medicine; 2. (*In Occult Science*), கழிப்பு மருந்து, that which enters in the magical rites or observances for averting the influences of devils; 3. ஓமத் திரவியம், the requisites for sacrificial ceremony. See சாந்திச் சரக்கு.

சாந்திரகம், இஞ்சி, green ginger; 2. சுக்கு, dried ginger.

சாந்திர மேகம், மூத்திரமானது மூத்திரப் பையில் ஒரு நாள் தங்கி யிருந்து, மறு நாள் பளிங்கு நிறமாய் சீழுடன் கலந்து, நாற்றத்துடன் ஒரு தடவைக்கு ஒரு படி யிறங்கும் ஓர் மேக நோய். இதில் பீசம், கோசம். கடுத்துக் காணும், a urinary disease in which the urine which is detained in the bladder for a day, is subsequently discharged in large quantities (a measure at a stretch), of course with a milky appearence, often attended with pus and offensive smell—Chyluria.

சாந்திரம், சந்திர காந்தம், moon-stone; 2. நெருக்கம், density; thickness or compactness.

சாந்திருசு, ஓர் பிசின் மரம். sandarach gum tree; Tasmanian pine—Callitris quadrivalvis alias Callitris rhomboidea; 2. ஓர் பால் மரம். இது எப்பொழுதும் பச்சென்று இருக்கும், 20 அடி உயரம், இலைகள் தட்டை, பிசின் இயற்கையாகவே பட்டையி னின்று வழியும். ஆயினும் சாதாரணமாய் குதறி எடுப்பதுண்டு. பூர்வத்தில் இது பேர் போன மருந்தாக விருந்தது. இப்போது மெருகெண்ணெயாக உபயோகப் படுகிறது. இது மராக்கோ என்னும் ஊரி லிருந்து இவ்விடத்திற்கு இறக்குமதியாகும், an Indian resin tree—Rhus capallinum. It is an ever green ornamental tree 20 feet high, flat leaves, the resin exudes naturally from its bark, but is commonly obtained by incision. Formerly, it was a widely renowned medicine. It is now used as an ingredient in varnishes. It is imported from Morocco.

சாந்து, சந்தனக் குழம்பு; sandalwood paste; 2. பூந் தாது, pollen of flowers; 3. மலம், filth; feces; 4. வாசனைத் தூள், fragrant dust or powder; 5. விபூதி, sacred ashes; 6. சந்தன மரம், sandal wood tree.

சாந்துகா, வெளிச்சிப பிசின், the gum of wood apple tree.

சாந்துப் பட்டை, வாசனைப் பட்டை, the fragrant bark of any tree.

சாந்துப் பொடி, வாசனைப் பொடி, a perfumed dust; scented powder.

சாந்துருவம், சுண்ணச் சீலை, a cloth steeped with slacked lime; lime plaster.

சாந்தை, கனலிப் பூடு, Turpena homifera; see சாந்தம்.

சாபக்கல், தவளைக் கல், iron stone; any ore of iron; 2. பெரியோர சாபத்தால் மனிதர் கல்லாக சமைந்த சிலை, stone being the product of conversion of a person occurred by the curse of great sages.

சாப சன்னி, பெரியோர்களின் கோபம் அல்லது சாபத்தினாலேற்படும் ஓர் வகை சன்னி apoplexy brought about by the inordinate passion and wrath or by curse of great men.

NOTE.—Such a psychological power may produce changes in the physical body; and such a power in men of the present day civilization is too weak, their will too feeble and their faith too much pervaded

by doubt to produce the desired effect; and such a power cannot be attained unless and until the spirituality together with morality is higher advanced.

சாப சுரம், பெரியோர்களின் சாபத்தினு லுண்டாகும் சுரம், fever due to the curse of sages or people spiritually great; 2. அபிசாப சுரம், இது பூர்வ கருமத்தினுல் வந்து சேருமெனக் கொள்ளப்படும், fever due to spiritual or Karmic causes as, curses of great men; 3. ஏவல் சூனியம் முதலிய மாந்திரீக சேஷ்டைகளினுல் வந்து நேரும் சுரம். இதனுல் தாகம், இளைப்பு ஏற்படும், (*In Magic*) fever ushered in through the dynamics of deadly incantations employed in sorcery, witchcraft etc. Thirst and fatigue are the concomitants.

சாபஞ்சியம், சீரகம், cummin seed.

சாபத்திரி, see சாதி பத்திரி.

சாப மூலி, தன்னுடைய சக்தியையும் குணத்தையும் வெளி காட்டாதபடி, சாபத்தினுல் கட்டுண்ட பச்சிலைகள். பெருங் குமிழ், வல்லாரை, சிறியாணங்கை, பெரியாணங்கை, கருந் தும்பை, கரிசல், பெருந் தும்பை, பூனைக்காலி, இருவேலி, நத்தைச் சூரி, கவிழ் தும்பை முதலியன, *herbacious plants* whose powers and efficacy are restricted or otherwise confined by curse of great men, according to Tamil Medical sciences and they are:—Kandahar tree; Indian pennywort; small nangay and large nangay of *the Polygala genus*; black Cucas; eclipse plant; large toombay, cat bean; khus khus root; button wood; stooping leucas etc.

NOTE.— It is said that the occult virtues and wonderful active powers of certain plants in Nature are purposely *restricted* or otherwise rendered to lie dormant by the curse of great Siddhars and Yogis of India; and hence they are required to be expelled by charms or other faculties of mind according to the laws of nature and this must be done under a certain and *suitable constellation* of stars to render it fit for application. Otherwise, the herb will not give the desired effect. The appropriate Mantrams are given in Siddhars treatise on Magic.

சாபம், அவுபல பாஷாணம், one of the 32 kinds of native arsenics; 2 மூலிகைச் சாபம், curse of great men on efficacious herbs as regards its potency. See சாப மூலிகை.

சாபாலகம், குறிஞ்சா, scammony swallow-wort — Secamone emetica.

சா பிள்ளை, செத்து பிறக்கும் பிள்ளை, a child *born dead—Still-born*, 2. பிறந்தவுடன் சாகும் பிள்ளை, child born alive but died immediately after.

சா பீசம், தேர்ச்சி யடையாத பிடுக்கின் விதை, testicle of defective sexual development, 2. விரை யடித்த பீசம், castrated testicles: 3. பிடுக்கில் இறங்காத பீசம், undescended testicle i.e. testicles which failed to descend into the scrotum—Retained testicle.

சாப்படுதல், உண்ணல், see சாப்பிடுதல்; 2. கொலை யுண்டல், *to suffer death*.

சாப்பாடு, உணவு, food; 2. ஆகாரம், victual.

சாப்பாட்டு நேரம், உணவு கொள்ளுங் காலம், time of eating or taking food, dining time.

சாப்பாட்டு ராமன், உணவை விரும்பி பிருசியாகக் கொளவோன், a connoiseur in food; an epicure; a glutton.

சாப்பிடுதல், உண்ணல், to eat, 2. மருந்து முதலியவை உட்கொள்ளல், to take internally as medicine or decoction.

சாப்பிரா விதை, குரங்கு மஞ்சி விதை, arnotta; monkey turmeric — Bixa orellana see also சாய விரை.

சாப் பிள்ளை, கருப்பத்திலேயே இறந்து வெளிபட்ட குழந்தை, still-born child or fetus.

சாப்புக் கல், பொன், வெள்ளி, முதலிய உலோகங்களை நீளமாக உருக்கி காய்ச்ச வேண்டி கம்மாளர் உபயோகிக்கும் ஓர் செங்கல், an ordinary brick mould made into grooves by goldsmith for purposes of casting melted silver to obtain bars.

சாப் பூச்சி, சப்தத்தினுல் மரணத்தை அறிவிக்கும் ஓர் வகை சிறு வண்டு, a small beetle whose ticking has been superstitiously supposed to prognosticate death — Death-watch.

சாப் பேறு, see சாப் பிள்ளை; 2. பெற்று பெற்று இறக்கக் கொடுக்கும் பிள்ளை; children doomed to death every time they are born.

சாப்பை கோண்டான், ஓர் நாரை, a kind of spoon-bill crane —Platalea.

சாமகம், மிருதுவாக்கு மருந்து, any medicine which lessens the effects of irritation—Demulcent.

சாமக் கிரி, உணவுப் பொருள், food-stuff; articles of fare.

சாமக் கிழங்கு, ஓர் வகைக் கிழங்கு, the root of a plant—Colocasia antiquorum.

சாமக் கோழி, பாதி ராத்திரியில் அதாவது நடு சாமத்தில் கூவும் கோழி, a cock crowing at midnight, as indicating the midnight watch.

சாம சத்து, இரசம், mercury — Hydrargiri; 2. மிளகு ரசம், pepper water.

சாமசம், யானை, elephant.

சாமசாதி, ஆண்சாதி நான்கு வகைகளில் ஒன்று, (*In Sexual Science*), one of the four classes of men divided according to their lust.

சாமச் சுரம், இரவு அல்லது பாதி ராத்திரியில் வரும் சுரம், night or midnight-fever.

சாமண்டகம், சரக் கொன்றை, cassia—Cassia fistula.

சாமத்தியம், பக்குவம், puberty of a female. See சாமர்த்தியம்.

சாமத்திரம், கருங் காலி, black wood—Diospyos ebenum.

சாமந்தி, செவ வந்தி அல்லது செவந்திப் பூ. பொதுவாக, இது நாட்டுச் சாமந்தி, சீமைச் என இரு வகைத்து. இது நிறத்தைக் கருதி மூன்று வகைப் படும்—மஞ்சள், வெள்ளை, நீலம். இது சாதாரணமாய் தோட்டத்தில் பயிராகும். இதன் வேரை மெல்ல விறுவிறுப் புண்டாகும். இதை மிளகோடு சேர்த்துக் கஷாய மிட்டு மேக வெள்ளைக்குக் கொடுக்க லாம். ஆனால், சீமை சாமந்தி அபூர்வமாய் கிடைக்கும். இது மருந்திற்கு மிக்க உப யோகப் படும். இப் பூவின் வகைகளை அடி யில் குறிக்கப் பட்டுள்ளன, Indian chamomile or Chinese flower— Chrysanthemum indicum alias Pyrethrum indicum alias Anthemis nobilis. It is generally classified into two varieties viz:—Europe and India chamomile. Indian chamomile consists of three kinds according to their colours viz—yellow, white and purple. They are commonly met with in gardens. The root of this, when chewed gives tingling sensation to the tongue; plant administered in decoction with black papper is recommended for gonorrhoea; whereas Europe Chamomile which is rarely found is very useful in medicine. It usually consists of two kinds. The different varieties are mentioned below:—

1. நாட்டு சாமந்தி — தோட்ட சாமந்தி, garden chamomile — Chrysanthemum indicum.
2. மஞ்சள் சாமந்தி, yellow chamomile —Chrysauthemum coronarium.
3. வெள்ளை சாமந்தி, white chamomile —Chrysanthemum crinatum.
4. சிவப்பு சாமந்தி, red chamomile—Chrysanthemum roxburghi.
5. நீல சாமந்தி, blue chamomile — Chrysanthemum genus.
6. சீமை சாமந்தி, Europe chamomile —Anthemis nobilis.
7. துலுக்க சாமந்தி, Turkish chamomile—Tagetus erecta.
8. பாரசீக சாமந்தி, same as No. 6.
9. ஆட சாமந்தி, another different va-variety—Helicteres isora.
10. காட்டு சாமந்தி, wild chamomile — Matricuria chamomilla.

N.B.—Though Nos. 5 to 9 are known as 'Samandhi' they do not seem to belong to the Chamomile genus, as they entirely belong to different botanical groups.

NOTE.—This Chamomile flower is said to be a flowering plant of divine origin and it was brought to this world by a Rishi. There seems to be a legend behind it and a mythical account about it in a Purana known as செவ்வந்திப் புராணம்.

சாமந்தி, (சா + மந்தி) செத்த பெண் குரங்கு, a female dead monkey; 2. காட்டுச் சாமந்தி, wild chamomile — Matricaria chamomilla, சீமைச் சாமந்தி, foregin chamomile—Anthemis nobilis.

சாமந்திப் பூ தைலம், சீமை சாமந்தித் தைலம், இதை குன்ம வாயு, வாயுவினு லேறபடும் வயிற்று வலி முதலிய நோய்களுக்கு உப யோக மாகும், oil of chamomile—Oleum anthemidis. It is an oil distilled from Europe chamomile flowers and is useful in dyspeptic flatulence, flatulent colic etc.

சாம புட்பம், பாக்கு மரம், areca-nut—Areca catechu.

சாம போத்திரி, தேங்காய், cocoanut.

சாமம், கருமை, blackness; dark - blue colour; 2. காபி, aconite; 3. ஆனை நெரிஞ்சில், elephant thistle—Pedalium murex; 4. அறுகு, sacrificial grass — Agrostis linearis, 5. இரவு, night; 6 பாதி ராத்திரி, midnight; 7. பலவீனம், weakness; 8. மரணம், death; 8, 7½ நாழிகை கொண்ட காலம், a period of three hours; 9. ஓர் சாமம், a watch indicating measure of time—first jamam *i e.* 6 to 9 p.m.; 10. ஓர் குருவி, a sparrow; 11. பச்சை, green colour; 12. பெருங் குறிஞ்சி, large-leaved conehead—Strobilanthus ciliatus.

சா மயக்கம், இறக்குந் தருவாயில காணும் மெய மயக்கம், trance or conscious giddiness which simulates death—Death trance.

சாமரங்காரி, நிலவு காய், an unknown plant, perhaps a variety of உகா, sack tree.

சாம ரசம், பசு முன்னை, fire-brand teak — Premna latifolia.

சாம ரசியம், the sense of enjoyment arising from the union of male and female. It is a term used symbolically.

சாமர புட்பம், பாக்கு மரம், areca-nut tree; 2. மாமரம், mango-tree — Mangifera indica.

சா மரம், சிவதை, turpith root — Ipomaea turpethum, 2. அசோகு, asoka tree — Polyalthia longifolia.

சாமராதம், பொன், gold; நிலவு காய், see சாம ரங்காரி.

சாமரிகம், குதிரைக் குளம்படி, horse - hoof plant—Saggitaria obtusifolia.

சாமரிகரம், } சாமரீகம், } பொன், gold.

சாமர்த்தகா, புல்லூரி, a parasitic plant.

சாமர்த்திய கலியாணம், ருதுசாந்தி, ceremonies performed at a girl's attaining of puberty.

சாமர்த்திய மாதல், ருதுவாதல், attaining puberty; maturing to age.

சாமர்த்தியம், பெண்ருது, girls puberty.

சாமள பித்தம், ஓவகை பித்தம். இதில் பித்த நீரானது அளவுக்கு அதிகமாய்த் தீய்ந்து பக்குவமாயிருக்கும் பித்தத்துடன் சேர்ந்து பச்சையும் நீலநிறமா யிருக்கும், the bile which is bluish-green in colour due to its being saturated with the overburnt bile in the system.

சாமளம், பச்சை நிறம், green colour.

சாமள ரோகம், பெண்களுக்கு உடம்பு முழுவதும் பச்சை நிறத்தையுண்டாக்கும் ஓர் நோய். இது சாதாரணமாக சூதகக்கோளாறினால் சோகை யுண்டாகி, அரிசி, சாம்பல், மண் முதலியவைகளில் பிரியப்பட்டு தின்பதினால் பசிகுறைந்து, தலைவலி, குடல் பாதை சூதகப் பைத்தியம் முதலிய குணங்களையுண்டாக்கும், சில சமயம், சூதகம் வெளிப்படும் காலத்தில் பாதமும் வீங்கும், a form of anemia attacking women and imparting a greenist-yellow colour to the skin, due to the irregularities of the monthly courses in women—Green sickness or Chlorosis. It is marked by depraved appetite due to eating dry rice, ashes, mud etc, throbbing pain in the head, uneasiness in the bowels arising from constipation, hysterical symptoms etc. It is sometimes attended with swelling of the feet at the menstrual periods.

சாமளா, இது கண்ணுக்குத் தோன்றாத கருநிற அணுத் திரள். இது ஆகாயத்தி னின்று பூமியில் இறங்கும்போது காற்றுடன் சம்பந்தபட்டு விஷக்காற்றாக மாறி, பின் மனிதரின் சிரத்தில் தங்குவதால் வாதபித்த சிலேட்டும தொந்தங்களுக்கு ஏற்க, ரத்தம் முறிந்து வாந்திபேதி முதலிய கொள்ளை நோய்களுக்கு காரணமாகும். மலே சுரம், விஷ சுரம், இவைகளுக்கும் இதுவே மூலமாகும், a black microspic bacillus floating in the atmosphere; and while descending, it gets mixed with the air rendering it poisonous. It is said to enter the body, and according to the three humours of the system, alters the condition of blood, exhibiting all symptoms of cholera. It is said that Malaria and Mountain fever are also due to these bacilli—Bacterium cholera.

NOTE—When it becomes disseminated by means of drinking water, it takes an epidemic form. Then, it is known as Wate-borne Cholera. The Asiatic Cholera is produced by the bacillus—Vibrio-massowah. Many other epidemic diseases are also attributed to this.

சாமளா தேவி, பார்வதியின் ஓர் பச்சை ரூபம், a form of the goddes Parvathi, green in appearance.

சாமன், ஓர் சமுத்திரமீன், a sea-fish.

சாமாதி சாரம், உண்டவுணவு செரியாமல் உண்டாகும் பேதி, அதாவது அதிசாரபேதி, frequent motion due to indigestion—Dyspeptic diarrhoea.

சாமானிய அசீரண நோய், பொதுவாக மலபந்தம் அல்லது பேதி, ஆயாசம், அபானவாயு இன்மை, வயிறு பொருமல் முதலிய குணங்களுள்ள அசீரண நோய், indigestion with common symptoms such as constipation or diarrhoea, fatigue, absence of windy nature, rumbling noise in the stomach.

சாமானிய சிகிச்சை, சாதாரணமாக செய்யக்கூடிய வைத்தியம், treatment accorded in all possible ways.

சாமானிய சுரம், ஓர்வகை சுரம், pyrexia.

சாமி, பொன, gold, see சாமீகரம்.

சாமி நாதன், தந்தையாகிய சிவனுக் குபதேசித்த சாமிநாதக் கடவுள், god Saminatha who gave secrete instruction to the God Siva, his father.

சாமியம், போசனம், food.

சாமிலம், புளிவஞ்சி, a sour plant, perhaps a species of rattan.

சாமீகரம், பொன், gold.

சாமீப மூலி, பொன்னூமத்தை, gold-coloured datura—Dhatura fastuosa alias xanthium orientale.

சாமீபம், கடவுளின் சமீபத்தில் வாழ்தல், living in close proximity to the deity, thus indicating a state of beatitude, கடவுளை நேராகப் போற்றி வாழுதல், living with offer of prayers direct to God.

சாமீப் பியம், see சமீபம்

சாமீவம், பொன், gold.

சாமுகம், இறந்தவர் முகத்தைபபோல் வெளுத்தமுகம், a deadly pale face, or tallow face; 2. பயங்கரமான முகம், ghastly countenance.

சாமுண்டி, அவுரி, common indigo ; indigo plant—Indigofera tinctoria ; 2. நாணல், reed ; 3 பொன்னு விரை, uniglandular senna — Cassia sophera alias Cassia Occidentalis ;

சாமுண்டிகம், நாணல், reed ; 2. பேய்த்துவரை, bitter bengal gram.

சாமுண்டிகி, பொன்னுவிரை, see சாமுண்டி.

சாமுதம், கடுக்காய், gallnut — Terminalia chebula ; 2. கோரை, sedge-grass.

சாமுத்திர லவணம், கடலுப்பு, sea-salt.

சாமுத்திராதி சூரணம், பரிணமசூலை நிவர்த்திக்காகக் கொடுக்கும் ஆயுள் வேத மருந்து. இதை மற்ற சூலைகளுக்கும் கொடுக்கலாம், an Ayurvedic medicine prescribed for dyspeptic colic. It may also be given for other kinds of colic.

சாமுத்திரிகம், பொதுவாக மனிதர்களின் பலவித அங்கங்களின் வடிவம், மனிதரின் உயரம், கை கால் நீளம், பாதம், உடம்பின் அமைப்பு முதலியவைகளைப் பற்றியும், அதனதன் சம்பந்தமான விஷயங்களும், காரணங்களுடன் எடுத்துக் கூறும் நூல். உடம்பி னுறுபபுகளின் இலட்சணங்கள் சாதாரணமாய் சோதிடம், நாடி, ரேகை நூல், இலட்சண காவியம், கொக்கோகம், முதலிய நூற்களில் சொல்லி யுள்ளன. ஆண் பெண் உடம்பின் லட்சணங்கள் இந் நூற்களில் அடங்கி யுள்ளன, a general science which dwells on the shape of different organs or visible members, shape, height of person, lengths of arms and feet, symmetry of the body etc. and draws inference from the whole ; the study of expressions depicted on the exterior of the body in relation to the structure, situation and uses—Physignomical anatomy. It includes the interpretations of severed sciences such as Astrology, Nadi, Palmistry, Chiromancy, Erotic science of Kokkogam, referring to the several organs of the body—both of the male and the female.

NOTE.—A sciencee very similar to this was introduced to Europe from Arabia It is purely Palmistry.

சாமுத்திரிக விலக்கணம், அங்கவிலட்சண நூல். இது சுப்பிரமணியர் அகஸ்தியருக்கு உபதேசித்ததாக சொல்லப்படும, இதில் உள்ளங்கை இரேகையைப் பற்றி விவரம் கூறும், the science relating to the exterior organs of the body in relation to the structural symptoms, situation, and uses. It is a treatise said to have been offered by God Subramany to Agastya, the Tamil sage. It also dwells

on the marks on the palms (palmistry) in relation to the body.

NOTE.—These should not be confounded with the Nadi, which is an astrology based on Palmistry referring to the marks on the palm of an individual and calculated from the date of one's birth. This Nadi is peculiar work in the Tamil language; and could not be found elsewhere, even in Sanskrit.

சாமுத்திரிகன், அங்க இலட்சணம் சொல்லுவோன், one who is versed in palmistry and physiognomical anatomy together with interpretations of those marks on the body—Chiromancer.

சாமுன், சாமுன்னம், } இறப்பதற்கு முன், before death — Ante-mortem. It is opposed to post-mortun.

சாமுஞ்சி, see சாமுகம்.

சாமுத்திரம், கடலுப்பு, sea-salt.

சாமுலி, ஊமத்தை, dhatura — Dhatura stramonium.

சாமேசிகம், சாமையரிசி, see சாமை.

சாமை, இது எங்கும் விளையக் கூடியது மற்ற தானியங்களை விட சீக்கிரத்தில் முளையும். ஏழை சனங்கள் இதை மிகுதியாக உபயோகிப்பார்கள். ஆயினும், இதனை சாதம் உண்ணில் வாதரோய, சயம், சிலேட்டும விருத்தி, வீக்கம் முதலியவும், இதன் கஞ்சியால் முத்தோஷங்களும், விலகுவதன்றி சுக்கிலம் விருத்தியாகும். அன்றியும், பிரமேகம், தாகசுரம் போம், தாது புஷ்டியுண்டாம். இதில் சிவப்பு சாமை, காட்டு சாமை என இரண்டு இனங்களுண்டு, Deccan grass; little millet—Panicum miliare alias Panicum frumentaceum. It is grown all over in Southern India; and the quickest growing of all millets. It is known of its special utility to the poorer classes. The food is a wholesome and nourishing grain, and is useful in rheumatic complaints, consumption, excess of phlegm in the system, swelling etc. Conjee prepared from it, is said to remove all the derangements arising from the three humours and contribute towards the secretion of semen in the system. There are two kinds of this species viz:—Red millet — Panicum egyptiacum and white wild millet—Panicum prostratum.

சாமை, see கற்சேம்பு; 2. பெரு நெரிஞ்சில்; அல்லது ஆனை நெரிஞ்சில், crown thorn —Pedalium murex.

சாமைக் கஞ்சி, சமையை மாவாக அரைத்து உணவாகக் கொள்ளும் கஞ்சி, a liquid diet boiled down from the little millet flour and water and used as food.

சாமைக் கிழங்கு, see சேப்பங் கிழங்கு.

சாமைச் சாதம், சாமை அரிசியைக் கொண்டு சமைத்த உணவு, food prepared from shamay (millet) see சாமை.

சாமைப் புல், பூப் புல், shamay millet or grass—Eragrostis plumosa.

சாமை யரிசி, சாமையைக் குத்தி எடுத்த அரிசி சாதம். இதனால் தாகசுரம், பிரமேகம், மகத்வாத நோய், சோபா ரோகம் போம், husked millet (Italian). Its food forms a remedy in cases of fever attended with thirst, urinary disease, rheumatic complaints and anemia.

சாமை யரிசிக் கஞ்சி, சாமையை சமைத்த கஞ்சி. இதனால் வீக்க தோஷம், வாதாதி முத்தோஷம் போம், conjee prepared from the millet rice. It is prescribed in cases of swelling and the derangement of the three humours.

சாம்கலி, பருத்தி, cotton—Bombax malabaricum.

சாம்பகம், நல்ல பாம்புத் தோல், the cast-off skin of a cobra.

சாம்பகி, நெரிஞ்சில், calotrope — Tribulus terrestris.

சாம்ப கிருமி, சுடுகாடு, cremation ground.

சாம்ப சதா சிவன், சிவனார் வேம்பு, shiva's neem—Indigofera asphalathoides.

சாம்ப சிவம், அறுகம்புல், sacred grass.

சாம்ப நீர்ச் சாரம், கட்டையை எரித்து சாம்பலாக்கி, அதை தண்ணீரில் கரைத்து தெளிவித்த சாரம், water impregnated with alkaline salt imbibed from the ashes of wood—Lye.

சாம்ப மாவலு, நெருஞ்சில், see சாம்பகி.

சாம்பம், ஆனை நெருஞ்சில், big caltrops—Pedalium murex.

சாம்ப ருப்பு, (சாம்பர் + உப்பு) சாம்பலினின்று எடுத்தவுப்பு. இது பொதுப்பட எல்லாவித காரவுப்பையும் குறிக்கும், an alkaline salt prepared or extracted from wood-ash. It is a general term referring to Potash, Soda etc.

சாம்பர், பூண்டு, மரம், சாணி, முதலியவைகளை எரித்தலினு லுண்டான சாம்பற் காரம், an alkaline salt, obtained from the ashes of burnt plants, trees, animāl dung etc ; 2. சாமபல், ashes ; சாகம்பரி உப்பு ; the best and the purest evaporated salt obtained from Sambhar lake in Rajputana.

சாம்டர் சாரம், Sambhar lake salt. See சாம்பர்.

சாம்பர் லவணம், see சாம்ப லுப்பு.

சாம்பலச்சி, எவட்சாரம் அலலது வெடியுப்பு, nitre—Potassium nitrate.

சாம்ப லாக்கல், கொளுத்தி சாம்பலாகச் செய்தல், to incinerate ; 2. பற்ப மாக்கல், to calcine.

சாம்பலி, பெருநாவல், jambo tree—Eugenia Jambolina.

சாம்ப லுப்பு, மரவுப்பு, carbonate of potash ; 2. சாம்பலுப்பு potash —Salt of tartar ; 3. சாம்பலுபபு, சோடா முதலிய உப்புகள் அடங்கிய அனேக பூண்டுகளை எரித்து, அதினின்று காரசார வுப்புகளை எடுதது மருந்து தயாரிதது, வைததிய சிகிச்சைகளில் குன்மம், நீர்க் கவிசை, மகோதரம், மூத்திரக் கல் ரோகம் முதலான வியாதிகளுக்கு உள்ளுக்கும், வெளிக்கும் உபயோகிப்ப துண்டு. இவ்விதமான உப்புகள் அடங்கிய பூண்டுகள் அடியிற் கண்டுள்ளன, அவையாவன, the ashes of a number of plants containing more or less potash, soda, etc. Medicines are prepared from these alkaline ashes and employed both externally and internally. Thep are given in cases of dyspepsia, ascites, enlargement of the abdominal viscera, calculus affections etc. A list of these plants is given as mentioned below :—

1. வாழை யிலை யுப்பு, salt of plantain leaf.
2. திராட்சை யுப்பு, cream of tartar—Tartrate of potash.
3. மூங்கி லுப்பு, bamboo salt—used in cases of bilious complaints, consumption, cough etc.
4. மர வுப்பு, wood ash or salt of wormwood—Potassa.
5. கார வுப்பு, alkaline ashes (used for dyeing. See சார கருமம்.
6. நாயுருவி யுப்பு, Indian burr ash. It is used in cases of after-birth.
7 கழற்சி யுப்பு, bonduct-nut ashes used for testicle complaints.
8. எருக்க லுப்பு, madar ashes,
9. இலைக் கள்ளி யுப்பு, leaf milk-edge ashes.
10. திருகு கள்ளி யுபபு' round milk. hedge ashes.
11. வெட்பாலை யுப்பு, Tellicherry bark ashes.
12. நொச்சிச் சாம்பல், Vitex ashes. See சார கருமம்.

*N.B.*—Although salts used to be obtained from the ashes of plants and used formerly in medicine and for various purposes, still no detail is given about them, as for instance, in Nos.1, 4, 7 & 12.

NOTE.—The term 'சாமப லுப்பு' literally means salt obtained from for the ashes, which usually refer to those derived from the burning of plants Such ashes generally contain salts such as, Potash, Soda, Caustic potasb Caustic soda etc., but, which ash contains which salt, is not definitely known, although the quality and uses of such salts are clearly mentioned

சாம்ப லுப்புச் சத்து, பூண் டெரித்த சாம்பலினின்று வடிதத சதது, a metallic essence extracted from the ashes of plants—Potash.

சாம்ப லுப்பு நீர், சாம்ப லுப்பு கரைதத நீர், wood-ash ; water in which the wood-ash is dissolved—Lixium.

சாம்ப லொட்டி, எருக்கு, madar plant.

சாம்பல், see சாம்பர் ; 2. விபூதி, sacred ashes from cow dung ; 3. நாவல், jambo tree—Calyptranthes caryophillifolia ; 4. பற்பம் metallic ashes or calcined metallic oxides.

NOTE.—Ashes are obtained by the incineration of wood or by burning many vegetables for purposes of extracting salt from a solution of this.

சாம்பல் கிளுவை, சாம்பல் நிறமான கிளுவை, grey balsum—Balsmodendron berryi.

சாம்பல் தணக்கு, see சாம்பற் தணக்கு.

சாம்பல் நாரையான், a kind of grey heron.

சாம்பல் நிறம், சாம்பல் வர்ணம், ash-colour,

சாம்பல் படை, ஓர்வித சரும நோய், psoriasis; 2. படைச் சொறி, a cutaneous affection marked by exfoliation of the outer skin.

சாம்பல் மரலி, இருநாவல், ruddy black plum —Eugenia rubicunda.

சாம்பல் மொந்தன், சாம்பல் நிறமான மொந்தன் வாழை, ash-coloured stout plantain —Musa paradisiaca (troglodytarum).

சாம்பல் வர்ணர்சி, see சாம்பல் வர்ணி.

சாம்பல் வர்ணி, செருப்படை, a low spreading plant found in rice fields after harvest—Coldenia procumbens.

சாம்பல் வாழை, see சாம்பல் மொந்தன்.

சாம்பவம், see சம்புநாவல்; 2. பொன், gold.

சாம்பவி, பெருநாவல், large-fruited jaumoon —Eugenia jambos; 2. கௌரி பாஷாணம், a prepared native arsenic—Yellow oxide of arsenic; 3. நாவல், jamboo tree; 4. see சாம்பல்.

சாம்பவிச் சக்கரம், ஸ்ரீசக்கரத்தைப் போன்ற ஓர்வகை முககோண மந்திரச் சக்கரம், a magic triangle resembling the diagram of 40 triangles. See அக்கினி கண்டம்.

சாம்பவியார் விந்து, கௌரி பாஷாணம், see சாம்பவி.

சாம்பவி வழக்கை, சிரசின் மூளை, brain of the head.

சாம்பவி விந்து, கௌரி பாஷாணம், see சாம்பவி; 2. புணர்ச்சியில் அதிக காமத்தால் பாயும் நாத நீர், the fluid discharged from the vagina due to a woman's excessive passion during sexual intercourse.

சாம்பவீ ரசம், சகல சுரங்களுக்கு பார்வதிதேவியாரால் சொல்லப் பட்ட ஆயுர் வேத மருந்து, an Ayurvedic preparation announced by Goddess Parvathi. It is prescribed for all kinds of fever.

சாம்பற் கத்தலை, சாம்பல் நிறமான கத்தலை யென்னும் ஓர் கடல் மீன். இது 3 அடி நீளம். சாப்பிட உதவாது, a grey-coloured sea-fish—Sciaena albida alias Corvina albida. It is about 3 ft. long; not esteemed for table.

சாம்பற் கற்றாழை, சாம்பல் நிறமான ரயில் கற்றாழை. இது வீக்கத்திற் குதவும், an ash-coloured aloe found grown near the railway fencing; Rail aloe—Aloe americana.

சாம்பற் காட்டுக் கோழி, gray jungle fool of Indian wood cock—Scolopox indica.

சாம்பற் காரசத்து, மரவுப்பு, இது பூண்டுகளை எரிப்பதினால கிடைக்கும், a popular name for vegetable alkali in an impure state procured from the ashes of plants—Potash.

சாம்பற் கிட்டம், கண்ணாடி செய்வதற்குபயோகப்படும் சாம்பல், the ash which is used for manufacturing glass—Vitrified ash.

சாம்பற் கிருமி, சாம்பல் நிறமான புழு, gray-coloured worm.

சாம்பற் கிளுவை, ஓர் கிளுவை மரம், gray balsam—Balsmodendron berryi.

சாம்பற் கீரை, சிறு பசலை, creeping purslane; small-leaved spinach.

சாம்பற் சத்து, see சாம்பற் காரசத்து.

சாம்பற் சாரநீர், see சாம்பநீர்ச் சாரம்.

சாம்பற் சுறு, சாம்பல் நிறமான சுறுமீன், grey shark—Carcharias macloti.

சாம்பற் தணக்கு, ஓர் தணக்கு, white catamaran tree—Givotia rottleriformis

சாம்பற் தானிய சத்து, சாம்பலினும், தானியத்திலும் உண்டாகும் சத்து, potash phosphates found in the ashes and grains.

சாம்பற் பாரை, சாம்பல நிறமான ஓர் கடல் மீன், a sea-fish, gray pauray—Caranx nigrescens.

சாம்பற் பூசுணி, நீற்றுப் பூசணி, ash-coloured pumpkin—Cucurbita alba.

சாம்பற் பூத்தல், உடல் சாம்பல் நிறமாதல், turning grey in colour as body.

சாம்ப ஞரை, சாம்பல் நிறமான நாரை, an ash-coloured crane.

சாம்பாகினி, பசலைக்கீரை, garden spinach, Malabar night shade—Basella Cordifolia.

சாம்பாங்கி, பாஷாணம், poison.

சாம்பாட்டு, கறிப்புடோல், vegetable snake-ground—Trichosanthus anguina; 2. கருமபூலா, black honey shrub — Phyllanthus multiflorus.

சாம்பாரி, கறிப்புடோல், see சாம்பாட்டு.

சாம்பான், எருக்கிலை, madar leaf—Caltropis gigantea.

சாம்பியம், இருநாகபபூ, iron-wood of Ceylon —Mesua ferrea.

சாம்பிரம், பறங்கி பாஷாணம், a kind of prepared arsenic.

சாம் பிராச்சியம், இருவகை சமாதியி லொன்று இதனால், யோகி கோறியபோது உடம்பு அசைவற நின்று, சுவாசமடங்கி நாடிகள் சலனமற்று பிரேதமபோலாகி, மறுபடியும் சாக்கிரதநிற்கு திரும்புதல், one of the two kinds of Samadhi in which a yogi voluntarily reaches a state of insensibility, characterised by the total suspensions of respiration, and pulsation. He remains like a dead body for sometime and then regains or is restored to consciousness—Trance or catalepsy.

சாம்பிராணி, (சாம்—பிராணி) செத்தஜீவன், mortal being; 2. பிரமிபபூடு, bramia plant —Gratiola moniera.

சாம்பிராணி, மலாக்கா சாம்பிராணி மரம், இது சீயாம், ஜாவா, சுமத்திரா, போரணியூ முதலிய கீழ் மகா சமுத்திரத்தின் தீவுகளிலும் விளையும். இது மரத்தின் பட்டையி லிருந்து வடிந்து உலர்ந்து போன ஓர்வகைப் பிசின் போன்ற தைலம். முதலில் வருவது தான சுத்தமானதும் வாசனையு முள்ளது. இது சாம்பல் வர்ணமாயும், பளபளப்பான கட்டிக் கட்டிகளாக விருக்கும், வாசனையாயும், நாக்கி லிட உருசியாயு மிருக்கும். இது நாள்பட்ட இருமல், காசம், முதலிய சிலேட்டும ரோகங் களுக்கு உபயோகிக்க குணத்தைத் தரும். இதன்புகை இருமல், கெட்டநாற்றம், கொசு முதலிய விஷசெந்துக்களை நீக்கும். இதை ப்பன்றி நெய்யில் கலந்து களிம்பாக உப யோகிக்க, இரணம், வாதவலி, வாய்வு, வீக் கம் முதலியவைகள் தீரும். புகையை முகர, தலை வலி, விழி நோய், சலதோஷம் போம். அன்றியும், தொண்டைப் புகைச்சலை நிறுத் தும். வெட்டு காயங்களுக்குமேல் பூசலாம். மேலும், மூத்திரப்பை யழற்சி, நெஞ்செரிச் சல், நுரையீரல் கோளாறுகளையும் நீக்கும். இதினின்று தைலமும் இறக்கலாம். இது அடியில்கண்டபடி பலவகையுண்டு, malacca benzoin tree; Styrax benzoin—Parkia biglandulosa. The tree is also a native of Siam, Java, Sumatra and Borneo, Benzoin is the juice obtained by making incisions into the tree when it will be found deposited on the bark, being hardened to the exposure of air. That which flows first is the purest and the most fragrent. It occurs in dry and hard grey masses, rather shining, brittle, and tastes sweetish. The resin in medicine, is internally a stimulant and expectorant, and so, it is prescribed for cough, asthma and other phlegmatic diseases. Its smoke is deodorant and antiseptic and drives away mosquitoes and flies; and is highly useful in whooping cough. In the form of fumigation, it affords great relief in eye diseases, cold. etc. It also allays the throat irritation and is useful for smearing on cut wounds. It is employed in pyrosis, irritable states of the bladder, chronic affection of the lungs etc. Ointment is also prepared from this. Mixed with pigs fat, it is used as an ointment for ulcers, rheumatic affections, swelling etc. It consists of several varieties as mentioned below viz:—

1. மலாக்கா சாம்பிராணி, இதுவே சாம் பிராணி, Malacca benzoin or common benzoin—Styrax benzoin.
2. பறங்கிச் சாம்பிராணி, foreign benzoin—same as true olibanum—Boswellia serrata (typica).
3. மடையன் சாம்பிராணி அல்லது மட சாம்பிராணி, gum resin —Hardwickia pinnata.
4. பால் சாமபிராணி white dammer, a variety of No. 2.
5. மட்டி சாம்பிராணி, Parkia biglandulosa.

சாம்பிராணிக் களிம்பு, பன்றிக் கொழுப்பும் சாம்பிராணியும்சேர்த்துக் கொதிக்கவைத்த பூசுமருந்து, Benzoated lard—Adeps Benzotus. It is an ointment prepared by mixing melted lard, powdered benzoin and allowing them to boil for sometime.

சாம்பிராணி சத்து, சாம்பிராணிப பூ, அதாவது சாம்பிராணியை வாலைவி விட்டு இறக்கிய சாம்பிராணிப் பதங்கம் இது வெண்ணிற மும் காரமுமானது. மூத்திர ரோகத்தையும், மஞ்சள் காமாலையையும் போக்கும், benzoic acid—Acidum benzoicum ($HC_7H_5O_2$). It is an acid obtained by sublimation from the crude benzoin or by boiling it with an alkali. This is colourless and

pungent, and is found useful in removing phosphatic deposits in the urine, incontinence of urine in children and jaundice.

சாம்பிராணித் தூபம், சாம்பிராணிப்புகை, fragrant smoke or fumes of frankincense.

சாம்பிராணித் தைலம், சாம்பிராணியை நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடித்த தைலம், இது தலைவலி, சலதோஷம், இவைகளுக்கு உபயோகப்படும், oil of benzoin obtained by boiling benzoin in gingelly oil. It is applied for headache, cold etc.

சாம்பிராணிப் பதங்கம், சாம்பிராணியை பதங்கித்து சேகரிக்கும் வஸ்து, இப்பதங்கம் ஐரோப்பாவில் தயார்செய்து இவ்விடங்களுக்கு இறக்குமதியாகிறது. இது வெண்மையாயும் சிறு கம்பிகளாயும் இருக்கும். இதற்கும் சாம்பிராணியைப்போல் வாசனையுண்டு. புளிப்பும் காரமுமாய் இருக்கும், சாராயத்தில் கரையும், நெருப்பிலிட புகையும். இது இரைப்பு, இரத்த காசம், உடம்பு வறட்சி, மஞ்சகாமாலை, கல்லடைப்பு, மூத்திர வியாதி இவைகளுக்கு உபயோகப்படும். இதைத் தண்ணீரோடு கலந்து இரணம், புண் இவைகளை கழுவலாம். இதனின்று பாவனத்திரவம் இறக்குவதுண்டு, benzoic acid obtained from crude benzoin by sublimation or by boiling it with an alkali. It is prepared in Europe and exported to India. It is white and occurs in the form of needles which have an agreeable odour like benzoin; *it is sour and pungent*; It readily dissolves in rectified spirit and burns in fire. It is employed with advantage in cases of Asthma, Parasitic hemoptysis, dry skin, jaundice, calculous disorders, urinary disorders, etc. Diluted in water, it is used as a lotion for cleaning sores and ulcers, See also சாம்பிராணிச் சத்து.

சாம்பிராணிப் பாவனத் திரவம், சாம்பிராணித் தூள், சாம்பிராணிப் பதங்கம், தொலு, கற்றாழம் பால், சாராயம் முதலியவைகளைக் கொண்டு தயாரித்த திரவ வஸ்து. இதை ஆங்கிலேயர்கள் புண் புரைகளுக்கு உபயோகித்து வந்தார்கள், compound tincture of benzoin—Tinctura Benzoni composita. It is prepared with powered benzoin, storax, balsam of tolu, socotrine aloes, rectified spirit etc. [illegible]er the name of *Friars Balsam*, it [illegible]s long enjoyed great repute as a stimulant application to wounds, ulcers, etc.

சாம்பிராணிப் புகை, சாம்பிராணியைப் பொடிசெய்து நெருப்பிலிட்ட புகை. இப்புகை கெட்டநாற்றம், கொசு முதலிய விஷசெந்துக்களை போக்கும். ஆகவே, இதை நோயாளிகளின் படுக்கையறையிலும், காபி ஓட்டலிலும், ஆஸ்பத்திரியிலும் மிக்க உபயோகமாகும். சில நோய்களுக்கும் புகை போட இது உபயோகப்படும், benzoin smoke obtained by putting powdered benzoin in the fire. It is an antiseptic and removes bad smell and drives away mosquitoes, and other noxions insects. It is therefore used in sick rooms, coffee hotels, hospitals etc. It also serves as a fumigatory in some diseases.

சாம்பிராணிப் பூ, see சாம்பிராணி சத்து.

சாம்பிராணி மரம், சிவலிங்க மரம். இது ஆப்பிரிக்கா தேசத்தில் மிகுதியாக விளையும். இம்மரத்தை சாலைகளில் வைத்து பயிராக்கக் கூடியது. இம் மரத்திற்கு சவிகதி அல்லது மாவகம் என்றும் பெயர் வழங்கும், மரம் பெரியது; பட்டை வெண்மை, இறகைப் போன்ற இலைகள்; உருண்டையான பூக்கள் சாம்புகனித் தொங்கும்; பூவின மொக்குகள் சிகப்பு சகலாத்து உருண்டைகள் போலிருக்கும். இதன் காய்க்குள் சதைப் பற்றிருக்கும், அதை வெடுத்து மிட்டாய் பண்ணியாரத்திற் குபயோகப்படுத்தப் படும். இதன் பட்டை துவர்ப்பா யிருக்கும், Nitta tree—Parkia biglandulosa alias Mimosa pedunculata. The tree is a native of Africa. It is a good avenue tree. Tree large; white bark; feathery foliage; flowers in balls, pendulous from a long stalk; flower buds resemble balls of red velvet. The legumes are filled with a farinaceous pulp, which is made into a sweet meat. The bark is astringent. *Cf.* சாம்பிராணி.

சாம்பிராணி வத்தி, ஊதுவத்தி, incense stick.

சாம்பிராணி வுப்பு, சாம்பிராணி திராவகத்தினின்று எடுத்த வுப்பு, any salt of benzoic acid—Benzoate.

சாம்பிராணி வைப்பு, குக்கிலியம், அரக்கு, கருவாப்பட்டை, இவைகளை இடித்துப் பொடித்து பாலையிலிட்டு நெய்யில பிசைந்து அடுப்பில் வைத்து உருகி சண்டும் பதத்தில் இறக்கிப் பார்க்க இறுகி சாம்பிராணி யாகும்,

benzoin is prepared in the following manner — Indian dammer, shellac, are to be powdered and mixed with ghee and properly secured in a pit; and then heated until the whole mixture is melted and hardened. The product found deposited at the bottom is the benzoin.

சாம்பிரி, சேங் கொட்டை, dhoby's nut — Semicarpus anacardium.

சாம்பு, நாவல் மரம், jambo tree — Eugenia jambolina; 2. பொன், gold; 3. சம்பு நாவல், which see.

சாம்புகி, see சாம்பு.

சாம்பு சண்பகம், நாவற் பூ, jamboo flower.

சாம்புதல், வாடல், withering, drooping; 3. உணர் வழிதல், to lose consciousness; 2. கண்ணொளி மழுங்கல், growing dim in the eyes; dullness of vision.

சாம்புவிய விந்து, சௌரி, see சாம்பவி.

சாம்புனதம், see சாம்பூனதம்.

சாம்பூனதம், 1000 மாற்றுப் பொன், a refined gold of 24 × 1000/10 or 2400 carats; this is one of the four kinds of gold, characterised according to its quality; 2. பொன் பொது, gold in general; 3. சிறு நாகப் பூ, iron-wood of Ceylon—Mesua ferrea; 4. மேரு மலை, mountain containing gold ore; 5. நால் வகைப் பொன்களில் ஒன்று, one of the four kinds of gold

சாம்பேயம், see சண்பகம்.

சாம்பையோன் தாழை, ரயில் கற்றாழை, railway aloe—Aloe Americana.

சாய இலை, see சாய விலை

சாயகஞ் சாறு, மஞ்சட் கிழங்கு சாறு, juice of the green turmeric root,

சாயக் கிழங்கு, மஞ்சட் கிழங்கு, turmeric; 2. கிழங்கு மஞ்சள், green turmeric; turmeric root.

சாயங் கொட்டை, சேங் கொட்டை, dhoby's nut—Semecarpus anacardium.

சாய சந்தி, அந்தி, evening twilight.

சாயசம், அவுபல பாஷாணம், one of the 32 kinds of native arsenic; 2 தாமரை, lotus —Nelambium Speciosum.

சாயச் சம்பங்கி, கொடிச் சம்பங்கி, champauk creeper—Pergularia minor.

சாயச் செடி, இம்பூறல், Indian madder—Oldenlandia umbellata.

சாயப் பட்டை, வேம்பாடம் பட்டை, the bark of buck thorn climber — Ventilago madraspatana.

சாயப் பாக்கு, தகட்டுப் பாக்கு, sliced and polished flat areca nut made ready for use.

சாயப் பாசிதம், நுணா, dyeing mulberry — Morinda citrifolia.

சாயப் புல், திரட் கோரை, dye-grass.

சாயப் பூச்சி, இந்திர கோபப் பூச்சி, lady's fly; 2. காய்ந்த சிவப்பு சாயப் பூச்சி, a scarlet dye-stuff consisting of the dried bodies of certain insects—Kermes.

சாயப் பூச்சி வற்றல், இந்திர கோபப பூச்சி யைக் காய வைதது நெய்யி விட்டு வறுத்த வஸ்து, a preparation consisting in frying dried lady's fly in ghee.

சாயப் பூலிகம், சிவப்புப் பசலை, red spinach —Spinacea oleracea.

சாயமரக் கஷாயம், சிவதைவேர்க் கஷாயம், extract or decoction prepared from the root of Indian jalap —Ipomaea turpethum.

சாய மரம், சிவதை, Indian jalap; Indian rhubarb—Ipomaea turpethum; 2 சேவ மரம், wild mangosteen — Sandoricum indicum; 3. நுணா, Indian mulberry — Morinda citrifolia.

சாயமிட்டுப் பார்த்தல், கண்ணுக்கு மையிட்டுப் பார்த்தல், to look closely after applying collyrium to the eyes; 2. கண்ணாடிப் பார்த்தல், crystal gazing; 3. ஓர் சால வித்தை, a magic.

சாயம், அந்திநேரம், evening dusk; 2. கோரை, sedge grass; 3. சாய வேர், chay root; dye root—Oldenlandia umbellata.

சாயம் பிடி, பொன்னாங் காய், Indian soap-nut—Sapindas trifoliatus.

சாய ரட்சை, சாயங் காலம், evening time.

சாயல், மஞ்சள், Indian saffron; 2. மஞ்சள் பாவட்டை, dyeing mulbery — Morinda citrifolia; 4. இளைப்பு, exhaustion; 5. அழகு, beauty.

சாயல் வகை, ஓர் வாகை மரம், a kind of sirissa—Albizzia amara (wightii); 2. உசில மரம், ebony tree—Acacia pinnata.

சாய விராதகம், கடுக்காய், gallnut—Terminalia chebula.

சாய விருட்சம், see சாயா விருட்சம்.

சாய விரை, சாப்பிரா விரை, monkey turmeric—Bixa orellana.

சாய விலை, சீமை கருப் பூரம், Bengal sage—Meriandra bengalensis.

சாய வெளிச்சை, ஓர் ஆற்றுமீன், a river-fish—Chela argentea.

சாய வேர், see சாயம்.

சாய வேர்ச் சக்களத்தி, இம் பூறற் சக்களத்தி, a tree of the genus of chay root—Oldenlandia dichotoma.

சாயனத்தி ஓத்தமன், கார்முகிற் பாஷாணம், a prepared arsenic.

சாயனம், இரசாயனம், alchemistry; 2 கள், toddy.

சாயாகிரகம், நிழல் சாய்ந்த கிரகம், shadowy planet.

சாயா தேவி, சூரியன் மனைவி, the consort of Sooryan (the sun); 2. see சாயாவிருட்சம்.

சாயா தேவி தெரிசனம், தன் னிழலை உற்றுப் பார்த்து, பிறகு ஆகாசத்தைதை நோக்கி அவ் வுருவத்தின் பிம்பத்தைப் பார்த்தல். இவ் விதமாக தினந்தோறும் தவராமல் 12 வருஷம் பார்த்தலினால் கடைசியாக சூரியன மனைவி தெரிசனமாகு மெனக் கொள்ளப் படும். அன்றியும், இவள் வாழ்நாளில் நடக்குங் காரியங்களை குருவாக நின்று அடிக்கடி அறிவிப்பாளெனக் கொள்ளப் படும், seeing the goddess the sun's wife. The legend is that one contemplating by gazing upon his own shadow daily for sometime and then seeing or looking upwards at the sky and seeing his reflection will mediate on the great void. He hss to repeat this process without failing even a day. If this is continued for 12 years, he will see in his vision the female deity who will stand as a Guru, informing him all and about his career in life.

சாயா நீர், கானல் நீர், mirage.

சாயா புருஷ தெரிசனம், தன் னிழலை உற்றுப் பார்ப்பதினால் கடைசியாக புலப்படும் புருஷ தரிசனம், the appearance of a male deity to a man's vision when concentrating on his own shadow. *C.f.* சாயா தேவி தெரிசனம்.

சாயா ரூபம், உருவெளித் தோற்றம், phantom vision.

சாயா விருட்சம், உதய முதல் சாயுங் காலம் வரையில் தன் னிழல் சாயாத ஓர் வெண் ணிறமான மரம். இதற்கு தன்னிழல் காத தான், நிழற்காதத விருட்சம் என்றும் பெயர் களுண்டு. இது மகா மூலிகை 23ல் ஒன்று. இதன் இலை வெருகத்து எட்டி யிலையைப் போன்றது என்றும், காயானது கண் விடா நாய்க் குட்டி போலிருக்கும் என்றும், பட்டையை வெட்ட, வெட்டு வாய் $3\frac{3}{4}$ நாழியில் மூடி விடும், தெரியாது என்றும், பால் வடியும் என்றும் சொல்லப் பட்டிருக்கிறது. இதனால் காய சித்தி யுண்டென்று கருதப் படும், a grey-coloured tree which does not cast shadow being pervious to light. It is an unknown tree supposed to have very rare virtues; and is classified as one of the twenty three all-healing drugs. It is said that its leaf resembles that of nux vomica tree, the fruit is like the closed eyes of a pup and the bark which, if cut with a knife, will not have traces of incision on it as it will be closed in a short time. It is considered to be a very useful plant for rejuvenation.

சாயானகம், ஓந்தி, blood-sucker of the species of lizard.

சாயானம், சாயுங் காலம் evening time.

சாயுங் காலம், மாலைப் பொழுது, evening.

சாயுச்சியம், நான்காம் பதவி, the fourth and the highest state of bliss; 2. ஒன்றறக் கலத்தல், entire absorption in the deity just like flame in flame, drop in the ocean etc.; 3. துவித பாவனை நீக்கி ஆத்ம விசாரணை செய்து, கடவுளோடு ஒன்றறக் கூடி அதுதானாய் தானதுவாய் நிற்றல், identifying oneself in the presence of God and after forgetting the theory of Duality, being absorbed in the study of the Soul, and finally merging with Him

சாயை, உடம்பின் ஒளி அதாவது தேஜஸ், bright with radiance; lustre; 2. நிழல், shadow; 3. இருட்டினிருந் துதித்தது, that which is born from darkness; 4. சேவை

சி, சிவம், the god Shiva.

சிஃகுவீகம், மூளையைப் பற்றியுள்ள ஓர் வகை சன்னி. இதனால் நாக்கை உள்ளுக்கிழுத்துக்கொள்ளும், பேச முடியாது, an affection of the brain in which the tongue is drawn in and the speech is impaired —Apoplexy. *C.f.* சிகுவா சன்னி.

சிகக் குரு, முருங்கை, drum-stick tree — Moringa pterygosperma alias Hyperanthera moringa.

சிகட்டு, திரா, an alloy of copper and spelter; 2, திராய் மரம், a tree of the Mollugo genus.

சிகணம், மயில், pea-cock.

சிகண்டகம், see சிகண்டம்.

சிகண்டம், மயிற் றோகை, pea cock feather; 2. உச்சிக் குடுமி அதாவது தலை முடி, tuft of hair on the head; 3. மயிற் கொண்டை, peacock's crest.

சிகண்டி, ஆமணக்கு, castor-seed—Ricinus communis; 2, சேவல், cock; 3. ஆண் மயில், peacock; 4. see சிகண்டம்; 5. வெட் பூலா, white poolah—Phyllanthus leucopyrus; 6. சிற் றாமணக்கு, small-seeded castor plant — Ricinus genus; 7. அலி அதாவது பேடி, a hermaphrodite.

சிகண்டிகம், ஆண் கோழி, cock. See சிகண்டி.

சிகண்டிகை, கருங் குன்றி, black-bead of Abrus genus.

சிகண்டிதம், சிற் றாமணக்கு, small-seeded castor plant—Fructibus minoribus of Ricinus communis.

சிகதம், பெரு மணல், large particles of sand.

சிகதா மேகம், மூத்திரம் மணல் கலந்த நீரைப் போல 2 மணி நேரத்திற்கொருதரம இறங்குதல், excessive secretion and discharge of urine for every two hours containing increased amounts of solid constituents —Polyuria.

சிகதை, வெண் மணல், white sand; 2. மணற் குன்று, sand-hill,

சிகத்தி, கடுக்காய், gall-nut — Terminalia chebula.

சிகித்திரா, கடுக்காய், see சிகத்தி.

சிகத்துப் புழுதி, உழுது சேருக்கிய நிலம், wet lands ploughed but not sown. *C.f.* சேற்றுப் புழுதி, which see.

சிகநாதம், அப்பிரகம், mica.

சிகபுட்பம், நறுங் குறிஞ்சி, a species of cone-head plant—Strobilanthus genus.

சிகப் படம்பு, முசற் றழை, hare-lipped leaf so called from being two-lobed; 2. சிவந்த அடம்பு, red adamba — Ipomaea biloba.

சிகப் பத்தி, செவ்வத்தி. இது ஈரமான தரையில் விளையும். இம் மரத்தின் வேரின் சாறு வயிற்று வலிக் குதவும்; இலை சீத பேதிக்காகும். இதன் வேர்ப் பட்டை மிகவும் கசப்பு. இதைச் சூரணித்து தனியாத தூளுடன கலந்து மார்பு நோய்க்குக் கொடுக்கலாம், red-fig—Ficus heterophylla. It is common in moist places; the juice of the root is internally administered in colic and that of the leaves in dysentery. The bark of the root which is very bitter is pulverised and mixed with corriander seeds and given for chest affections; 2. சீமை யத்தி. இதன் பழத்தினுள் புழுக்கள் ஒன்றும் இராது. மிக்க சதைப் பற்றுள்ளதும் தித்திப்பாயுமிருக்கும். இதை சாப்பிட தொண்டை வறட்சியை நீக்கும், Hebrew teenah — Ficus carica. No worms will be found in this fruit; sweet and fleshy. It removes dryness of the throat.

சிகப் பபாமார்க்கம், சிகபபு + அபா மார்க்கம் செந் நாயுருவி, a red Indian burr—Achyranthes aspera.

சிகப் பல்லி, சிவப்பு அல்லிப் பூ, red Indian water lily—Nymphae rubra.

சிகப் பவரை, சிவப்பு அவரை, red bean — Dolichos lablab.

சிவப் பாத்தி, சிவபபு ஆத்தி மரம், red mountain ebony—Bauhinia phonicea.

சிகப்பி, செம் பல்லிப் பூடு. இது ஓர் சிதத ருண்ணு மூலிகை, (lit) that which is red.

It is an unknown plant probably a red variety of lizard plant. It is known only to Siddhars and used by them; 2. சிகப்புப் பல்லி, red lizard; 3. சிகப்பு பூ பூர்க்கும் செடி, any plant of red variety; red-flowered plant; 4. see செகப்பி.

சிகப்பு, சிவந்த நிறம், red colour; 2. சிவப்பு, redness; 3. நாய்க் கடம்பு, bridal conch plant—Hymenodictyon excelsum. See சிவப்பு; 4. சிவப்பு கொய்யா, red guava —Psidium guyava (pomiferum).

சிகப்பு அகில், சிகப்பு நிற அகில், king of the mountains — Acrocarpus fraxinifolius; 2. செவ்வகில், red cedar—Cedrela toona.

சிகப்பு எலிச் செவிக் கீரை, சிவந்த எலிச் செவிக் கீரை, rat's ear plant—Ipomaea reniformis.

சிகப்பு எவட்சாரம், சிவப்பு எவட்சாரம், a compound of potassium nitrate of a red colour.

சிகப்பு ஏலம், சிவப்பு நிறமான ஏலம், a red variety of cardamon.

சிகப்புக் கத்திரி, ஓர் வகை சிவப்பு பாம்பு, a kind of red snake.

சிகப்புக் கலவாய், சிவப்புக் கலவாய் மீன். மூன்று அடி நீளம், வெள்ளை புள்ளிகளுடையது, red perch — Serranus sonneratii alias Perca rubra: attains at least 3 feet in length and is white-spotted. See சிகப்புக் கலவாய்.

சிகப்புக் காசுக் கட்டி, பாக்கி னின்று தயாரித்த சிகப்பு காசுக் கட்டி, red catechu—Areca catechu. It is prepared from areca-nut. It is opposed to கருப்புக் காசுக் கட்டி, black catechu — Catechu nigrum of chemists.

சிகப்புக் காட்டுக் கோழி, சிவப்பு நிற காட்டுக் கோழி, red jungle fowl—Galius bankiva.

சிகப்புக் காந்தள், செங் காந்தள், tree mangrove—Bruguiera gymnorhiza.

சிகப்புக் காய் வேளை, சிகப்புக் காய் வேளை, a red variety of காய் வேளை—Galega purpurea.

சிகப்புக் கீழா நெல்லி, செந் நிறமான கீழா நெல்லி, small-leaved red featherfoil — Phyllanthus niruri.

சிகப்புக் குங்கிலியம், அயல்நாட்டு குங்கிலியம். இதில் கருப்பு, பச்சை, வெள்ளை முதலிய நிறங்க ளுண்டு, red resinous substance from trees of Dammer genus in the Eastern islands and New Zealand. The other varieties are:—black, green, white etc.

சிகப்புக் கெண்டை, சிவப்புக் கெண்டை, red carp—Barbus jerdoni. It is opposed to கருங் கெண்டை, bitter or black carp —Barbus chola.

சிகப்புக் கொடி வேலி, சிகப்பு சித்திர மூலம், Plumbago rosea.

சிகப்புக் கொம்மட்டி, சிவந்த கொம்மட்டி, red water melon—Citrullus vulgaris.

சிகப்புக் கொய்யா, உட் பக்கம் சிவந்த சதைப் பற்றுள்ள கொய்யாப் பழம், guava with red internal pulp—Pissidium guyava.

சிகப்புக் கொன்றை, செங் கொன்றை, red cassia—Cassia marginata.

சிகப்பு சதுரக் கள்ளி, செந் நிறமான சதுரக் கள்ளி. இது அபூர்வம். இதின் பால் இரத்ததை முறிக்கும், a red variety of square spurge. This is rarely found. It destroys the richness of blood.

சிகப்பு சிக்கு, இண்டு, red-streaked Brasiletto climber—Pterolobium indicum.

சிகப்பு சிவதை, செஞ் சிவதை, a rep variety of jalap—Ipomaea genus.

சிகப்புச் சந்தனம், செஞ் சந்தனம், red sandal —Pterocarpus santalinus.

சிகப்புச் சித்திர மூலம், இதுவே செங்கொடி வேலி. இது காட்டில் மலையின் வெடிப்புகளில் முளைத் திருப்பதாக சொல்லப் படும். இது ஓர் சித்த ருண்ணும் மூலிகை. இதினின்று எடுக்கும் செம்பு, சுதத செம்பென்றும், 25 மாற்றெனவும் சொல்லப் படும். கவச குண்டலததிற் குதவும், rosy-flowered leadwort—Plumbago rosea. It is said to be found grown in the crevices of rocks. It is used by Siddhars and is said to contain pure alchemical copper of 25 Mattru of gold. Ear-rings worn by sages are made out of this.

சிகப்புச் சுண்ணும்பு, சிகப்புச் சீமைச் சுண்ணும்பு. இது திருவனந்த புரததில் மிகுதி. கருப்புச் சுண்ணும்பு என்று ஓர் இனமுஞ்

உண்டு. அது தஞ்சாவூருக் கருகே வல்லம் என்ற ஊரில் அகப்படும், red chalk, which is plenty in Travancore. It is opposed to black chalk obtained in Vallam near Tanjore.

சிகப்புச் செந்தூரம், வங்கச் செந்தூரம், calcined red oxide of lead—Plumbi rubrum.

சிகப்புச் செம்பரத்தை, குங்குமச் செம் பரத்தை, scarlet shoe-flower — Hibiscus Rosa sinensis (carnea-plena)

சிகப்புச் சோற்றுக் கற்றாழை, இதுவே செங் கற்றாழை. இது சித்தர்கள் உபயோகிக்கும் ஓர் கற்ப மூலிகை, a red variety of aloe. It is used by Siddhars for rejuvenation

சிகப்பு ஜ்'ரிகி, மகமதியர்கள் உபயோகிக்கும் ஓர் விதை, a kind of seed used by Mahomadans.

சிகப்புத் தகர், செம்மறி ஆடு, a brown coloured sheep with crumpled horns — Ovis aries.

சிகப்புத் தணக்கு, செந் தணக்கு, country tragacanth—Sterculia urens.

சிகப்புத் தம்பட்டன், சிவப்பு தம்பட்டங் காய், red sword bean—Canavalia ensiformis,

சிகப்புத் துவரை, சிவப்புத் துவரை, red dholl —Cajanus indicus (flavus).

சிகப்புத் தோட்டக் கீரை, சிவப்பு அறு கீரை, rose spinach—Amaranthus caudatus.

சிகப்பு நாகதாளி, செந்நிற நாகதாளி, red cobra creeper—Opuntia nigricans.

சிகப்பு நாயுருவி, see சிகப் பபாமார்க்கம்.

சிகப்பு நெரிஞ்சில், செந் நெரிஞ்சில், a red variety of நெரிஞ்சில், caltropes — Tribulus terrestris; 2. செப்பு நெரிஞ்சில், trailing indigo — Indigofera enneaphylla.

சிகப்பு நெல்லி, செந் நிறமான நெல்லி, red gooseberry—Phyllanthus emblicus.

சிகப் பபாமார்க்கம், செந் நாயுருவி, red Indian burr—Achyranthes aspera.

சிகப்பு பாஞ் சோலை, காய்க் கடம்பு, red bastard cedar of Palghat—Hymenodictyon excelsum.

சிகப்பு பாவட்டை, சிவப்பு பாவட்டை, red bottle flower—Pavetta indica.

சிகப்புப் பாஷாணம், மனோசிலை, red arsenic.

சிகப்புப் புளியங்காய், செம் புளியங்காய், red tamarind.

சிகப்புப் புளியம் பிரண்டை, குங்குமப் பிரண்டை, heavy wild vine — Cissus acida alias Vitis setusa.

சிகப்புப் பூலா, செம் பூலா அல்லது பவளப் பூலா, red poolah or coral berry tree—Breynia rhamnoides.

சிகப்பு மந்தாரை, செம் மந்தாரை, pink yellow mountain ebony — Bauhinia purpurea alias B. variegata.

சிகப்பு மயிரங்காய், see சிகப்பு மரிமாங்காய்.

சிகப்பு மரி மாங்காய், சிவப்பு மயிரங் காய், South Sea Islands Hogplum—Spondias purpurea alias Spondias dulcis (purpurescens).

சிகப்பு மாதவளை, மாதளை, pomegranate — Punicum granatum.

சிகப்பு ரோகிணி, சிவப்பு உரோகிணி. இதன் வேர் மிக்க கசப்பு, bitter root — Picrorhiza Kurrosa, the root of which is intensely bitter.

சிகப்பு லோத்திரா, சிகப்பு லோத்திரா பட்டை; red lodhra bark.

சிகப்பு வசநாவி, செந் நாவி, a species of red aconite root—Aconitum genus. *C.f.* நாவி.

சிகப் பெறும்பு, செவ் வெறும்பு அல்லது சிற் றெறும்பு, small red ant—Fiti mida; 2. முசிற றெறும்பு, red ant — Formica smaragdina; 3. குரு வெறும்பு, large red ant.

சிகமதம், அரதனை, galangal — Alpinia galanga.

சிகம தாகிகம், see சிகமதம்.

சிகம தாதிகம், கோங்கிலவு, golden silk cotton tree—Cochlospermum gossypium.

சிகர கேவலம், கிராம்பு, clove — Oleum caryophylla.

சிகரத் தங்கம், உயர்ந்த தங்கம், gold of superior quality; refined gold.

சிகரத் தலை, நீண்ட தலை, tower head.

சிகரத் தேன், கொம்புத தேன், honey collected on branches on the top of trees.

சிகரப பாகிதம், see சிகம தாதிகம்.

சிகரப் பாடி, கோஷ்டம், Arabian costus—Costus speciosus.

சிகரப் பாடிகம், see சிகரப் பாடி.

சிகரப் பூசிதம், சந்தன மரம், sandalwood tree—Santanum album.

சிகரப் பொருப்பு, சிலா நாகம், which see ; 2. சூடாலைக் கல், a kind of loadstone probably manganese.

சிகரம், இலவங்கம், cloves ; 2. கவரி மான், Himalayan yak ; 3 தலை, head , 4. மலை, mountain ; 5. காக்கை, crow ; 6. சுக்கு, dried ginger ; 7, பிரண்டை, adamant creeper — Vitex negundo ; 8. உச்சி, apex ; 9, பூநீறு, salt on the soil of fuller's earth ; 10 நீர்துளி, water drop ; 11. புளகம், horripilation ; 12. தலை யுச்சி, the crown of head ; 13. மலை மூடி, the top head of mountain ; 14. வட்டில், dish ; 15. கிராம்பு, cloves ; 16. மாங்காய், mango—Mangifera indica.

சிகரி, நாயுருவி, Indian burr——Achyranthes aspera ; 2. எலி, rat ; 3. கரு நாரை, black heron ; 4. புல் லுருவி, a parasite plant — Loranthes elasticus ; 5. மலை, mountain , 6. புல்லுருவிப் பொது, Loranthus genns.

சிகரிகை, நேர்வாளம், croton seed plant — Croton tigilium.

சிகரிச்சரம், சாசி, which see.

சிகரி தாமகம், சந்தன மரம், sandal wood tree—Santanum album.

சிகரித் தேக்கு, சிறு தேக்கு, small teak — Cleodendron serratum.

சிகரி நிம்பம், மலை வேம்பு, hill neem — Melia composita.

சிகரி மாதியம், சாலை தேவதாரம், which see.

சிகரி யந்தம், புல் லுருவி, a parasitic plant —Loranthus elasticus. See சிகரி.

சிகரியம், அறு கீரை, garden greens — Amaranthus gangeticum.

சிகரி யூமத்தை, கருமத்தை. இது கிடைப்ப தரிது. black dhatura—Dhatura genus. It is rarely found.

சிகரை, எலி, rat,

சிக ரோசிதம், இலச்சை கெட்ட மரம், shameless plant—Pisonia alba.

சிகர், வெள்ளை நாபி, white aconite or white bachnaug—Aconitum ferox.

சிகலல், see சிகலுதல்.

சிகலுதல், குறைதல், to decrease ; 2. கெடு தல், to putrify.

சிகலோகம், அகில், agilwood—Agallochum.

சிகல், குறைவு, deficit ; decrease.

சிகழி, குடுமி, tuft of hair in a male.

சிகழிகை, கொண்டை, hair knot in a female.

சிகன்றிகை, கருங் குன்றி, black bead — Abrus genus.

சிகா, எலி, rat ; 2. ஓர் பூடு, Pterolobium indicum ; அக்கினிச் சுவாலை, fire-flame.

சிகா கேவலம், கிராம்பு, clove.

சிகாங்கு, காக்கை, crow ; 2. புல்லுரி, a parasitic plant. See சிகரி யந்தம்.

சிகாச் சேதவம், நிருவாண தீட்சை, initiation by a Guru for tranquility of mind.

சிகாச் சேதவான், நிருவாண தீட்சை பெற்ற வன், one who received initiation from a Guru for tranquility of mind.

சிகாண்டகம், கொறுக்காய்ப் புளி, sweet babool—Pithecolcbium dulce.

சிகாதரம், மயில், pea.cock.

சிகாதா தாரம், see சிகாதரம்.

சிகாந்தா, தேவ தாரு, deodar tree or Red cedar—Erythroxylon monogynum.

சிகா புடலம், பனைச் சர்க்கரை, palmyra sugar.

சிகாமணி, முதன்மையான இரத்தினம், first-rate ruby or any superior gem.

சிகாமணிச் சூரணம், தேரையர் நூலிற் சொல் லிய ஓர்வித சூரணம். இது வாதக் குடைச் சலுக்கு உபயோகப் படும், a medicinal powder contemplated in a treatise by Teriyar. It is used for rheumatism or other nervous affections.

சிகாமணி வெண்பா, தேரையர் செய்த ஓர் தமிழ் வைத்திய நூல், a medical treatise compiled by Teriyar.

சிகா மந்திரம், அறு வகை யங்க மந்திரம் அதாவது இருதயம், தலை, காது, கண் முதலிய உறுப்புகளைத் தொட்டு செபிக்கும் மந்திரம், mantrams chanted by touching the six organs as heart, head, ears, eyes, etc.

சிகா மூலம், கிழங்குள்ள பூடு, any plant with a bulbous root.

சிகாரடம், துத்தநாகம், zinc—Zincum.

சிகாரம், சுக்கிலம், semen ; 2. தலை, head ; 3. தலைமுடி யுப்பு, a salt prepared from the human skull and used in Tamil Medicine ; 4. தில்லை மரம், tiger's milk spurge—Excoecaria agallocha ; 5. தாமிரம், copper.

சிகார வுப்பு, கல் லுப்பு, crystallised sea-salt ; 2. கரையா உப்பு, insoluble salt.

சிகாவரம், பலா மரம், jack tree — Artocarpus integrifolia.

சிகா வலகம், கொடிப் பாசி, moss creeper—Hydrilla verticillata.

சிகா வலம், குளத்துப் பாசி, green weeds or moss found on the surface of stagnant water such as tanks, lakes etc.

சிகாவளம், மயில், pea-cock.

சிகா விம்பம், வட்டத் தலை, round head.

சிகாவு, கிச்சிலிக் கிழங்கு, orange root — Hedychirum spicatum.

சிகானவம், வெண் தோன்றி, ஆகாச கருடன் கிழங்கு, sky-root—Corallecarpus epigea.

சிகி, எருது, bull ; 2. குதிரை, horse ; 3. சேவல், cock (fowl) ; 4. நெருப்பு, fire ; 5. மயில், pea-cock ; 6. ஆமணக்கு, castor plant—Ricinus communis ; 7. மரம், tree.

சிகி கண்டம், see சிகிக் கிரீவம்.

சிகிக் காலடி, மயிற் காலடிப் பூடு, அதாவது ஓர் வகை நொச்சி, pea-cock's foot notchy —Vitex pubescens alias V. arborea.

சிகிக் காவிரை, பேய்ப் பீர்க்கு, bitter luffa.

சிகிக் கிரீவம், மயிற் கழுத்து, the neck of a pea-cock ; 2. மயில் துத்தம், blue vitriol, so called from the colour of peacock's neck.

சிகி சேகரம், மயிற் சூடு, pea-cock's cresta 2. சேவற் பண்ணை, cock's comb—Celosia crista.

சிகிச்சம், வைத்தியம், pharmacy ; 2. பரிகாரம், cure.

சிகிச்சன், வைத்தியன், physician ; 2. மருந்து கொடுப்போன், dispenser.

சிகிச்சாக் கிரமம், நோயின் பரிகாரத்தைப் பற்றிய விதிகள் அல்லது முறைகள், rules or methods of treatment in diseases.

சிகிச்சா சாரம், நோயின் சிகிச்சையைப் பற்றியும், மருந்துக்குரிய பதார்த்தங்களை சுத்திக் கிரமப்படி சுத்தி செய்யும் விதத்தையும் கூறும் ஓர் வடமொழி வைத்திய நூல், an Ayurvedic medical treatise on the methods of treatment and purification of drugs.

சிகிச்சா தரிசனம், தட்சப் பிரசாபதி அசுவினி தேவர்களுக்கு கற்பித்து எடுத்துச் சொல்லிய ஆயுள் வேத நூல், an Aynrvedic science comprising the lectures given out by Daksha Prajapathy to their disciples Aswini Devas.

சிகிச்சா தீபிகை, பிற் காலத்தில் வடமொழியில் செய்த ஓர் வைத்திய நூல், an Ayurvedic book on treatment of diseases written in Sanskrit by subsequent writers.

சிகிச்சா ஸ்தானம், ஓர் வடமொழி வைத்திய விவர நூல், a commentory on Ayurvedic medical science in Sanskrit.

சிகிச்சா பீடம், நோய்க்காக மருந்துகள் கலக்கும் ஓர் உயரமான இடம், dispensing counter.

சிகிச்சா ரத்தின தந்திரம், அசுவினி தேவர்கள் ஆகிய வைத்தியர்கள் செய்த ஓர் ஆயுள் வேத நூல், an Ayurvedic science compiled by Aswin Kumars.

சிகிச்சா வாகடம், நோய்களைக் குணப் படுத்தும் மருந்து முறைகளைச் சொல்லும் நூல், a book describing the methods of preparation of the several kinds of medicines with their uses and manner of application—Pharmacopoeia.

சிகிச்சை, நோய்களை குணப் படுத்துவதற்காக செய்யப்படும் வைத்தியம். இதில் பரிகாரம் செய்ய வேண்டிய முறைகள். சாதாரண

மாக மூன்று விதங்க ளுண்டு, அவையாவன, treatment of diseases for purposes of cure. It consists of three methods viz :—

1. தெய்வகண சிகிச்சை — இரச கந்த பாஷாணம், பற்ப செந்தூர சுண்ணம் முதலியவைகளைக் கொண்டு வைத்தியம் செய்வது, divine methods of treatment with the help of mercury, sulphur, arsenic and other poisons, oxides, red oxides etc.

2. மனிதகண சிகிச்சை — சாதாரணமாக மூலிகைகளைக் கொண்டு செய்யும் வைத்தியம், the treating of diseases generally with herbs.

3. இராட்சதகண சிகிச்சை — அறுத்தல், காரம் வைத்தல், சுடுதல், முதலிய கருமங்கள், treatment by operation, caustic appliances, cauterization etc

NOTE —Treatment is the management and care of a patient and combating his disorder. Though it is generally classified into three main groups, it consists of different kinds according to diseases. See சிகிச்சை வகை.

சிகிச்சைக் கடை, பரிகாரத்திற்காக மருந்து கலக்கும் இடம், dispensary.

சிகிச்சைக் காண்டம், நோய்களைக் குணப்படுத்த வேண்டிய விஷயங்களைப் பற்றி சொல்லும் வைத்திய நூலின் ஓர் பகுதி, a chapter of the Medical Science dealing with the treatment of diseases

சிகிச்சைக் கிரமம், நோயின் பரிகாரத்தைப் பற்றி தேரையர் செய்த ஓர் தமிழ் நூல், a Tamil treatise compiled by Teriyar on treatment of diseases and their cure; 2. பொதுவாக நோயின் பரிகாரத்தைப் பற்றிய நூல், the science and art dealing in general with curing of diseases — Therapeutics; 3. பரிகாரம் செய்யும் ஒழுங்கு, the order or regularity in the treatment of diseases.

சிகிச்சைக் குறி, வைத்தியம செய்யும்பொழுது நோய் குணப்பட்டு வருவதற்கும் அல்லது வாராததற்கும் நோயாளி இடம் காணப்படும் அடையாளங்கள், the favourable or unfavourable signs or symptoms exhibited by a patient in the course of treatment by the physician.

சிகிச்சைக் குற்றம், வைத்தியம் செய்யுங் காலத்தில் வைத்தியனு லுண்டாகும் தவறுதல்கள், the defects or faults caused in the course of treatment for which the physician is responsible for his neglect.

சிகிச்சைக் கூறு, வைத்திய சிகிச்சைக்காக ஏற்பட்ட அனேக பகுதிகள், the several sub-divisions or departments in the treatment of diseases. See சிகிச்சை வகை.

சிகிச்சை பேதம், நோய்களுக்காகச் செய்யும் பல விதமான பரிகாரங்கள், the several changes or differences in the treatment afforded for purposes of effecting a cure.

NOTE —These differ according to different countries and different system of medicine. See சிகிச்சை.

சிகிச்சை முறை, வைத்தியம் செய்யுங் கிரமம், the method of treatment.

சிகிச்சை யிலட்சணம், வைத்திய செய்கைக்கு ஏற்பட்ட ஓர் சிறப்பு, the characteristic beauty underlying the treatment of disease.

NOTE — All physicians cannot afford to treat diseases in the real sense, as it all depends upon the intelligence, knowledge and experience combined with gift rather than book study

சிகிச்சை வகை, பொதுவாக எல்லா வைத்திய நூற்களிலும நோய்க்காக சொல்லியுள்ள பரிகாரங்கள். இதில் அடியிற்கண்டபடி பல விதங்க ளுண்டு, அவையாவன, the treatment for diseases contemplated in general, in several Medical books. It is of various kinds and they are viz :—

I. பொதுப்பட புருடர்கள், பெண்கள், பிள்ளைகளுக்கு அடியிற கண்டபடி செய்யும பலவித சிகிச்சைகள், the various kinds of treatment in general for men, women and children as mentioned below viz :—

1. தெய்வ சிகிச்சை — இது பூர்வ கருமானு சாரத்தையே காரணமாகக் கொண்டு இரசகந்த பாஷாணத்தைக் கொண்டு செய்யும் வைத்தியம், treatment based upon the principle of Karma. This can be treatsd with the aid of mercury, sulphur and arsenic—Karmic treatment.

NOTE.—According to this Karmic law, all diseases are the effects of previously

existing causes, some from natural and some from spiritual causes and in such cases, the remedy lies in time alone until the evil force, stellar and natural, is exhausted and the law of universal justice is satisfied.

Some chronic diseases such as Leprosy, Asthma, Consumption, Tuberculosis etc. are also attributed to Karma i.e., actions of the previous birth, which coincides with the constellation of stars at one's birth. In such cases horoscope should be consnlted first before taking up for treatment of diseases as they fall under Divine method of treatment.

2. மாந்திரீக சிகிச்சை — மந்திரம், சபம், பூசை, விரதம், தானதருமம் இவைகளை அநுசரித்து செய்யும் வைத்தியம், treatment conducted by means of prayers, worship, fasting, charity and with the aid of Mantrams and other psychological, magical and magnetic processes enunciated by Tamil Siddhars.

3. திரிதோஷ சிகிச்சை — இது வாத பித்த சிலேட்டுமத்தை அநுசரித்து செய்யும் வைத்தியம். இதுவே வைத்தியர்கள் சாதாரணமாக கையாளப்பட்ட முறை, treatment based on the three humours of the human system. So, it is a general line of treatment that is usually adopted by the Hindu physicians — Humoral treatment.

NOTE 1.—This is known as Spagiric treatment, which is the *obsolete*, semi-alchemistic system of practice established by Paracelsus in the Medieval Europe (1403—1541). It is therefore called Paracelsian system of medicine. There was also a school of medicine of the 17th century, which thought all the phenomena of life and disease were based on chemical action according to the thoory of Paracelsus who closely followed the Siddha system of medicine. They were called Iatrochemists.

The ancient Indians advanced scientific systematic knowledge in the synthetic chemistry of the Siddha School rather than 'Indian Mystic School'. This is now very much mistaken and very irreverently treated by the half-starved Indian himself. It is therefore very essential that this Siddha Chemistry should be read with the "History of the Chemistry of the Middle ages in Europe."

NOTE 2.—*Although this Humoral theory* which was in vogue during the Medieval period in Europe, now stands condemned owing to their perverted understandings, *still* it remains with great force in the Siddha system. The causes of all diseases or the pathological conditions of the human bodies are to be sought in the abnormal condition of the three varieties of material bodies or organised molecular masses or substances called Doshas viz :—

(a) Vatha indicative of motion or molecular activity of high order.

(b) Pitta indicative of chemical or ferment activity.

(c) Kapha, of stability of firmness.

4. மானத சிகிச்சை — மனோ சக்தியினாலும் திடத்தினாலும் எண்ணிச் செய்யும் சிகிச்சைக் கருமம், magnetic treatment by magnetic passes and mind suggestions— Psychological treatment.

NOTE.—Diseases may be cured by will-power; and however much this may be disputed in theory by material reasoners, it is nevertheless accepted in practice by even the most sceptical practitioners of medicines. Even to-day the Americans admire the treatment by Psychiatrists of diseases which ordinary physicians cannot cure.

This is commonly called in the West as *Suggestive* therapeutics i.e , treatment by hypnotic suggestions. It is used to produce aneshesia and to influence the patient by means of suggestion while in the hypnotic state.

5. தோஷ நிவர்த்தி—இது வேர் பிடுங்கல், களிப் பெடுத்தல், குனியம் நீக்கல், தாயித்து கட்டல முதலிய கருமங்களை முடித்து நோய்களை குணப் படுத்தல், treatment by ceremonial magic, such as — up-rooting of herbs, chanting of mantrsms, removal of sorcery, tying amulets, and adopting other occult measures for purposes of cure — Occult treatment.

6. சத்திர சிகிச்சை — கத்தி, கத்திரி, குறடு முதலிய கருவிகளைக்

கொண்டு சதையை அறுத்து செய்யும் வைத்தியம், treatment by surgical method with the aid of instruments as knife, scissors, forceps etc , for purposes of operation—Surgical treatment.

7. மருந்து சிகிச்சை — மருந்தையே முதன்மையாகக் கொண்டு செய்யும் வைத்தியம். சாதாரணமாக நோயின் தன்மையையும், ஏற்பட்டிருக்கும் கோளாறுகளையும், மாறுபாடுகளையும் அனுசரித்து செய்யப்படும், treatment by simple application of medicines according to natural and constitutional disorders giving rise to physical phenomena or pathological symptom—Medicinal treatment.

8. தடை சிகிச்சை — நோயணுகா சிகிச்சை அதாவது பெரு வாரி சுரம், அம்மை, வாந்தி பேதி, முதலிய தொத்து நோய்கள் அணுகா வண்ணம் அவைகளைத் தடுப்பதற்காக செய்யும் வைத்தியம், preventive measures adopted towards the occurrence of diseases such as, influenza, small-pox, cholera etc, during the time of epidemics—Preventive treatment.

9. சுத்த சிகிச்சை — தன் னுடம்பில் பிறவி நோய் அல்லது மறறுமுள்ள மேக நோய், கிரந்தி முதலிய வற்றின் தோஷங்கள், தன் பெண்சாதி பிள்ளைகளை தாக்காதபடி முன்னதாகவே சுத்தி செய்துக் கொள்ள வேண்டிச் செய்யும் வைத்தியம். இது மாதா பிதா நாத விந்து சுத்திக் காகவும், கர்ப்பிணிகள் கருப்பையின் சிசுவைக் கருதியும் செய்துக் கொள்வார்கள், treatment by resorting to purification of impurities in the body considering the congenital, or venereal and syphilitic disease, or other constitutional disorders in the system. It is generally done in cases of would-be parents for the purification of impurities in the ovarian and testicular secretions considering the welfare of children; and also in the case of pregnant woman, to prevent the congenital defect —Antiseptic treatment.

10. பத்திய சிகிச்சை — பொதுவாக நோய்ப்பட்ட காலத்திலும், குன்மம், நீரிழிவு, அசீரணம், கழிச்சல் முதலிய நோய்களால் பீடிக்கப் பட்ட காலத்திலும், சில பொழுதாவது, சில நாட்களாவது முழுதுமே உணவுமலிருக்கும் படிக்கும், அல்லது இன்னது தான் சாப்பிடுவது என்றும் நிர்ணயித்துசெய்யும் சிகிச்சை, regulation of diet prescribed to patients suffering from all kinds of diseases or especially fasting in cases, such as — dyspepsia, diabetes, indigestion, diarrhoea etc., for certain days or periods as fixed by the physician in the course of treatment — Dietetic treatment.

NOTE–Diatetics in the brodest sense received great emphasis in Tamil Siddha Medicine, and in the works of Siddhars special mention is made under each preparation as regards diet and regimen. Physicians differed widely in antiquity as they have at all times depended upon the relative importance of diets and drugs as therapeutic principles We know that sick persons are greatly injured by too strong foods, but benefitted and nourished by weaker food without any difficulty, for the reason that recourse to weaker food is known to have secured a great degree of safety. But if a man takes insufficient food, the mistake is as great as that of excess, and harms the man just as much. Even in weaker feod, one should see that the diet prescribed is particularly suitable to *his* constitution.

No doubt abstinence or starvation has upon the human constitution a most powerful effect in the case of a sickly person. Even in acute diseases, rice or barley gruel has rightly been preferred as a diet, but even in this case, they must not fast At first, it is sufficient to administer a small quantity not over thick, just enough to satisfy habit and to prevent hunger. Those who are wont to eat two meals a day should take gruel twice and they may even take once more if it is thought necessary.

11. ஒப்புறை சிகிச்சை — குணத்தில் நோய்க்கு ஒத்த மருந்தின சிகிச்சை, அதாவது எம் மருந்தினால் உடம்பில் ஒரு நோய் உண்டாகுமோ அம் மருந்தே அந் நோயைப் போக்கும

என்கிற கொள்கை, treatment based on the doctrine that diseases are curable by those drugs which produce effects on the body similar to the symptoms of the disease (*Similia similibus curanty*) — Homeopathic treatment.

12. சுகாதார சிகிச்சை— உடம்பை நோய் வாய்ப் படாமல் சௌக்கியமாய் இருக்க என்ன வழிகளோ, அதன் முறையாகச் செய்யும் வைத்தியம். அதாவது உடம்பும், மனமும் தொழிலற்று நிச்சிந்தையாய் இருத்தல், மிதமாய் உண்ணல், இடம் மாறுதல், சீதோஷ்ண நிலையை அனுசரித்தல், யாத்திரை செய்தல் முதலிய விஷயங்களையும் அனுசரித்து செய்யும் வைத்தியம், treatment confining to the system of principles towards the promotion of health and its preservation viz :— complete rest to the body and mind, moderation in food and drink, restricted diet, change of place and climate, touring etc.—Hygienic treatment.

13. நோய் பரிமாண சிகிச்சை இதில் நாடியைப் பரிசோதித்து நோயின் தன்மையையும், ஏற்பட்டிருக்கும் கோளாறுகளையும் அனுசரித்து இன்ன மருந்துதான் ஏற்றது என்று தீர்மானித்து, அதற்குண்டான அளவு, பத்திய விதி விலக்கு முதலியவைகளில் யாதொரு பிசகும் ஏற்படாதபடி நூல் முறைப்படி செய்யும் வைத்தியம், treatment which is mainly accomplished by the use of remedies. In this, the diagnosis, pulsation, the determination of the nature of the disease, the disorders involved therein and the respective prescription thereof, with the dietetics etc., are carefully attended to without any default on the part of the physician—Pathological treatment.

14. உபசாந்தி சிகிச்சை — சில நோய்களை குணப்படுத்த வேண்டி மருந்துகளை கொடுக்காமல அப்போதிருக்கும் வருத்தத்தையும், வலியையும் மாத்திரம் நீக்க வேண்டி உபசாரமாய்ச் செய்யும் வைத்தியம், that kind of treatment which affords only relief to pain and distress at the time but whidh does *not* attempt a cure—Palliative treatment.

15. தைல சிகிச்சை—மருந்து தைலங்களை உடம்பில் பல விடங்களில் ஊற்றி, சதை பாகங்களில் கைகளால் உருவிப் பட்த தேய்த்தும், அமுக்கியும், கால்களால் மிதித்தும் செய்யும் சிகிச்சை. இது சாதாரணமாய் வாத நோய்களில் செய்யும் வைத்தியம், a variety of mechanic massage by the systematic therapeutic friction, stroking, treading and kneading principally in the direction of the muscles of the body with the hands or feet with a medicated oil, under great pressure. Such a kind of treatment is given only in rheumatic complaints—Massage treatment.

NOTE.—This kind of treatment is very common in Malabar where the patient is laid to prostrate in a wooden tray and smeared with medicatsd oil and then tread upon.

16. வேது சிகிச்சை அல்லது வேது பிடித்தல்—உடம்பில் போர்வையைக் கொண்டு நீராவியின் எதிரில் உட்காரச் செய்து அதினால் உடம்பின் வியர்வை கசியச் செய்தல், a proprietory method of promoting the flow of sweat by covering the body and sitting before or exposing to the hot vapour or steam—Sudorific treatment.

NOTE.—The cure-all-bath (Kunhy's treatment), steam bath, sand bath, hip-bath, sun bath, vapour bath, medicated bath, etc. fall under this head.

17. அட்டை விடு சிகிச்சை — உடம்பினின்று கெட்ட இரத்தத்தை வெளி வாங்கும்படி அட்டையை குடிக்க விடல், letting of leech for sucking the impure blood in the system for curative purposes—Leech treatment.

NOTE.—As a rule with regard to children, it is advisable to employ *small* leeches

and that, over some bone, against which pressure may be exerted to stop the bleeding.

18. இரத்தம் விடு சிகிச்சை — இரத்தக் குறைவான உடம்பில் புதிதாக வேறொருவரின் உடம்பி னின்று இரத்தம் வாங்கி விடல், transfusion of blood from one person to another who is deficient in blood—Venesection treatment.

19. எதிருறை சிகிச்சை—நோய்க்கு எதிர் அல்லது விரோதமான மருந்து களைக் கொடுத்து குணப் படுத்த வேண்டி செய்யும் வைத்தியம். இதுதான சாதாரணமாய் எங்கும் கையாளு முறை, a system in which medicine of opposite quality to that of the nature of diseases of the patient, is employed for curing diseases. This is the treatment generally followed by physicians — General treatment.

20. உடன் சிகிச்சை—வாந்திபேதி, காயம் முதலிய நோய்கள் வாய்ப்பட்ட பொழுது, கால தாமத மில்லாமல் உடனே செய்யும் வைத்தியம், treatment which is directed immediately to the cure of a disease, as in cases of cholera, wounds or injuries etc. — Active treatment.

21. தற்கால சிகிச்சை — நோய்க் குண் டான வைத்தியத்தை செய்யாமல் அதன் போக்காகவே விட்டு விட்டு, அதன் குணம், குறிகளை மாத்திரம் கண்டு அதற்கு தக்கவாறு செய் யும் சிகிச்சை, that kind of treatment in which the disease is left to its course and only the symptoms treated as they arise or are developed—Symptomatic treatment.

22. பல விருத்தி சிகிச்சை — இளைத்த உடம்பைத் தேற்றி, பல முண்டா கும்படி, பல விருத்தி மருந்துகளைக் கொண்டு செய்யும் வைத்தியம், that kind of treatment which is mainly directed to sustaining the strength of the patient as by giving tonic etc. — Supporting treatment.

23. தாது புஷ்டி சிகிச்சை — நாத விந்துவை பலப் படுத்தி, காம விச் சையை மூட்டு வதற்காக வேண்டி செய்யும் சிகிச்சை. இது யுனானி முறையில் விசேஷமாய் கையாளப் படும், treatment by introduction of aphrodisiac drugs for purposes of progressive secretion of semen with a view to excite the sexual impulse for sexual congress. This is very common in the Unani system.

II. பெண்களுக்கு பிரத்தியேகமான சிகிச்சை, special treatment for women.

24. சூதக சிகிச்சை—பெண்களுக்கு மாத விடாய்த் தவறி, அதினால் சூதகச் சிக்கல், சூதகவலி, பெரும் பாடு, திட்டு நிற்கை முதலிய கோளாறு கள் ஏற்படுவதை குணப் படுத்த வேண்டி செய்யும் வைத்தியம், treatment of women suffering from disorders of menstruatien such as, suspended flow or failure of the monthly course—Amenorrhoea, painful menstruation (Dysmenorrhoea), excessive menstruation (Menorrhagea), and change of life i.e. natural cessation of menstruation (Menopause) etc.

25. கருப் பை சிகிச்சை — பெண்களுக்கு கருப்பையில் ஏற்படும் அழற்சி, வலி, நழுவல், வெளி தள்ளல், விரணம், இரத்தத் தேக்கு முதலிய கோ ளாறுகளை குணப் படுத்த வேண்டி செய்யும் சிகிச்சை, treatment of the uterus or womb in cases of inflammation (*acute* or *chronic*), pain, displacement or falling of the womb (*prolapsus*), ulceration, congestion etc. — Womb treatment.

26. பிரசவ சிகிச்சை—குழந்தை பெறுங் காலத்தில் உண்டாகும் பொய் வலி, மாறுபட்ட பிறவி அதாவது முகம், கை உதயமாகல், நஞ்சு கொடி விழாமை, வலிப்பு, மூட்டு கிழிதல், பால் சுரம், அறை வீட்டு சுரம், மூட்டு வீக்கம், கால் வீக்கம், பால் வெறி முதலிய கோளாறுகளுக்கு செய்யும் சிகிச்சை, treatment of

women for diseases in cases of child-birth such as — false pain, cross-birth, as presentation of the hand, of the feet or face, or obstruction of the passage of after-birth, convulsions, laceration of the perineum, milk-fever, puerperal fever, pyaemia, swelling of the legs, puerperal mania etc.

III. சிசுக்களுக்கும், குழந்தைகளுக்கும், பிரத்தியேகமாகச் செய்யப் படும் சிகிச்சை, special treatment given for children.

27. பால சிகிச்சை — குழந்தை வைத்தியம் அதாவது சிசு அல்லது குழந்தைகளுக்கு ஏற்படும் இழுப்பு, தொப்புள் விரணம், திடுக் கிடல், மூச்சுத் திணரல், பல் முளைக்கும் பொழுது காணும் சுரம், பேதி, வலிப்பு முதலியவற்றிற்காக செய்ய வேண்டிய வைத்தியம், treatment of new-born babies and children for diseases occurring to them viz — convulsions, ulcerated navel, night terrors, spasmodic croup; fever, purging, convulsion especially during the dentition period etc. — Children treatment.

NOTE.—Although the Indian treatment falls under the three main divisions as shown under சிகிச்சை, still there are several other treatments as shown above which may not come under any of those three divisions.

So also, in Allopathy (English) treatment there are several lines of treatment which do not fall either under Medicine or Surgery viz —

1. Complete rest and abstinence from food—Starvation treatment.

2. Electric treatment including X-ray —Electro-therapy.

3. Treatment of disease by the introduction of bacteria into the system —Bacterio-therapy.

4. Treatment by radium rays — Radio-therapy.

5. Immunisation against a disease by vaccine injection — Vaccine treatment.

6. Exposing the body to the sun's rays; sun bath—Heleotherapy.

7. Treatment by the internal use of mineral waters or solution of salts —Dialytic medication.

8. Treatment of diseases by hypnotic suggestions—Suggestive medicine.

9. Semi-alchemistic system of treatment established by Paracelsus—Spagiric medicine (*now obsoletes*).

10. Treatment based upon knowledge and experience — Rational treatment.

11. Home medicine without the advice of a physician — Domestic treatment.

12 Treatment by simple experience which is found beneficial — Empiric treatment.

13. Treatment aimed at simply on hygienic conditions—Hygienic treatment

14. Treatment by placing or exposing the patient to several mediums such as cold bath, earth-bath, water-bath, sand-bath, sea-bath, sitz-bath, sun-bath, vapour-bath, Turkey-bath etc —Bath treatment.

15 Treatment by regulation and restriction of diet—Dietetic treatment.

16. Removing the blood from or letting it into the system — Transfusion of blood.

17. Massage, fumigation, Nature cure, Medical gymnastic, breathing exercise etc —Minor treatment.

18. Preventing the occurrence of the disease—Prophylactic treatment.

19. Purging effected as in cases of rheumatism—Purging treatment.

20. Treatment in which disease is left to its course, but only symptoms treated as they arise—Symptomatic treatment.

21. Treatment affording only relief but no cure—Palliative treatment.

சிகிச்சை விதம், வைத்தியத்தில் நோயை குணப் படுத்துவதற்கு உண்டான அனேக வழிகள், the several means or methods adopted in the curing of diseases.

NOTE. — Leech-letting, magnetic cure, water-cure, nature cure, X-ray cure, electric cure, injection cure etc.

சிகிச்சை விதி, நோய்களுக்கு வைத்தியம் செய்யும் பொழுது அனுசரிக்க வேண்டிய விதிகள், அவையாவன, the rules to be observed in the treatment of diseases viz :—

1. எல்லா வியாதிகளும் ஒப்புறை மருந்துகளினால் பெரும்பாலும் அதிகரிக்கும். ஆனால் எதிருறை மருந்துகளினால் தணியும், all diseases are mostly increased by similars (Synergetics), and decreased by the reverse medicine (antagonists).

2. வைத்தியம் செய்யும் பொழுது நோய்களை அறவே நிவர்த்திக்க வேண்டுமாயின் யுக்தி, அனுபவ முறைப்படி நோய்களை அல்லது அதன் காரணங்களைக் கருதி எதிரிடை மருந்தினாலோ, சிகிச்சைக் கிரமத்தின்படியோ அல்லது இரண்டிற்கும் வேறுபாடாகவோ, மருந்துகளை உபயோகிப்பதை அனுசரிக்க வேண்டும், the rational treatment by knowledge or experience consisting in the use of the remedy contrary to the cause or contrary to the disease or the actual pathological processes or contrary to both, should be adopted.

3. திரிதோஷம் அல்லது திரிதாதுவினுடைய மிகுதியாலும அல்லது குறைவினாலும் நோய்கள் ஏற்படும், diseases are only a state of excess or deficiency of the Tridoshas or Dhatus in the system.

4. ஒப்புறையினாலும் அதாவது எம்மருந்து நோய்க்குக் காரணமோ அம் மருந்தைக் கொண்டு வைத்தியம் செய்து நோய்களை குணப்படுத்தலாம், the principle of the Homeopathy i.e., the mode of administering the same drug which caused the disease.

5. உடம்பிற்கு ஒத்துக் கொள்ளாத மருந்துகள் அனேகமாய் கெடுதலை யுண்டாக்கலாம். ஆனால் வியாதி எதிரிடையான மருந்தினால் தான் குணப்படும். ஆகவே, அம் மருந்து அவசியம் வேண்டும், the use of incompatible drugs are likely to produce injurious or undesirable effects, and so drugs of opposite kind of actions are absolutely necessary.

6. நோயாளிக்கு மருந்து கொடுக்கும் வேளையையும், அவனைக் குறித்த முன் விஷயங்களையும், பூர்வ கர்மத்திற்கு ஈடாக வந்ததோ வெனறும், இதற்கு மருந்து இன்ன விதமாய்த்தான் கொடுத்து வைத்தியம் செய்ய வேண்டு மென்பதையும், அல்லது பத்திய முறையிலோ, சுகாதார மூலியமாகவோ சிகிச்சை செய்ய வேண்டு மென்பதையும் அல்லது சீதோஷ்ண நிலை, காலம முதலியவைகளை அனுசரித்து செய்ய வேண்டு மென்பதையும், மருந்து கொடுப்பதற்கு முன்னமேயே வைத்தியர்கள் நிர்ணயித்துக் கொள்ள வேண்டும், the practitioner should bear in mind or previously determine the proper time for the use of a drug, the preliminaries or the preparations of the patient for a particular Karma, the therapeutical measures whether medicinal, dietetic or hygienic or climatic or seasonal or any other remedy that may be employed for the purpose.

7. நோ யிருக்கும் நிலைமையையும், குறி குணங்களின் போக்குகளையும் கண்டு தான் வைத்தியம் செய்யவேண்டும். ஒவ்வொரு வருக்கும் பூரவ கருமத்திற்கு தக்கவாறு நற்குறி, துற்குறி ஏற்பட் டிருப்பதையும கவனிக்க வேணடும், all therapeutics should be employed according to the stages of the disease; but in those cases where there are indications or contra-indications of each Karma, special attention should be paid.

8. காரணம் கண்டு பிடிகக முடியாத நோய்களை, தற்காலத்து தோஷ நிலைமையைக்கண்டு சிகிச்சை செயய வேண்டும், diseases of unknown origin or name should be treated according to the nature of Doshas involved.

9. பத்தியக் குறைவினால் ஏற்பட்ட வியாதிகளுக்கு தகுந்த பத்திய முறையைக்

கொண்டே நிவர்த்திக்க வேண்டும், diseases produced by irregular diet should be cured by the use of proper diet.

10. உடம்பில் வெளி வஸ்துக்கள் பிரவேசிப்பதினால் தான் சத்திரகொண்டு சத்திரம செய்ய வேண்டிய அவசியம் நேரிடும். இதையும் அருக்காமலே மூலிகைகளைக் கொண்டு குணப்படுத்தலாம், in surgical cases, foreign matter in the system is the cause of such cases. Even these may be cured by drugs, if *not by operation.*

11. அட்டவித பரீட்சை இல்லாமல் செய்யும் வைத்தியம் கெடுதியே விளைவிக்கும். ஆகவே, அப் பரீட்சையின்றி குருட்டுத் தனமாய் சிகிச்சை செய்யப் படாது, *no treatment* should be commenced blindly without proper diagnosis i.e. the eight kind of examinations contemplated in the Indian Medical science. Absence or neglect of diagnosis is likely to be injurious to the patient.

சிகிடியா, கொட்டை முந்திரிகை, cashew nut —Anacardium occidentale.

சிகிபாடவ ரசம், வாத குன்மத்தை போக்குமோர் ஆயுர் வேத மருந்து, an Ayurvedic medicine prescribed for dyspepsia.

சிகிப் பீலி, மயி லிறகு, pea-cock's feather.

சிகிப் புச்சம், see சிகிப்பீலி.

சிகிமுகிக் கல், see சக்கிமுக்கி.

சிகிரி, கொறுக்காய்ப் புளி, see கொண்டகம்; 2. சே லைப் புளி, false tamarind — Garcinia *morello.*

சிகிரி நிம்பம், மலை வேம்பு, Persian lilac — Melia azadirachta.

சிகி லேகியம், ஆயுர் வேதபபடி மயிலிறகு பற்பம், திப்பிலிச் சூரணம், இவைகளை கலந்து தேனில அடிககடி சாப்பிட விக்கல், சுவாசங்கள் நிவர்த்தியாகும, an Ayurvedic medicinal powder prepared with peacock's feather *Baspam (calcined powder)* and powder of long pepper. It is prescribed for hiccough and hard-breathing.

சிகி வர்த்தகம், சர்க்கரை பூசினி, sweet pumpkin—Cucurbita maxima.

சிகிற்சை, see சிகிச்சை.

சிகு, புளி யிண்டு, braslleto climber—Pterolobium indicum.

சிகுபம், இரத்தத்தில் சேர்ந்த ஓர் வஸ்து. இதனுடன் வெண் கருச் சத்து (albumen) சேர்ந்தால் தசைக்குக் காரணமாகிறது, the component part of the blood—Fibrine. This, together with the albumen forms the basis of the muscle; 2. மயிர்ப் பொது, hair of male or female; 3. தேள், scorpion; 4. சிகுர வெலி. இதன் மயிர்கள் முறைப்பா யிருக்கும், கடிக்கில் வீக்கம், வாந்தி, உடம்பில் மச்சங்கள் முதலிய குறிகள் ஏற்படும், a kind of rat with stiff hair and the bite of which causes swelling, vomit and raised patches on the body.

சிகுரு, முருங்கை மரம், drumstick tree — Moringa pterogospermum.

சிகுவா, நாக்கு, the tongue.

சிகுவா கண்ட ரோகம், நாக்கு வெடித்து புண்ணாகும் ஓர் நோய், a disease of the tongue attended with cracks, ulceration of the tongue and the throat—Furrowed tongue.

சிகுவாக்கிரம், நுனி நா, tip of the tongue.

சிகுவா சன்னி, நரம்புக் கோளாறினால் நாக்கை உள்ளுக் கிழுத்துக் கொள்வதினால் பேச முடியாமற் செய்யும் ஓர் வகை சன்னி, apoplexy or a nervous affection in which the tongue is withdrawn and it cannot be put up straight and consequently the speech is *impaired*; 2. ஊமைத்தனம், dumbness. See சிஃகுவீகம்.

சிகுவா தாபிதம், நாக்கு சிவந்து இரணமாதல், *inflammation of the tongue.*

சிகுவாத் தம்ப வாதம், பாரிச வாயுவினால் நாக்குக் குளறல், impaired speech as a result of paralytic stroke; palsy of the tongue

சிகுவாபம், நாய், dog.

சிகுவா மூலம், அடி நாக்கு, the root of the tongue.

சிகுவா ரோகம், நாக்கைப் பற்றிய நோய்கள், diseases of the tongue in general.

சிகுவால சலரோகம், நாக்கில் கொப்புளங்களை எழுப்பி விரணத்தை யுண்டாக்கும் நோய், ulceration of the tongue.

சிகுவீக சன்னி, see சிகுவா சன்னி.

சிகுவை, கண்ணிற்குள் நரம்பு, a nerve which enters the back of the globe of the eye —Optic nerve; 2. நாக்கு, tongue; 3. தச நாடியில ஒன்று, one of the ten principle arteries or tubular vessels in the system communicating with the eyes—Central artery (of the retina); 4. வாக்கு, speech.

சிகூரம், தலை மயிர், hairs of the head; 2. மயிர்ப் பொது, hair in general.

சிகை, குடுமி, lock of hair on the crown of the head; 2. மயிற் சூடு, peacock's crest; 3. உண்டிக் கவளம், a handful of rice; morsel of food; 4. கருப் பறுகு, dark panic gross — Cynodon genus; 5. அண்டம், தலை, head; 6. மயிர், hair; 7. பதினொறு மந்திரங்களி லொன்று, one of the 11 kinds of mantrams.

சிகைக் காபிகம், நெடுநாரைக் காய், fragrant cherry nutmeg—Polyalthia fragrans.

சிகைக் காய், சீயக்காய், soap pod — Acacia concinna.

சிகை நீர், அண்ட செயநீர், a pungent liquid extracted from the skull of the first-born foetus.

சிகை வேங்கை, உரோம வேங்கை அல்லது உதிர வேங்கை, Indian dragon's blood—Pterocarpus marsupium.

சிகோ ரகம், நெய்தல், white Indian water-lily—Nympaea lotus.

சிக்கடி, } அவரை, field or country bean—
சிக்கட்டி, } Dolichos albus; 2. see சிக்கல்.

சிக்கடித்தல், எண்ணெய் நாற்றம் வீசல், to emit a rank or stinking smell.

சிக்கணம், பாக்கு, areca-nut.

சிக்கம், மெலிவு, emaciation; 2. வண்டு, beetle; 3. காரீயம், black lead; 5. வால் மிளகு, tail pepper —Piper cubeba, 4. வெள்ளி, silver; 5. செம்பு, copper; 6. குடுமி, tuft of hair; 7. உச்சி, crown of head.

சிக்கம் போடல், யோகாப் பியாசத்தில் அசை வுருதபடி காலுக்கும் கழுத்திற்கும் முடிச்சு போடல், a string-hoop fastening to the legs and the neck with a view to restrict the movements of the body so as to support the posture in Yoga practice.

சிக்கரத் தெளிவு, உசிலம் பட்டையி னின்று வடிக்குங் கள், a fermented juice extracted from sirissa bark.

சிக்கரப் பூசினி, வெள்ளைப் பூசினி, white pumpkin—Cucurbita peps

சிக்கரம், தலைமுடி மயிர், lock of hair on the crown of head.

சிக்கர், கள், toddy; 2. தலை வலியால் பிடிக் கப் பட்டவர், people suffering from head ache.

சிக்கலம், பறங்கிப் பாஷாணம், mercurious sublimate; corrosive sublimate. *C.f.* வீரம்.

சிக்கல், இளைத்தல், to emaciate; 2. see காக்கைக் கல்; 3. சிருண்டு, staleness; 4. ஊழல், vapid; 5. தலை நோய், headache.

சிக்கல் நெய், நாட்பட வைத்திருப்பதால் உண் டாகும நாற்ற நெய், stale-ghee from age or long keeping.

சிக்கன பாகம், கல்கத்தை திரட்டும் போது கையில் ஒட்டாமல் மாத்திரை உருட்டுவ தற்கு பதமாக விருக்கும் பாகம், that stage to which a thick consistence of medicine is so rendered as to be free from being sticky with a view to make them into pills; 2. சிக்கு பாகம் அதாவது எண்ணெய்ப் பற்று, the sediment of oil.

சிக்கனம், பாக்கு, areca-nut.

சிக் கனவு, மன வுறுதி, firmness of mind.

சிக்கனி, see செய்யான்.

சிக்காரம், அழுகை, weeping.

சிக்கா லின்னம், கொள், horse-gram.

சிக்கி, நாணல், reed.

சிக்கி முக்கி, தீத்தட்டிக் கல், see சக்கி முக்கி.

சிக்கிராணி, நேர்வாளம், croton seed—Croton tigilium.

சிக்கு, தடங்கல் (உ-ம்) மலச் சிக்கு, obstruction as of oil food etc., in the bowels; 2. எண்ணெய்ச் சிக்கு நாற்றம், rancid smell of oil; 3. see சிகு, 4. மயிர், hair.

சிக்குதல், இளைத்தல், to be reduced or to get emaciated ; 2. இறுகுதல், to be congealed.

சிக்கு பாகம், தைலம் காய்ச்சும் போது அதை சில்வி அகப்பையில் எடுத்து விரல்களினால் திரட்டிப் பார்க்க, கையில் ஒட்டும் பாகம். இது தைல பாகம் மூன்று வகைகளுள் ஒன்று, stickiness or viscous condition of the medicated oil during its preparation. It is tested generally by taking the boiling oil with a spoon and rubbing against the fingers. It is one of the three processes of testing the oil.

சிக்குயத்தி, சதகுப்பி, bishop's weed — Anethum sowa.

சிக்குரு, நல்ல முருங்கை, drumstick tree—Hyperanthera moringa. The leaves and fruits of this tree are used as vegetable curry. See சிக்குரு.

சிக்குரு புட்பம், முருங்கைப் பூ, flowers of drum-stick tree.

சிக்குவா, see சிகுவா.

சிக்குவா கண்ட நரம்பு, நாக்கு, தொண்டை இவைகளில் வியாபிக்கும் நரம்பு, nerve pertaining to the tongue and the throat —Glossopharyngeal nerve.

சிக்குவா கண்ட ரோகம், see சிகுவா கண்ட ரோகம்.

சிக்குவா சன்னி, நாக்கு பிரளாது வாய் குளறும் சன்னி, a delirium in which the affection of the tongue is marked by the utterance of meaningless words—Lingual delirium.

சிக்குவாந்திர நரம்பு, நாக்கின் சலன நரம்பு. இது நாக்கின் அடிபுறத்தில் வியாபித்திருக்கும், lingual nerve originating from the inferior maxillary.

சிக்குலிகம், செய்ச் சிட்டி, round-leaved tadda —Grewia orbiculata.

சிக்குவை, நாக்கு, tongue ; 2. தண்ணீர் விட்டான் கிழங்கு, water root — Asparagus racemosus alias A. sarmentosus. See also சிங்குவை.

சிக்கோளிக் குழல், ஆதொண்டை, Ceylon caper—Capparis horrida.

சிக்ஸா, மகம்மதியர்கள் குளியலில் உபயோகிக்கும் பரிமளப் பொடி, a perfumed powder used by Muhammadans in bathing.

சிக்தா வர்த்தமம், இமைச் சந்தில் சிறு கொப்புளங்கள் உண்டாகி மணல் விழுந்தது போல் உறுத்தும் ஓர் கண்ணோய், a variety of inflammation of the conjunctiva marked by small vesicles or ulcers — Phylctenular conjunctivitis.

NOTE. This should not be confounded with Trachoma, which is also an eye disease due to the inflammation of the conjunctiva (granular conjunctivitis) attended by the formation of small elevations on the conjunctiva of the lids

சிக்விரம், முருங்கை வேர் பட்டை, the bark of the root of the drum-stick tree. See சிக்குரு.

சிங்ககம், ஆடாதோடை, Malabar winter-cherry—Adhatoda vesica.

சிங்கக் குரங்கு, சிங்கத்தைப்போல் வால் நுனியில் மயிர் அடர்ந்த குரங்கு, monkey with a tuft of hair at the tip of its tail like a lion.

சிங்கங் குடு, பித்தளை, brass.

சிங்க சல்லியம், கருங்காலி, black sundara tree—Acacia catechu.

சிங்கச் சுவணம், ஓர் உயர்ந்த பொன், a superior gold ; 2. பொன் கட்டி, ingot of gold

சிங்கடா பருப்பு, இது ஓர் கொட்டையின் பருப்பு, the pulp in the seed of the plant—Trapa bispinosa.

சிங்கட்டான், முள் வேங்கை, thorny feather foil—Bredelia retusa.

சிங்கத் தாளி, நேத்திர நாயகம், an unknown drug used as a curative agent for diseases of the eye, perhaps one of the Convolvulus genus.

சிங்கத் துளசி, உயர்ந்த துளசி, basil of a superior quality, perhaps referring to கருந் துளசி, which see.

சிங்கத் தாளிகம், கற் பலா, stone jack of the Artocarpus genus.

சிங்க நோக்கு, சிங்கத்தைப்போல் கழுத்தைத் திருப்பிப் பார்த்தல், the look of a person by turning back his neck like a lion.

சிங்க பரணி, ஆடாதோடை, see சிங்ககம்.

சிங்கப் பல், குட்டிப் பல், snag tooth ; eye tooth ; 2. முன்புறம் நீண்டுள்ள பல், projecting tooth.

சித்த ருண்ணு மூலி

வழங்குவது இப் பூண்டல்ல, we are only aware of moon-creeper plant. Botanically, it is known as gold-coloured Moon seed — Tinosphora malabarica ; but it is not the one referred to by Siddhars (unidentified).

11. செந்திராய்—சிகப்புத் திராய். இதில் வெள்ளை யினம் தெரியுமே ஒழிய, சிவப் பினம் தெரியாது, red species of chick-weed. The common one available is the white variety of Mollugo genus. Nothing is known of this red variety (unidentified).

12. நீலவேலி—கருங்கொடி வேலி. நமக்கு கொடிவேலி தான தெரியுமே ஒழிய, கருப்பு நிறம் ஒருவரும் கண்டதில்லை, black lead-wort — Plumbago genus. The black variety is not seen by any one (unidentified.

13. வெண் புரசு—வெள்ளைப் புரசு. சாதாரணமாக வழங்கப்பட்ட பெயருள்ள புரசு. சித்தர் குறித்த தல்ல, although it is botanically known as kino tree—Butea frondosa or bastard satin wood—Mundulea suberosa, it does not seem to apply to the one referred to by Siddhars (unidentified).

14. வெள்ளைத் துருசு. மயில் துத்தத்தை வெண்மையாகச் செய்யும் சித்தர்களின் ஓர் வாத முறை. இதைப் பால் துத்தம் என கருதப்படாது, (lit) it means white vitriol ; it is no doubt a conversion of blue vitriol into a white colour by alchemical process of Siddhars. It should not be confounded with the ordinary white vitriol (zinc sulphate).

15. வெள்ளைத் தூதுவளை. இவ் வினத்தில் வெள்ளைப் பூ காண்பது மிக்க அபூர்வம். சாதாரணமாக நீலப் பூவைத் தான் வழங்குவது, (lit) white flowered prickly night shade—Solanum genus. The common one available and used is blue-flowered—Solanum trilobatnm, which is not the one rsferred to by Siddhars (unidentified).

16. கருந் தாழை — பொதுவாக தாழை பச்சை அல்லது வெண்ணிறம், கருப்பு நிறம் ஒருவரும் பார்த்ததில்லை, the common fragrant screw pine (pandamus) is usually green or white but never black (unidentified).

17. பெயர் தெரியாது, name not known.

NOTE.—Nos. 1 to 7, 14 and 17 are unknown plants ; and the remaining are all unidentified though the namo of the plant is common, but the species mentioned above, are not to be seen or traced. Strange to find that none of these drugs is available nor are they to be found mentioned in any of the other systems of Medicine including Ayur Veda and this, in itself shows that the Siddha system of medicine is purely based more on Spiritualism than on Materialism.

II. சித்தர்களால் உண்ணப்பட்ட சித்துக ளடங்கிய பத்து மூலிகைகள், அவையாவன, the ten drngs containing in them the virtue of playing miracles when taken in by Siddhars viz :—

1. கரு நெல்லி, (lit) black Indian gooseberry which is mistaken for black honey shrub — Phyllanthus reticulatus.

2. கரு நீலி, (lit) means a black variety of Indian plant which is not available. The common one known is always blue — Indigofera tinctoria.

3. கருங்கொடி வேலி. நீலவேலி.
4. கல் தாமரை.
5. கருந் தாழை.
6. பொற் சீந்தில்.
7. சோதி விருட்சம்.

the same as mentioned above.

8. பொன் திராய். இதுவே செந்திராய்.
9. முண்டினி.
10. சாயா விருட்சம்.

the same as mentioned above.

இம் மூலிகைகளினால் லோகங்கள் பழுத்திடும், (சட்ட முனி). ஆராய்ச்சியாளர்கள் இது விஷயத்தில் ஊக்கத்தோடு முயற்சி செய்தால், இதில் சில மூலிகைகளை இன்னதென்று தெரிந்து கொள்ளக் கூடும், the above plants are useful for transmuting metals. Some of these drugs may be

identifiable if only research scholars take pains and show their earnestness and activities in this direction.

NOTE.—No other systems of Medicine have ever made any mention of such kinds of drugs nor seem to be aware of the existence of such drugs, although great virtues and importance are attributed to them. The virtue and the effect of this panacea is well defined in the following stanza :—

சடம் பெற்றார் கற்பமெல்லாம் கொண்ட பின்பு
தாரணியில் அடங்காத வேதை பெற்றார்
திடம் பெற்றார் பதிமுத்தி மாறா வண்ணம்
சிறப்பாக வயிராக்கிய வரங்கள் பெற்றார்
கடம் பெற்றார் கடவுளடி தன்னைக் கண்டார்
காசினியில் சிவயோக கல்விமானாய்
இடம் பெற்றார் வச்சிரமிட்ட காயமானார்
இயல்பாக வாதநொண்டி திறம்பெற்றாரே.

(கருவூ-வாத-காவி. 700)

ஏழு நூறாயிரத் தோர் சித்தர் கூடி
இனிமையுடன் எழுபத்தோர் கற்பங்
கொண்டார்
கோழுமில்லை உயர்வுமில்லை தாழ்வுமில்லை
சுடர்பகலும் இரவும் இல்லை சடம் பெற்றாரே

(க. வா. கா. 700)

சித்த ரெண் பதின்மர், பதினெட்டு சித்தர்கள், see சித்த வர்க்கம்.

சித்த ரோமசன், உதிர ரோம வேங்கை, Indian dragon's blood — Pterocarpus marsupium.

சித்தர், சித்தத்தில் சிந்தித்தபடியே உடலும் உண்பனவும அடைந்து, அனுபவிக்கின்றவர்களே சித்தர்கள். இவர்கள், சிவநெறியைப் பூண்டு ஒழுகிய சித்த சமயத்தைச் சேர்ந்த தமிழ் மக்கள். மேற்கண்ட சமையத்திற் சொல்லி யுள்ள அனுஷ்டிக்க வேண்டிய கிரியைக் குறித்த விஷயங்களையும், விதிகளையும் விலக்கிவிட்டு, ஆத்ம ஞானம் ஒன்றையே கடை பிடித்தவர்கள். இவர்கள் காரண காரிய வகைகளால் உடம்பைச் சோதித்து, எவ்வெவ் வகைப் பொருள்களால் உடல் வளர்ந்து அழிகின்ற தென்பதை ஊக்கத்தாலும், முயற்சியாலும் கண்டறிந்து, உடம்பை பொய்யென்று சொல்லுவதற்கு மாறாக, மெய் யென்ற சொல்லுக்குப் பொருள் கண்டு, சிலப்பதிகாரத்திற் கூறிய படி, அணிமா, மகிமா, லகிமா முதலிய அஷ்டமா சித்திகளை அடைந்தவர்கள். மேலும், தங்களுடைய உடம்பை மாத்திரம் தகுந்த படி பலப் படுத்திக் கொண்டால், பிறப்பி னின்று நீங்கிவிடலாம் என்று உணர்ந்து, அனேக காலம் உயிருட னிருக்கக் கூடிய நித்திய வாழ்வைப் பெற்ற பெரிய மகான்களாவர். இவர்கள் காய கற்ப வழியாலும், யோக சாதனையாலும், தங்களிடத்தில் அபார சக்தி வாய்ந்தவர்கள். அழியக் கூடிய வுடம்பைக் கொண்டே, ஞான சக்தியால் மோட்ச சாதன வழியைத் தேடக் கூடியவர்கள்.

மேலும், இவர்கள் மூச்சை அடக்கிப் பிடித்து மூலக்கனலாகிய குண்டலி சக்தியை எழுப்பி, மணி மந்திர மருந்துகளின் உதவியால் மாறாத மதியமிர்தமுண்டு; நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு ஆகிய இவைகளை அறியாது நித்திய உடம்பைப் பெற்றவர்கள். உலோகங்களாலும், மந்திர சக்தியாலும், கன குளிகை கொண்டு அனேக அண்டங்களைச் சுற்றி ஆங்காங் குள்ள அதிசயங்களைக் கண்டு ஆனந்தித்தவர்கள்.

ஆகவே, இவர்கள் அளவற்ற சக்தியுடையவர்கள் தங்களுடைய மாமிச தேகத்தை இலிங்க வடிவமாக மாற்றக் கூடிய சக்தி வாய்ந்தவர்கள். இவர்கள் மகத்துவத்தைப் பற்றி யோக நூற்களில் அனேக திருஷ்டாந்தங்கள் காணலாம். இவர்கள் மனோசக்தியால், மருந்து கொள்ளாமலே உடம்பின் அணுவாதி தத்துவங்களை மாற்றி, பிணி, சாக்காட்டை அகற்ற வல்லவர்கள். அன்றியும், மனோ சங்கற்பத்தினால் ஏற்பட்ட மனோ சக்தியை, நினைத்தபடி நாடி வழியாக செலுத்தாமலே, மின்சார சக்தியைப் போல் உலகத்தில் அண்ட முழுவதிலும், பல திசைகளின் விஷயங்களை உட்கார்ந் திருந்தபடியே தெரிந்து கொள்ளவும், எங்கேனும், யாருடனேனும் சம்பாஷிக்கக் கூடிய வல்லமை பெற்றவர்கள்.

கபிலர், கௌதமர், வசிட்டர், விசுவாமித்திரர், முதலியோர்களெல்லாம் சித்தர்களே. வடமொழியில், இவர்களை இரசாயன சாஸ்திரிகள் என்று தப்பாக சொல்லப் பட்டிருக்கிறது. ஏனெனில், இரசாயன சாஸ்திரிகள் சித்தர்களுக்கு இணை யல்லர். இவர்கள் வாதத்தில் மாத்திரம ஈடுபட்டவர்களே ஒழிய, ஆத்மா ஞானத்தில் சித்தி யடைந்தவர்களில்லை. ஆனால் வாத முறையிலும் சிறிது ஞானம் அடையலாமென்பதும் சித்தர் நோக்கம். ஆயினும், சித்தர்களோ வாத, வைத்திய, யோக, ஞான வகைகளில் சித்தி பெற்றவர்களென்றும், உடலழியு முன்னதாகவே முத்தி பெறுவதற் கேதுவான சித்திகளைப் பெற வேண்

டியத்து அவசியம் என்றும், உடலழிந்தால் பிறகு முத்தி சாதனத்திற்கு அனேக பிறவிகளை அடைய வேண்டி வருமென்பதை ஊகித்தறிந்தே, யோக சாதனத்தைக் கடைபிடித்தவர்கள். அவ்வித யோக சாதனத்திற்கு காய கற்ப வகைகள், அஷ்டமா சித்திகளும் முக்கியமானவையென்றும் கண்டு தெளிந்தவர்கள். இவர்கள் வாத வைத்தியத்தில் ஈடுபட்டும், யோகம் ஞானம் வழியில் தங்கள் அநுபவத்தையும், அவ் வழியில் காணக்கூடிய பலவித இரகசியங்களையும், அற்புதங்களையும், தங்கள் நூற்களில் உலகத்தாருக்குத் தெளிவாக காட்டியுள்ளார்கள். இவர்களால் தான் உலகம் நடைபெறுகிறதென்பதையும் இவ்விடம் மறக்கற்பாலது.

தற்கால தமிழ் வைத்தியத்திற்கே இவர்கள் காரண கர்த்தர்களாகி, உலகத்தாருக்கு தமிழில் செய்யுள் ரூபமாகத் தெளிவான நடையில் எழுதி பயன் படும்படி அனேக நூற்களைப் பாடி வைத்த மகான்கள். இவர்கள் தொகை 70,000, 80,000, ஏழு லட்சம் என்றும் பலவாறாகச் சொல்லப் படும். இவர்களை மேனுட் டார் முதலிய அனேக வகுப்பார்கள் பலவிதமாக பெயரிட்டு வழங்குவார்கள். இவர்கள் வல்லமையைப் பற்றி அடியிற்கண்ட செய்யுளால் இனிது விளங்கும்:-

காரப்பா சித்தன்கற பததோ டொன்றிக்
கைலாச பாசமதாய்க் கருதி வாழ்வான
நேரப்பா கற்பமதை யுண்டு தேறி
நிசமான வாசியிற் சென்றிருப்பான் ருனே.
தானுன தானவனாய் நின்று வாழ்வான்
சதாகோடி நாளுமொரு நாளாய் நிற்பான்
ஊனுன காயாதி கற்ப மெல்லாம்
உண்டு கரை யேறியவ னுறுதியாவான
வானுன அண்ட பகிரண்ட மெல்லாம்
வரைகடந்து நிலையகற்றி வந்து சேர்வான்
தேனுன மொழியுடையா ளமுதா பானம்
தினந் தோறும் கொள்பவனே சித்தனுமே.

(கைடப்பிள்ளை கலைக்கியானம். 120.)

Siddhars are those who lived and maintained their bodies as they desired best. They were mostly of a Tamil Saiva sect which maintained Siva for its God, and rejected everything else in the Saiva system which was inconsistent with the pure Theism. They had investigated that the body, though transient was the one and only instrument for attaining success in the Spiritual development and growth; and so, worked out to attain the eight supernatural powers, as Anima, Magima, Lagima, etc. essential for their goal, as mentioned in Silappathigaram. They further realised that, if the body could only be made strong and perfect, they could get rid of birth and death and live for ages together. They are the greatest men holding tremendous powers in themselves by way of Yoga practice and rejuvenation. They are capable of enjoying spiritual success in their mortal bodies.

They further attained Spiritual awakening by rousing, with their suppressed breathing, the Kundalini ('Serpent power' as it is termed) lying dormant at the base of the spinal coloumn in the region of the sacral plexus; and with the help of remedies of high potencies and virtues, consisting of all kinds of drugs, minerals, metallic preparations and poisons, they sought for Elixir of life, thus conquering all infirmities against grey hairs, wrinkles of the skin, old age and death. They could fly through the aerial regions with the aid of animated mercurial pills and even visited all the planets and stars and enjoyed the pleasures and wonders found therein.

So, they are men holding tremendous and extraordinary powers, superhuman in nature, and can even, in this life, change their bodies (physical) into god-bodies (etheric). There are several such cases mentioned by Siddhars in their books; they can change the very material of their bodies and re-arrange the molecules in such a fashion that they may have no more sickness or death. They can send mental electricity without the aid of nerve-channels, thus holding communion by remaining in their own places, with any body and anywhere in the Universe

Kapila, Goutama, Vashista, Viswamitra and others also belong to this very school of Siddhars. In Sanskrit, they were mistakenly called Rasayanas simply for the reason that Rasayanas cannot be compared with Siddhars, as

the former were only Alchemists without much of Spiritual power. Siddhars also are of opinion that the said powers can be gained *to a certain extent* by mere chemical means. But Siddhars had gained complete success in Alchemy, Medicine and Yoga. Their principle is that ideality and spiritual knowledge can only be attained through Yoga and to reach this, bodily existence is essential; and so, they wanted to gain success before they die. They realised that if the body came to an end, it would take a longer time to reach the goal by being born again and again, and in this way, much time will be lost.

So, they held that the eight supernatural powers and rejuvenation were essential factors for Yoga practice leading to eternal bliss. Moreover, they laboured much in the field of Alchemy and Medicine; and also attained success in Yoga and Philosophy. They clearly showed their knowledge and experience, together with some secrets and miracles involved therein, in their books. It is not to be forgotten here that they are considered to be the guardians of the world and exist for the benefit of the public at large. They are mainly responsible for the Tamil Medicine of the present day and also for many other sciences of public utility. They are mentioned as 70,000 in number or 80,000 by some and even 7 lakhs by others.

They are called by different names in different countries by the Westeners as Masters of Theosophy, Sophists in Greece and Magus by the Rosycrucians.

The Miracles of Siddhars are briefly summarised in the above Tamil stanza.

NOTE 1.—The term 'Siddhar' has derived from the word 'Siddhi' which literally, means accomplished, achieved or perfected success; and so, it refers to one who had attained his end in spiritual goal. It also refers to a seer, saint or semi-divine being supposed to possess supernatural powers of which only eight are enumerated (See அஷ்டமா சித்தி) The word 'Siddha' does not refer to those men who have become free — a sense in which it is often used.

Dawson in his Classical Dictionary of Hindu Mythology mentions them to be 88,000 in number.

Kapila, the great father of Sankhya Philosophy, Gautama and others are all born Siddhars. Therefore they belong to a class of semi-divine beings of great purity and holiness; and are supposed to dwell in the regions of the sky.

They are the masters of heaven and earth who became such, by their free will; and the goal of their living is to become a force of good to the world. Such a man in the West used to be called as '*Magus*' and therefore, the word Magic is a supreme wisdom which, in a way corresponds to *Siddhi*.

Siddhars were a class of popular writers in Tamil in all its branches of knowledge, and many of their works were written in what is called High Tamil. They were further the greatest scientists in ancient times. Their works in Tamil are supposed to be more valuable than many that have been written in Sanskrit; and they are said to be works less shackled by the mythological doctrines of the original Ayurveda.

It should be known here that the principles of Atlantian Magic appear almost the same as those contained in Siddhar's teaching.

For other details see Introduction to this Dictionery in Vol. I.

NOTE 2—The Siddhars of Southern Indian who are generally invisible, prefer to be aloof from the society, pass their time in solitude in the jungles, and on the mountain tops. They are said to be mostly Tamilians who are familiar with the wonderful properties of rare drugs peculiar to S. India, in their both physiological and psychological aspects. They choose not only to keep their bodies and souls together, but also to prolong their lives to a considerable extent.

They had investigated and studied fully the cause and effect of diseases and all kinds of drugs, mineral and poisons; and thereby came to realise what is beneficial and what was not, to their existence in life. They can even, if they choose, retain their bodies for ages or disintegrate them at their Will; and can also dematerialise or rematerialise their bodies as they liked.

Their knowledge of the inherent nature and the therapeutic and magnetic effects of different drugs, combined with the

practice of regulating their breathing in வாசி யோகம், is supposed to give them longevity and superhuman powers quite beyond our comprehension.

They are extremely long-lived and live for several hundreds and thousands of years if they will, for the reason that they are supposed to have their own method of prolonging life to a wonderful extent by regulating their breathing.

They also make use not only of certain special medicinal drugs, but also metallic preparations such as Sulphur, Mercury, arsenic, gold, magnet, mica etc.

They belong to the class of eighteen supernals or demigods inhabiting the middle air and embracing several subdivisions. "நரைதிரை யில்லை நமனுமி ல்லை" என்னும் பழமொழி இவர்களுக்கே உரித்தது, hence the proverb, "there is no grey hair nor wrinkle and no death" is applicable only to them. This is also said to be the effect of the *panacea* or universal medicine, supposed to be possessed by some alchemists who, from being considered 'immortals', are also termed '*Siddhars*'.

சித்தர், மந்திர வாதி, one curing diseases by hypnotism; 2. வெள்ளி, silver; 3. மனதை வென்றோர், one who has subdued the mind and its faculty; 4. அஷ்ட சித்தி பெற்றவர்கள், those who had attained success in the the eight miraculous powers; 5 ஞான சித்தி யடைந்தவர், those who are endowed with spiritual powers; 6. தெய்வ கணத்தைச் சார்ந்தவர்கள் அவர்களாவது நவநாத சித்தர்களுட்பட வித்தியாதரர், கந்திருவர், கருடர் முதலியோரும், devas of the celestial region as—Vidyadaras, Gandharvas, Garudas etc, including the nine Siddhars of the original school of Siddhars; 7. பதினெட்டு மூலவர்க்க சித்தர்கள், the eighteen Siddhars of the original school known as "Moolavarga Siddhars."

சித்தர் இரகசியம், சித்தர்கள் இயற்றிய நூற்களிலுள்ள வாத, வைத்திய, யோக, ஞான வழிகளுக் குண்டான கட்டு முறை, காய கற்பம், ககன குளிகை, அட்டமா சித்தி, இரச வாதம், முத்திப பேறு முதலிய விஷயங்களைப் பற்றி குரு உபதேசத்தின் மூலியமாய் தெரிந்து கொள்ளக் கூடிய இரகசிய முறைகள், the secret methods which ought to be learnt through the inspiration of a Guru (Spiritual Teacher) on several matters contained in the works on Alchemy, Medicine, Yoga and Philosophy by Siddhars viz—binding of volatile substances, elixir of life, animated mercurial pills, the eight miracles, emancipation etc. 2. ஓர் தமிழ் வைத்திய நூல், a treatise in Tamil on Medicine.

சித்தர் இராசயன நூல், சரக்குகளையபின் பௌதிக இயல்பை விளக்கும் சித்தர்கள் செய்த நூல. இதில் வாத முறை, காய சித்தி முறைகளைப் பற்றிச் சொல்லப்படும். ஆதி வைத்திய முறைபடி உலகின் வஸ்துக்கள்—தாதுகள், பூண்டுகள், உயிர்ப பிராணிகள் ஆக மூன்று விதமாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

இந் நூலை சித்தர்கள் வெகு பயபக்தியோடு தங்களுடைய ஆசிரமங்களில், அதன் பிரயோசனங்களைக் கருதி, பத்திரப் படுத்தி வழங்கி வந்தார்கள். அன்றியும், இந் நூல் (1) நோய்கள் வராமல் தடுத்துக் கொள்ளவும், (2) தாங்கள் இஷ்டம்போல் ஆயுளை விருத்தி செய்துக் கொள்ளவும் (3) தாங்கள் உடம்பை கற்ப மூலியமாய் எப்பொழுதும் நிலைத்திருக்கவும் (4) தங்களுக்கு எவ்விதத்திலும் ஒரு குறையும் வராமல் இருக்கவும், அவர்களுக்கு மிக்க உபயோகமாய் இருந்தது. பிற் காலத்தில், இந் நூற்கள் நோயாளிகளைக் குணப் படுத்தவும், கிழத்தனத்தைப் போக்கி வாலிபத்தை யுண்டாக்கு வதற்கும, இரச மருந்துகளைக் குறிக்கவும் உபயோக மாயிற்று.

சித்த முறையில் இரசாயன மருந்துகளுக்காக மூலிகைப் பூண்டுகளை புதிதாக பரிப்பதற்கும், சேர்ப்பதற்கும் ஓர் நூதனமான வழி யொன்று சொல்லப் பட்டிருக்கிறது. அதாவது, சில கிரகங்கள் கூடுங் காலத்தில் இரவாயினும் பகலாயினும் சரி, மூலிகைகள், அவைகளுக் குண்டான பூரண குணத்தைக் காட்டும என்பதுதான். இவ் விஷயம் வேறு எந்த வைத்திய முறைகளிலும தற்காலம் அநுசரிப்பதே கிடையாது. இதனால் இரசாயன மருந்துகள் தயாரித்தது, குணமற்று ஒன்றுக்கும் பிரயோசனமில்லாது போகும்.

மேலும், இரசாயன மார்க்கத்தில் வைப்பு முறையில சித்தர்கள் தங்கள் நூற்களில் மறைவு இல்லாமல் சொல்லி யுள்ள முறையை அறியாது, நம்மவர்கள் தப்பாக அர்த்தங் கொணடு மிக்க அசட்டையுடன் பாவிக்கிறார்கள். ஆகவே இச் சித்தர் இராசயன நூற்களை, மேனாட்டில் (ஐரோப்பாவில) இடைக் காலங்களில் வழங்கி வந்த இரசாயன நூலையும் கூட்டிப் படிப்பது மிகவும் அவசியமானது.

இதர நூல்களைவிட, இந் நூல்தான் ஆதரவில்லாமற் கை விடப்பட்டது. ஏனெனில், அனேக அறிவாளர்களும், கல்வி நிபுணர்களும், இந் நூலின் விஷயங்கள் தங்கள் அறிவுக் கெட்டாதபடி அவ்வளவு சிக்கலயிருந்ததினால் தான், அவர்கள் இது விஷயமாக எடுத்துக் கொண்ட முயற்சி பலனில்லாமற் போய் விட்டது. அன்றியும், தற்காலத்தில் வழங்கப்படாத பரிபாஷையில் சிக்கலான நடையில் எழுதியிருப்பதால், இதை ஆராய்ச்சி செய்வதற்கு மிக்க சிரமமாய் இருந்தது. ஆகவே, சித்தர்கள் முறையின் போக்கை நமக்கு ஒருவர் தொட்டுக் காட்டாமற் போனாலும், நாமும் ஆழ்ந்தவரையிலும் முயற்சிக்கா விட்டாலும், இந் நூல் விளக்கத்தை தெரிந்து கொள்ளவே முடியாது. வாத முறையிலோ, எல்லா சித்தர்களும் இந் நூலை 18 வகுப்புகளாக பிரித்தும், ஒவ்வொன்றிலும் இத்தனை விதங்களாக தயாரிக்க வேண்டுமென்றும், சொல்லியிருக்கிறார்கள், அவையாவன, Science of Siddhars describing the chemical nature of substances. According to the ancient Hindu Chemistry, substance is universally divided into three classes—minerals, vegetables and animals.

Siddhars preserved this chemistry as a sacred book in their various Ashrams (hermitage) because of its usefulness to them (1) to keep themselves a proof against diseases (2) to prolong their lives to any period they liked (3) to make their bodies ever existent (4) to keep themselves above wants. Later, it served to indicate the therapeutic use of mercury for curing the patients and restoring youth to the aged.

Under the Siddha system of chemical medicines, there is a unique feature ordained to be observed in gathering and extracting the plants afresh, because their occult properties are at the highest, at a certain time of the day or night, during some planetary conjunctions, which is not at all being observed now by any of the other systems of medicine. So, medicines chemically prepared untimely, will not be effective. It was already pointed out elsewhere that the advanced scientific systematic knowledge in the synthetic chemistry of the ancient Siddha School,



rather than Indian mystic school, is being much mistaken and very irreverently treated by the subsequent writers; and therefore, it is very essential to read this Siddha Chemistry along with the Chemistry of the Middle Ages in Europe.

If at all any science is neglected, it is this subject. It has no doubt baffled the attempts of many master intellects and erudite scholars owing to the complex nature of the subject. All the more, it was difficult to investigate, because it was couched in hidden languages in all its technical and technological details unspoken just now. So, it is very difficult to understand this chaotic literature unless we are initiated and trained in their trammels and dive deep to the bottom. Even this may be practically impossible sometimes by an initiate unless he is an adept.

But coming to the regular portion of alchemical chemistry all the Siddhars have divided the subject into 18 branches, and the number of preparations under each head were also given by them and they are:—

1. களங்கு (உலோகங்களை அணுக்களாக பிரிப்பது) splitting the metals into atoms)—551 kinds.
2. சிந்தூரம், sulphides or sindurams —1010 kinds.
3. குரு பற்பம், caustic or maior oxides—705 kinds.
4. மெழுகு, viscicular or wax-like unguents—307 kinds.
5. செயநீர், chemical solvent waters —105 kinds.
6. திராவகம், acids—66 kinds.
7. தைலம், medical oils from organic substances—7 kinds.
8. இரசக் குளிகை, consolidated mercurial phalluses—1020.
9. நவலோக பற்பம், metallic oxides (from 9 metals)—51 kinds.
10. சீற்றினத தாரி, destructive agents 9 kinds.

## சித்தர் கல்வி

11. உருக்கினத தாதி, melting agents—(few).
12. வர்ணததுக் காதி, colouring agents 7 kinds.
13. சுண்ண வகை, alkaline oxides and alkalies (Numerous).
14. கட்டு வகை, binding agents (numberless).
15. சததுரு மிததுரு சரக்கு, allied inimical minerals (each)-13 kinds.
16. சிந்தூரததிற் காதி, sulphiding agents—7 kinds.
17. சதது வகை (உப்பு, உபரசம், பாஷாணம், உலோகம், நவரத்தினம், salts, uparasams. poisons, metals and gems) extracting agents (infinite).
18. மாற்று வகை, transmuting or converting agents (endless).

NOTE I.—The old chemistry evidently borders upon ancient Alchemy which is an unexploded science. So far safe because mystics save themselves If we enter into the root of this Chemistry, it may lead one to the hidden portion of the whole science regarding the Philosopher's stone which is the despised stone of the West It is also the chemistry that was in use during the Middle Ages in the 16th century in Europe. It was then limited to the pursuit of the transmutation of baser metals into gold and the search for the Alcahest and the Panacea.

NOTE II —This is the old Western Mysticism, apparently a borrowed knowledge from Siddhar's Science, which is not at all understood by the Western continent at the present day with the exception of few like Dr. Franz Heartman of Europe and Spence Louis, the President of American Rosycrucian Society of U. S. America.

Any way, it should be protected necessarily from the purview of the laymen, because the human society would cease to exist by wars, because money entices any to become greedy as for instance the First World War, which crushed the trade So, this has become the sole secret of a few, always all over the world, who would not freely use the secret unless to the chosen initiates.

சித்தர் கல்வி, இந்தியாவில் பூர்வ காலததில் கல்வி முறையானது, பள்ளிக்கூடத்து கல்வி மாதிரி மாணுக்கர்களுக்கு போதிப்பதல்ல.

## சித்தர் கல்வி

ஏனெனில் கல்விமுறை தனிபபட்ட முறையில் இரகசியமாகவும, பயபக்தியுடனும், குருவும சிஷ்யனும் ஆக இருபேரும் ஒருவருக்கொருவர் சம்பந்தமாக ஏற்பட்டதா யிருந்தது. வெளியாருக்கு இதில் யாதொரு சம்பந்தமு மில்லாமலும் இருந்தது. பூர்வததில் கல்வி போதனையும் எல்லா நூற்களினும இவ்விதமாகவே இருந்தது. ஏனெனில் இம்முறைதான் மனே விருததிக்கும், ஆசார அபிவிருததிக்கும் ஏதுவானது.

அன்றியும் கல்வியே, ஒருவனில் மறைந்துள்ள வல்லமைக்கும், மனேநிட்டதிற்கும் காரணமா யுள்ளது. ஆகவே, இது தேக சம்பந்தமான அபிவிருததியே ஒழிய, தற்காலததில் மாணுக்கர்களே பழக்குவதற் குண்டான செய்கைகள் ஆகாது. தெய்வ பக்திக்கு மனதிற்கும் ஆத்துமாவிற்கும் யாதொரு தடை ஏற்படாது இருக்கவேண்டும், அப்படியில்லாத படிப்பு கெடுதியையே விளைவிக்கும்.

இது விஷயற்றை எப்படி ஒப்பிடலாமென்றல், தற்காலத்தில் ஆஸ்பத்திரியில் பல நோய்களால் பீடிக்கப்பட்ட நோயாளிகளுக்கு நிவர்ததிக்காக வேண்டி ஒரே விதமான மருந்து கொடுபபதாகும். அப்படியிலலாமல தனிப்பட்ட முறையில், நோயாளியின் தேகததினுடைய குற்றங்களேயும, மனக் கோளறுகளேயும் கவனிதது சிகிச்சை செய்தால தான் அவன் குணமடைவான் என்பதை உணர வேண்டும். ஆகவே, இதத முறைப்படி பள்ளிக்கூடதது படிப்பு உதவாது என்பதுதான் கருதது, the Siddha system of education in ancient India was not imparted or organised on the scale of mass education like schools and colleges, but the ideal of education is, to treat it, as a secret and sacred process, for the reason that the process of an individual growth (inner) can only be achieved by a close and constant touch between the teacher and the disciple in their personal relationship from which the whole world was excluded.

In ancient times, education, in all its branches of knowledge, was left to be dealt with between the teacher and the disciple, much more in mental and spiritual growth.

A man's inner religious life was treated as his supremely individual, in which the collective life of the community should have no part; and so,

all avenue of influences from external world which might disturb or distract the mind should be closed, so that spiritual life may grow freely in the atmosphere of inner peace.

Moreover, education itself was taken in its original true sense as involving the educing of the latent capacities and potentialities, the personality of the pupil concerned; and was therefore treated as a process of biological devolopment, and not as a mere mechanical process, operating on the basis of collective drill and training, as it is being done at the present day in the system of modern education.

Mechanism is fatal to learning and spirituality where the mind and soul should be left free.

This is like treating the patients differing in their ailments to the same prescriptions, remedies and medicines in a Hospital. If a patient in the other hand, suffering from a particular disease, is given an individual treatment taking into consideration his physical and mental defects, his condition will show much improvement. So mass education stands condemned in the Siddha system.

NOTE.—The process of individual growth (inner) can only be achieved by means of a constant and close relationship between the pupil and the teacher. Even in Medical practice, as in other ways, mutual understanding between the patient and the physician is all the more a necessity, because no substantial progress can be expected thereof.

Paracelsus, the Greecian Philosopher also observes as follows— a physician who knows nothing of the astral man and the innermost centre or the soul, with the external physical body, hence with no spiritual power in himself, can be nothing else but an ignoramus and a quack, even though he might have himself studied all medical books and graduated in all the medical colleges. His boasted science is nothing but an invention to cheat and deceive It is useless and dangerous to make a practitioner out of a person who is not a physician at heart.

சித்தர் களஞ்சியம், சித்தர்களின் விஷயங்கள் முழுமையும், அவர்களின் இரகசியச் செயல்களைப் பற்றியும் கூறும் ஓர் தமிழ் நூல் திரட்டு, a full and exhaustive treatise in Tamil revealing all about Siddhars secrets and their activities.

சித்தர் கற்பம், பொதுவாக சித்தர்கள் நீடூழி காலமிருப்பதற்காக கொள்ளும் கற்ப மருந்து. இதற்கு சாகா மருந்து என்றும் பெயர். இது உடம்பை பலப்படுத்தி, அழியாத நித்திய தேகியாய் சாகாமலிருக்கவும், கிழத்தனம், மரணம், பசி, இளைப்பு, தாகம், நித்திரை முதலியவைகளினின்று விடுதலையாகி, எப்பொழுதுமே, யௌவனமாகவேயிருந்து காலங் கழித்து, காயத்தை சித்தியாக்கி, அநேக ஆயிர வருஷங்களாக உயிருடன் இருந்து கொண்டு, கடவுள் அனுக்கிரகத்தினால், உலக முழுவதையும் சுற்றிப் பார்த்து அனுபவிக்க இடங் கொடுக்கும் தேவாமிர்தத்தைப் போன்ற ஓர் அபூர்வ மருந்து.

இதற்காக வேண்டிய காயசித்தி மூலிகைகள் இன்னதென்றும், தயாரிக்கும் முறைகளும், அதை வைக்க பாத்திரமும், சாப்பிட வேண்டிய காலங்களும், இன்ன விதமாய்த்தான சாப்பிட வேண்டுமென்ற முறையும், வயதின் விபரங்களும், பத்திய முறையும், அதை சாதிக்கும பழக்கமும், பத்தியத் தவறுதலினால் ஏற்படும நோய்களும், இவை முதலிய விஷயங்கள், சித்தர்கள் அவரவர்கள் அனுபவித்தபடி கூறியுள்ள (1) அகத்தீசர் 100, (2) நந்தீசர் 100, (3) போகர் 44, (4) சட்டை முனி 21, (5) கொங்கணவன் 16, (6) திருமூலர் 66, (7) கோரக்கர் 90, (8) இராம தேவர் 71, (9) உரோம ரிஷி 500, (10) மச்ச முனி 200, முதலிய நூற்களில், இவ விவரங்கள் சொல்லியுள்ளது. மேலும் கற்பம் சாப்பிடுவதினால் ஏற்படும் நன்மைகளும் காட்டியுள்ளது. அடியிற் கண்ட செய்யுள் உதாரணமாகவும் கூறியுள்ளது:—

“கற்பத்தை யுண்டால் காயமழியாது
கற்பத்தினாலே காணலாம் கைலையை
கற்பத்தினாலே காணலாம் சோதியை
கற்பத்தினாலே காலையும் கட்டிடே.”

a very rare medicinal preparation taken generally by Siddhars for rejuvenation and for prolonging life. It is also known “ambrosial medicine”. It invigorates the system preventing death and decay of the body, thereby saving from decrepitude, death, hunger, thirst, fatigue, sleep etc. It secures for the

user perpetual youth and mastery over the body. It enables one to live for thousands of years on earth and to roam about all over the Universe with vigour through the grace of the Almighty.

In order to serve this purpose, Siddhars have given several details as regards—the name of the drugs, the process of preparing them, the vessels used for preserving them, the method and the season for taking it, the age at which it should be taken, the diet to be followed, the process of bringing it to practice, the error in diet, and its consequences and the diseases emanating from such failure etc. According to their experience in the use of such medicine, several Siddhars have written on this subject in their books viz. (1) Agathiswar 100, (2) Nandiswar 100, (3) Bogar 44, (4) Sattamuni 21, (5) Konganava 16, (6) Tirumoolar 66, (7) Korakkar 90, (8) Rama Devar 71, (9) Rama Rishi 500, (10) Machamuni 200, and so on.

They have also concluded as to the important benefits derived from the use of it, and the above stanza in Tamil is quoted as an example.

This stanza assures that one can avert death, reach Heaven, see the Astral hight and restrain the respiration.

NOTE.—This rare preparation is only intended for persons following the Spiritual path of life and not at all for materialists who, by their ambition for wealth and desire for worldly pleasures, are likely to commit all kinds of sinful and wicked acts, detrimental to the interest and welfares of mankind. Rejuvenation and Longevity are only intended for men looking for the good of the public and for his own salvation in life.

NOTE.—This Kaya Kalpa or the Elixir Vitae is in itself, a product of Alchemy and something to be made secretly in the laboratory; and its pursuit was restricted to the votaries of Chemical science. Moreover, in early days from the similarity in purpose, and also in the idea underlying each, the elixir of life and the fountain of youth always go together, according to the views of Siddhars; but it is only now that they are considered as separate from each other. Efforts of rejuvenation are considered now as one phase of the healing art, and also as one naturally passed from the Alchemists to the Biologists. These Biologists have now taken up the cause and is still working in their laboratory, along those lines of Dr. Browne Sequard who acquired a notoriety by his proposal to use certain glands in the body to vitalise old men. Another modification of this method is to transplant active sex-organs from one animal to another and succeeding in this, it may lead from animal to human beings whose vitality is waning



சித்தர் காலம், சித்தர்கள் அனேக காலங்களுக்குமுன் இருந்து வாழ்ந்தது உலகம தெரிந்த விஷயம். ஆனால், சில ஆயிர வருஷங்கள் என்று பொதுப்பட சொல்லி வரினும், இன்ன காலத்தில்தான் இருந்தார்கள் என்பதைக் குறிப்பாக நிர்ணயிக்க முடியாது. ஏற்கனவே, நவநாத சித்தர்கள் உலகம் தொன்றுதொட்டு இருந்திருப்பதாகத் தெரிய வருகிறது. இவர்களுக்கு அனேக ஆயிரம் வருஷங்களுக்குப் பின்தான் மூலவர்க்க சித்தர் பதினெண் பேர்கள் தோன்றினார்கள் என்பதையும் நாம் அறிகிறோம். அவர்களால் ஏற்பட்ட கல்வி போதனை ஆசிரமம் அனேக ஆயிர வருஷங்களுக்கு முன்னமே நின்றுவிட்டதென்று சொல்லப படுகிறது. அயோத்தியாவை அரசாண்ட ஸ்ரீராமர் 14 வருடங்கள் வனவாசம் சென்ற போது, அவர் தண்டகாரணியத்தில் சித்தர்களிடமிருந்து பௌதிக வித்தையும், வாத முறையும் கற்றுக் கொண்டதாகவும் சொல்லப் படுகிறது.

அன்றியும், சுமார் கி. மு. 750ல் ஆரிய மக்கள் விந்திய பர்வதத்தைச் சுற்றிலும், துங்கபத்திரா நதிக்கு வட பாரிசத்திலுள்ள வனாந்திரத்தில் அகஸ்தியர் தலைழந்து வசித்து வந்த பிறகே, தென்னாட்டு எல்லையை பிரவேசிக்க ஆரம்பித்தார்கள் என்பதற்கு ஓர் தகுந்த சாட்சியாகும். ஆகவே, ஆரியர்கள் அகத்தியரை தலைவராகக் கொண்டுதான் தமிழ் நாட்டை அடைந்ததாக எண்ணப் படுகிறது.

தன்வந்திரி மாணாக்கரென்று சொல்லப் படும் இவ் வகத்தியர் தான், ஆயுள் வேதத்தையும தென்னிந்தியாவில புகட்டினார் என்றும் கருதப படுகிறது. இவரும், சித்தர்கள் கல்விபோதனை ஆசிரமத்தைப் போல் ஒரு கல்விச்சாலை இயற்றினார் என்றும், அதில் 48

பேர் அல்லது 24 பேர் மாணாக்கர் களென்றும், சிலர் அதுவல்ல, 18 பேர்தான் என்றும், தனது இஷ்டம் போல் சொல்லியிருக்கிறார்கள். இதற்கு பிற்பாடுதான் சித்த மார்க்கம் சீரழிந்தது என்பது தெட்டெனவிளங்குகிறது. ஏனெனில், அகத்தியர் ஆரிய மார்க்கங்களை தமிழ் நாட்டில் உட்புகுத்திய காரணத்தினால்தான், சித்தர்களுடைய அரிய பெரிய செய்கைகளும், அவர்கள் கொள்கைகளும், அது முதல் வேரறுந்து ஒழிந்தது, Siddhars are universally supposed to have lived at a very remote period, and the period of their existence could not be exactly ascertained although it is said to be some thousands of years ago. It is known that originally there was in existence the school of nine Siddhars known as 'Navanatha Siddhars'; and that the School of Moolavarga; Siddhars (18 in number) came to be established after several thousands of years.

Their school ceased to function long long ago. It is said that Rama, the king of Ayodhya who was sent on exile for 14 years, learnt Chemistry and Alchemy from the Siddhars on the borders of Dandhaka forest.

About 750 B. C. the Aryans began penetrating round about the Vindhya Mountains, and the great forest which is on the North bank of Tungabhadra; and their entry is preserved in the tradition regarding Agastya's Advent into the South It would appear that the Aryan migration to the S. India has been referred to this period. Dandhaka forest marked the Aryan frontier, and it is said that the Aryan immigrants came into the Tamil land under the lead of Agastya.

This Agastya who is said to be a disciple of Dhanwantri carried Ayurveda to S. India and founded a new school of medicine after his name. This school is said to have consisted of 48 members, some say 24, others assert only 18, as they liked. According to the legend, it is only after the advent of the so called Agastya, that the Siddha System and the school should have received a death blow as he was responsible for introducing the Aryan culture into the Tamil country. Siddhars period of culture had ceased to exist from this date.

NOTE 1 — Siddhar's period was one of intense intellectual activity in all the arts and sciences. In the realm of medicine, it was indeed a golden age. New ideas took root and flourished. After introduction of Ayur Veda, there was a growing indifference with the past and a thirst for fresh knowledge Nevertheless, during the period of transition, old methods consistently persisted. In the 17th century, Sir Thomas Browne still believed the Siddha system of Medicine regarding stars as potent influences in the control of health and diseases The Galenic pathology of the humours was holding still its own. The soul was believed to be located in the Pineal gland of the human brain A great scholar, and the author of some medical works fixes the Siddha system of Medicine between 10,000—4,440 B.C.

NOTE 2 — The Agastya whom Rama met near Panchavati, could not have been the first Agastya. Anyway, the said Agastya of the Siddha School is only a myth It is very doubtful whether this Agastya is identical with the great Rishi in N. India. Though different Agastyas resided in different places, Puranas tell us that all the Agastyas as one Agastya Rishi. He is said to have written numerous treatises on Medicine, Alchemy, Magic etc.; but they are all considered as literary forgeries copied by his followers from the original Siddha works and fathered on the name of Agastya. Amongst the 18 Siddhars known as Moolavarga Siddhars, there is also one by the name of Agastya who is a Vellala; but he is not the one above referred to. It is presumed that the Arya Agastya is responsible for innumerable changes in the Siddhar's Science in his attempt to secure an equal footing to Ayurveda. So many are the stories current that it is very difficult to sift truth from fiction.

சித்தர் குடியிருப்பு, சோதி விருட்சம், a tree luminous in the dark. It is a species of burning bush—Dictamnus supposed to be found in the mountainous regions of Afghanistan. See சோதி விருட்சம்.

சித்தர் குளிகை, ககன குளிகை அதாவது சித்தர்கள் ஆகாய மார்க்கத்தில் பறப்பதற்காக உபயோகிக்கும் சாரணை தீர்ந்த இரசக் குளிகை. இதை சித்தர்கள் அடியிற்கண்ட

படி பலவிதமாக தயாரித்து உபயோகித்து வந்தார்கள், the animated mercurial pill used for travelling in the aerial regions These pills were prepared and used by the Siddhars in various ways as detailed under :—

I. போகர் நூலின்படி, இக் குளிகை ஆறு விதங்களாகச் சொல்லப் படும். இவைகள் சத்துக்களைக் கொண்டு செய்வது, அவை யாவன, according to Bogar's work, these pills consist of 6 kinds and are prepared from the essence of the following substances and are animated as mentioned below :—

1. உபரசம், Uparasas — 120 times.
2. மகாமூலிகை, Medicinal plants — 21 ,,
3. காரசாரம், Alkaloids — 25 ,,
4. பாஷாணம், Poisons (arsenic) etc. — 68 ,,
5. நவலோகம், Metals — 9 ,,
6. நவரத்தினம், Gems (nine) — 9 ,,

ஒவ்வொன்றைக் கொண்டும் அதன் சக்திக்கு தகுந்தபடி அனேக ஆயிர மைமில்கள் உலாவலாம், each of them will enable one to travel several thousands of miles according to its potent powers.

II. திருமூலர் நூலின்படி, இந்த இரசக் குளிகை சாரணை தீர்ந்ததைக் கருதி எட்டு விதமாகச் சொல்லப் படும், அவையாவன, as per Bogar's work, these animated mercurial pills are classified into 8 kinds according to the number of times they are animated viz :—

1. சொரூபம், soroopam, animated — 51 times.
2. சூட்சமம், sukshumam, animated — 30 ,,
3. கமலினி, kamalini, animated — 21 ,,
4. அட்டமா சித்தி, attama Siddhi, animated — 15 ,,
5. காமினி, kamini Siddhi, animated — 11 ,,
6. யோகினி, yogini, animated — 7 ,,
7. விண்ணேகி, vinnegi, animated — 3 ,,
8. பரிசம், parisam, animated — 1 ,,

III. சட்டமுனி வாத காவிய நூலின் படி, மேற்கண்ட இரசக் குளிகையை சாரணை தீர்க்கும வகையைக் கருதி 7 விதமாக வரிசைக் கிரமமாய கூறப் பட்டுள்ளன. அவை யாவன, according to the Sattamuni work on Alchemy, the said mercury pills are classified into 7 kinds according to the number of its animation as mentioned below viz :—

1. சகடு, sagadu, animated. Once
2. கெவுனம், gevunam — 3 times.
3. கேசரி, kesari — 5 ,,
4. அட்டமா சித்தி, attamah Siddhi — 7 ,,
5. கமலினி, kamalini — 9 ,,
6. காம தேனு, kamadenu. 10 ,,
7. சொரூபம், soroopam — 15 ,,

IV. கொங்கணவர் நூலின்படி இரசமணி சாரணை தீர்க்கும் வகையைக் கருதி 12 விதங்களாகவும், மச்சமுனி கையில் கொடும பேதி குளிகையும், கோரக்கரிடம போகிக குளிகையும, ரிஷப யோகிக் கையில் சாய்கை வேதியும் இருந்ததாகவும சொல்லப் படும், according to the works of Konganava, the said animated mercurial pills consisted of 12 kinds, and it is said that the pill possessed by Machamuni was Kodumbethi, that the one Korakkar had with him was Bogi pill, and that the one possessed by Rishaba Yogi was Saigai Vethi pill.

NOTE.—The said animated mercurial pills according to Siddhars process would, if retained in the throat, not only enable one to travel in the aerial regions, but also neutralise the action of fire, dematerialise the body, lead one to the path of wisdom, throws the Astral light and serve for various other purposes. No books so far, either in Sanskrit or in any other language except in Tamil Siddha works could be found treating on such a subject; and no nation in the whole world except Tamilians, was aware of this wonderful art. This in itself is a sufficient proof that the highest attainments of the Siddhars in spiritual science are marvellous and awe inspring. No one has, up till now, attained the glory of exploring fully to the extensive field of this unknown science.

சித்தர் கூட்டம், பல சித்தர்கள் ஒரு விஷயத்தைப் பற்றி ஒரே இடத்தில் கூடியிருக்கப் பட்ட தொகுதி, the meeting of several Siddhars to form an assembly for some object in view.

சித்தர் கூனி, கட்டுக் காடை, a bird of large size of the Coracidae family; Indian roller—Coracias indica.

சித்தர் கொள்கை, சித்தர்கள் ஒவ்வொருவரும், தாங்கள் எழுதியுள்ள நூற்களாகிய வாதம், வைத்தியம், யோகம் ஞானம் இவைகளின் விஷயங்களில, தாம் கொண்ட கருத்தின் கோட்பாடுகளை தெளிவாகக் கண்டிருக்கிறார்கள். மேற்கண்ட நான்கு வகைகளில், ஒவ்வொன்றிலும், அவர்கள் கருத்தின் கோட்பாடுகளை அடியிற் கண்டபடி சுருக்கமாக விவரிக்கப் பட்டுள்ளன, every one of Siddhars has written clearly in their works on four subject, viz —Alchemy, Medicine, Yoga and Philosophy; and they have all mentioned clearly of their syllogism or propositions. These propositions are mentioned below briefly under each head of the four said subjects viz :-

I வாதம், *Alchemy* (Chemistry)—

1. வாதி முக்கியமாய் தெய்வபக்தி யுள்ளவனாயிருக்க வேண்டும். ஆகவே, வைராக்கியம், தயாளம், தருமம், மேலான மன சுத்தம் ஆகிய இக் குணங்கள் அவசிய மானது, an Alchemist should necessarily be a Spiritualist and so, strong will, benevolence, charity and above all, purity of mind is essential.

2. இவனுக்கு பணம் அல்லது பொன் பேரில் இச்சையே இருக்கப்படாது, he should not have avarice or greediness for gold or money.

3. இவன் பிறவியிலேயே சோதிட கிரகங்களின்படி வாதிக்குள்ள சக்திகள், பூர்வ கருமானு சாரப்படி அமைந்துள்ளவனா யிருக்க வேண்டும், he should be a born Alchemist, taking birth at a particular constellation of stars, according to his former Karma.

4. எப்படி ஒரு குழந்தை கருப்பத்தில் தரிக்கும்போது, பஞ்ச பூதங்களின் உறவு பிரதானமோ, அதேமாதிரி வாதம் சித்திப்பதற்கு மேற்கண்ட ஐம் பூதங்களின் உறவு கிரமப்படி அமைய வேண்டும். இதில் தவறுதல்கள் ஏற்பட்டால், கருவிலிருக்கும் சிசு எப்படி சிதைந்து போகுமோ, அது போல, வாதம் முறைகளும், முறை பிசகினால் சித்தி யாகாது, the principles of five elements on which the product of Alchemy is based, is in every way identical with those comprised in the generation of a child. If any defect, excess or other changes in the five elementary principles of the alchemical process take plac, it is a failure just like the abortion in a child.

II. வைத்தியம், *Medicine* —

1. இயற்கையில் ஏற்பட்ட விதிகளை சரிவர தெரிந்து கொள்ளாமலும், அதற்குண்டான உண்மை யறிவை செலுத்தாமலும், செய்யும் வைத்தியமானது எப்பொழுதுமே, கொள்கையும், அபிப்பிராயத்தையும், மனப் போக்கையும் மேற்கொண்டதாக இருக்குமே ஒழிய, உள்ளபடி நோய்களை நிவர்த்திக்கும் குணம் வாய்ந்ததாய் இருக்கவே இருக்காது, a system of medicine without understanding and without a true knowledge of natural laws, will remain for ever a system of theories, mere opinion and of passive observation and inactivity.

2. சித்தர்களின் கொள்கைப்படி, மனிதனுக்கு நோய்கள் ஏற்படுவதெல்லாம் துஷ்ட தேவதை அல்லது கிரகக் கோளாறுகளினாலே ஒழிய வேறல்ல. ஆகவே, இத்தகைய கெட்ட கோளாறுகளை தடுக்க வேண்டி அனேக நூதனமான விதிகளையும், அனுஷ்டானங்களையும், மாந்திரீக, மனோவசியக் கிரியைகளையும் தாங்கள் நூற்களில காட்டியுள்ளார்கள், according to Siddhars theory, diseases in man are caused by the intervention of evil spirits or planets and so, they offered many curious rules and rites for averting their influences

and effects, through magnetism, magic etc.

3. மனிதன் தன்னுடைய சொந்த சக்தியினால் ஒன்றும் செய்துவிட முடியாது, ஏனெனில் தனக்கு ஏற்படும் நம்பிக்கையின் ஆதரவினால் தான் ஒவ்வொரு காரியமும் சித்தியாகும். இது வைத்தியனுக்கு முக்கியமாய் தெரியவேண்டிய விஷயம், man can accomplish nothing through his own power, but everything can be accomplished through man by power of faith. This truly holds good in the case of a physician.

4. வியாதிகள் இயற்கையில் தானாகவே உண்டாகிறது, தானாகவே தான் அவ்வியாதிகள் குணப்படுகின்றது. ஆகவே, வைத்தியர்கள் மனிதனுக்கு சுபாவத்தில் ஏற்படும் குற்றங்கள், என்ன விதமாய் ஏற்பட்டதென்பதை அறிய வேண்டும், it is Nature that causes diseases; and it is again Nature that effects their cures; and therefore, physician should know the process of Nature.

5. வியாதிகளும், மற்ற கெடுதியான அசம்பவங்களும், கிரக தோஷங்களினாலும், பூர்வ கருமானுசாரத்தினாலும் தான் ஏற்படுகிறது என்பதை சித்தர்கள் பூரணமாக தெளிந்துள்ளார்கள், Siddhars fully realise that planetary evil effects (கிரக தோஷம்) and sins of previous birth known as Karma are the causes of diseases and other misfortunes.

6. ஒரு நோயாளிக்கு சிகிச்சை செய்வதற்கு முன்னதாகவே, வைத்தியன் நோயாளியின் சாதகப்படி கிரக நிலைகள் தெரிய வேண்டியது முக்கியம். ஆகவே, தெரிந்த பிறகு தான் வைத்தியம் செய்ய ஆரம்பிக்க வேண்டும், according to a patient's horoscope, the movements and disposition of the planets are of much importance in Medicine; and so, it is most important for a physician to consider the aspact of heavenly bodies before starting the treatment of a patient.

III. யோகம், *Yoga.*—

1. ஒரு யோகியானவன், பரகாயப் பிரவேசம் அதாவது பிறனுடைய உடம்பினுள் தான் புகுந்துவிடக் கூடும், இறந்த பிரேதத்தில் கூட பிரவேசிக்கலாம் பிறகு இவ்வுடம்போடு எழுந்து இங்கு மங்கும் கூடத் திரியச் செய்யலாம். அன்றியும், புதிதாக மனிதரை சிருட்டிக்கலாம், மனதையும் உண்டாக்கலாம், இதை 'சிருட்டித்த வுடம்பு', 'உண்டாக்கின மனது' என்று கூறப்படும், a Yogi can enter another's body and even the dead body, and make it get up and even move about. He can also manufacture bodies and minds called 'created bodies' and 'created minds'.

2 யோகாப்பியாசம் ஒன்றினால் தான் பிறப் பிறப்பை, வெகு சீக்கிரமாகவும், சுருக்கமாகவும் முடித்துக் கொள்வதற்கு குறுக்கான வழி. இத்தகைய யோகம், ஒரு குரு விருந்து தொட்டுக் காட்ட வேண்டும்; அப்படியில்லா விட்டால் உடம்பிற்கு கெடுதி ஏற்பட்டு சௌகரியம் உண்டாகாது, the shortest and the swiftest way to complete the cycle of evolution in man is by Yoga, which cannot be practised without having some one to guide and explain what they mean; lest there will be a break down in physical condition and health.

3. பரிசுத்தமான மனதே, யோக விஷயத்தில், ஒரு குருவாகத் தனக்குள் நின்று காட்டிக் கொடுக்கும். ஏனெனில் தெய்வ பக்தி மேலுக்கு ஓங்க தனைத் தானறிவதற் குண்டான அறிவு விளக்கமும் மேம்பட விருத்தியாகும். அப்போது அந்த உயர் நிலை பெற்ற மனதே குருவாக நிற்கும், pure mind itself plays the part of a Guru (spiritual guide), because when the spiritual practice is increased, the power of comprehension is also increased and this, enables the higher mind to act as a guide.

4. பஞ்ச பூதங்களை யோகிதான் ஆளுகைக் குள்ளாக்கலாம். ஆகவே, இயற்கையி லுண்டான பேதங்களையும் மாற்றலாம். சிருஷ்டி வகையில் எவ்விதமான ரூபமும் எடுக்கலாம். தன்னுடைய உடம்பையே போக்கவும் செய்யலாம், மறுபடியும் ஆக்கவும் செய்யலாம், man can have command over the elements; and as such, alter the course of Nature, may assume any form in the creation, dematerialise and rematerialise their bodies.

5. குண்டலினிக் குள்ளே வலிவும், நரம்பு சக்தியும் தகுந்தபடி இல்லாவிட்டால் இருதயம் துடிக்காது, நுரையீரல் மூச்சு விடாது, உடம்பில் இரத்த ஓட்டம் உண்டாகாது, மற்ற உறுப்புகளும் தனக்குரிய இயற்கை தொழில்களை முடிக்கவே இயலாது, without the energy or nerve-force stored up in Kundalini (Serpent power), the heart cannot beat, the lungs cannot breath, the blood cannot circulate and the various other organs cannot perform their normal functions.

6. மனிதருக்கு இயல்பிலே தங்களுக்குள் உண்டான காந்த சக்தியினால் உலகத்தாரை தன் வசமாக்கவும், ஒரு தேசத்து வகுப்பினர்களை தன் ஆட்சிக் குள்ளாக்கவும் செய்யலாம். இதற்கு சாதாரணமாக பிராணாயாமத்தினால் உண்டான வலிவே காரணமாகும். உதாரணமாக, ஐரோப்பாவி லிருந்த நேபோலியன், அமெரிக்காவில் எப்ராம லின்கன், தற்காலத்திய மசோலினி, இட்லர் இவர்களுக் கெல்லாம் உண்டான காந்த சக்தியே காரணம், the personal Magnetism is the subtle force developed in man, by which people are influenced and the nations are controlled, and it is due to the strength of Pranas as for instance, Nepoleon of Europe, Abraham Lincoln of America, the present day Mussolini, and Hitler were all endowed with this gift.



IV. ஞானம் (தத்துவ ஞானம்) *wisdom* (Philosophy)—

1. உலக சிருஷ்டியில் மனிதன் ஒருவனுக்கே, எல்லாவித சக்திகளும் உடம்பினுள் மறைந்துள்ளது. இச் சக்தியால் மனிதனை கடவுளின் ஆற்றலுக்கு சமமாகவே சொல்லலாம். ஆனால் மனிதனோ, இப்படிக்குள்ள சக்திகளை கொஞ்சமேனும் கவனியாது தனனுடைய முயற்சியினால் அதை வசமாக்கிக் கொள்ள வழி தெரியாததே ஒரு பெருங் குறைமாகும், man is the only being in the creation, with all kinds of latent powers reaching up to the level of God; and his only defect is that he does not care to know that such powers are hidden in him, and he has to make them patent by his perseverance.

2. மனிதனுக்கு இயல்பிலே இருக்கும் பூர்ண சக்தி, மாயையினால மறைக்கப் பட்டு, சரியான பாதையிற் செல்ல ஒட்டாமல் தடுக்கும். அப்படி தடுக்காதபடி செய்து விட்டால், இயற்கை சக்தியானது தனது பூரண வலிவைக் காட்டும், perfection in man's nature is barred by Maya and prevented from taking its proper course; and when once, this bar is removed, Nature rushes with all its potentialities and powers.

3. நமது உடம்பில் உள்ள உயிர் இருக்கவும், நிலைபெறவும் காரணமாகவுள்ள ஆதாரமாயிற்கு, இது விஷயமாக அனேக ஆதரவுக ளுண்டு, அவைகளாவன—பஞ்ச பூதங்கள். ஆறுதார நிலைகள், மூன்று நாடிகள், மூக் குணங்கள் இவை முதலான 96 தத்துவங்கள், there are in our body several supports to the soul for the existence and sustenance of life and they are—the five elements, the six plexuses, the three Nadies, the three humours etc. constituting in all 96 Tatwas i e. the constituent principles in nature.

NOTE.—This is the Eastern Physiology,

describing the Tatwas from the lowest and the greatest, which is the earth. Both Vedantists and Siddhantists accept the number 96 on the ground that the Vedantists 36, when still more analysed, give rise to 96. The Philosophy underlying these Tatwas is briefly enumerated in the table given in the Introduction of this work Vol I

**சித்தர் சமாதி**, சித்தர்கள் தங்கள் உயிரை நீத்து இலிங்க வடிவமாகி நிலைபெற்ற இடம். பொதுவாக, சமாதி என்பது மனத்தை ஒருமைப் படுத்தி தன் வசமாக்கி உலக விவகாரங்களை மறந்து நிற்கும் நிலைமை. இது இரண்டு விதம, அதாவது சவிகற்பம், நிருவிகற்பம். ஒன்றில், சித்தர்கள் தங்கள் இயற்கை சக்திகளை வென்று மேன்மையான எல்லாவித சித்திகளும் அடைவார்கள்; மற்றொன்றிலோ, யாதொரு பந்தமில்லாமற்படி போத நிலையடைந்து இருப்பார்கள். ஆகவே, சித்தர் சமாதி நிலையில் தன்னைத்தான் அறியும் ஆத்ம சக்தியை அடைவார்கள். அன்றியும, தன் ஆத்மாவை மற்றொன்று உடம்பிலும் புகும்படிச் செய்யக் கூடும். அவர்களின் கடைசியான கொள்கையோ, ஆத்ம ஞானத்தை அடைவதாகும். ஆதலின், சித்தர்கள் தங்கள் உருவத்தை இலிங்க வடிவமாக்கி நிலையுற்று இருப்பார்கள். இதுதான் சித்தர் சமாதி. இவ்விதமான சமாதிகள் இந்தியாநாடு முழுவதிலும் உண்டு. ஆயினும், தமிழ் நாடாகிய தட்சண பாகத்தில் விசேஷமாய்க் காணலாம், வேறு சில ஊர்களிலும் உண்டு. இச் சமாதிகளின் மேல் கோயில கட்டி, விந்து நாதக் கூறுகவுள்ள இந்த லிங்கத்தையும் ஆவுடையார் என வழங்கும் சத்தி பீடத்தையும் சேர்த்து சிவரூபமாகக் கொண்டு நிலை நிறுத்துவார்கள். ஏனெனில், சாதாரண கோயில்களைவிட இதற்கு உள்ள மகத்துவங்கள் மிகச் சிறந்தது. இவ்விதமான பிரசித்தி பெற்ற கோயில்கள் நால்வரால் பாடப் பெற்றுள்ளன. ஆகவே, சித்தர்கள் ஒவ்வொருவரும் எவ்வெவ்வூரில் சமாதியானார்களோ, அச் சமாதிகளின் மேல் சோழராசனால் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன.

அன்றியும், நூல்களில் இல்லாத எவ்விதமான விஷயங்களையும் மூல சாட்சியங்களால் வேறு வகையில் பரிசீலனை செய்யும் பகுதியாளர்களும், மறைந்து கிடக்கும் பூர்வ வஸ்துக்களை கண்டறியும் ஆராய்ச்சியாளர்களும் தாங்கள் சளைக்காமல் மேற்கொண்ட உழைப்பினால் தான், சரித்திரமே ஏற்படாத ஆதி காலத்து தமிழர்கள் வாழ்க்கை இவ்வளவு சிறப்பு வாய்ந்ததென்று, தெட்டென விளங்கலாயிற்று. இத் தென்னிந்தியாவாகிய தட்சணத்தில் அநேக மகான்களின் பக்தி மார்க்கப் போக்குகள் அடங்கிய விஷயங்கள் அநேகம் வெளிப் படாமல் இன்னும் மறைந்து கிடக்கிறது. மேற்கண்டபடி, சமாதியடைந்த சித்தர்களின் பெயரும், அவர்களுக்கு சோழராசனால் கட்டப்பட்ட கோயில்களின் ஊர் பெயரும் அடியிற் கண்டுள்ளன. அவையாவன,

the final place of beatitude, where Siddhars have transformed themselves to a phallus. Generally, Samadhi is that state of complete concentration where the mind becomes superconscious and all external matters and conditions are forgotten. It is divided into 2 kinds Savvigarpam, Niruvigarpam. In the first kind, the Siddhars gets all Siddhis i.e. powers of controlling nature, and in the other, perfect super-consciousness, and it is the state which gives freedom. So, a Siddha in Samadhi enters his own Self; and he can also enter into another's self. The final goal is the union of human soul with the Divine Spirit. So, Siddhars who attained success metamorphosed their bodies into Linga (phallus) form. So, this is known as Siddhar's Samadhi.

Such kind of Samadhies of Siddhars will be found throughout India and especially in the S India and some parts of other conntries. Hindu temples were built on these Samadhies with Sivalingam (Phallus) as the presiding Deity, symbolising Bindu and Natham, (Lingam and Avudayar), to which are significantly attributed all aspects of the temples purposefully designed and erected. These renowned temples were eulogised by the great "Tamil Nalwars". Wherever, these Siddhars have each attained Samadhi, temples were built by the king Chola The indefatigable labours of Anthropologists and Archeologists have doubtless resulted in marshalling other records than those in writing, which throw fairly good light on the life of Tamilians of pre-historic times. Many chaptere on the spiritual evolution of renowned men as Siddhars, Rishis etc. of S. India still remains as a sealed cover. The following are the details of names of places and the

names Siddhars for whom temples were built by king Chola over their Samadhis (edifices) viz:—

1. திருமூலர், Tirumoolar — சிதம்பரம், Chidambaram.

2. கொங்கணவர், Konganava — திருப்பதி, Tirupathi.

3. போகர், Bogar—பழனி மலை, Palani hills.

4. சட்டைமுனி, Sattamuni —சீர்காழி, Shiyali.

5. மச்சமுனி, Machamuni—திருப்பரங்குன்றம், Tirupparangundram.

6. கருரார், Karurar — தஞ்சாவூர், Tanjore.

7. இராமதேவர் அல்லது யாகோப், Rama Devar alias Yacob — அழகர் மலை, Alagar Hills.

8. இடைக்காடர், Idaikkadar — திருவண்ணாமலை, Tiruvannamalai.

9. கமலமுனி, Kamala Muni— திருவாரூர், Tiruvaloor.

10. பாம்பாட்டி, Pambatti — திருக்கடையூர், Tirukkadaiyur.

11. புண்ணாக்கீசர், Punnakisar — நாங்கணுச்சேரி, Nanganacherry,

12. கோரக்கர், Korakkar — பொய்யூர், Poyyur.

13. அழுகண்ணி, Aluganni — நாகப்பட்டணம், Negapatam.

14. சுந்தரானந்தர், Sundarananthar — மதுரை, Madura.

15. குதம்பை, Kudambai — மாயவரம், Mayavaram.

16. கடுவெளி, Kaduveli — காஞ்சிபுரம், Conjeevaram

17. நந்தி தேவர், Nandi Devar — காசி, Benares.

18. வால்மீகர், Valmiki — எட்டுக்குடி, Ettukkudi.

19. நாரதர், Naradhar — திருவிடைமருதூர், Tiruvidaimaruthoor.

20. பதஞ்சலி, Patanjali— இராமேசுரம், Rameswaram.

21. காசிபர், Kasibar — உருத்திரகிரி, Ruthragiri.

22. விஸ்வாமித்திரர், Viswamitra — திருவாடுதுறை. Tiruvaduthurai.

23. காலாங்கி, Kalangi — காஞ்சிபுரம், Conjeevaram.

24. தன்வந்திரி, Dhanwantri—வைத்தீஸ்வரன் கோவில், Vaitheeswaran Koil.

25. கும்பமுனி, Kumba Muni — கும்பகோணம், Kumbakonam.

சித்தர் சிகிச்சை, சித்தர்களுடைய வைத்திய நூற்களில் சொல்லியுள்ள முறைப்படி நோய்களை குணப்படுத்த வேண்டி செய்யும் பரிகாரம். இது விஷயத்தில் சித்தர்கள் கொண்ட நோக்கம் பல விதமானவை. அவர்கள் முறைப்படி, வியாதிகள் இருவகையானவை, அவை உடம்பையும், மனதையும் அநுசரித்ததாகும். ஆயினும், இரண்டும் தேக வமைப்பைப் பொருந்தினதாகு மாதலால், ஒன்று மற்றொன்று இல்லாமல் இருக்க முடியாது. மேலும், சித்த வைத்தியத்தில மனிதனின் வெளிப புறமான உடம்பை மாத்திரமல்ல, உட்புறமான ஆத்ம நிலையையும் கவனிபப தாகும். ஆகவே, அசித்தை விட சித்தையே ஆதாரவாகக் கொண்டது. இவ்வித சிகிச்சை எளிதாக தோன்றினாலும், மிகுதியாக அறிவைப் புகட்ட வேண்டிய விஷயமாகும். இது அனேக ஆயிர வருஷ காலமாகவுள்ள ஆராய்ச்சிகளைக் கடந்தது.

சித்தர்கள் நோயின் நிலைமைகளைக் கண்டறிவதற்காக நாடிப் பரீட்சையை கண்டுபிடித்து அதை வெகு நுட்பமாக அறிந்ததும் தவிர, குரு மூலியமாய் சீஷர்களுக்கும், தகபபன் மூலியமாய் பிள்ளைகளுக்கும் தெரியும்படி வழங்கி வந்தார்கள். வைத்தியம் பார்பபதறகு தொடங்கு முன்னமே, இதை முக்கியமாக தெரிந்து கொள்ள வேண்டிய விஷயமாகும். சில வைத்தியர்கள், ஒரு மனிதன் நோயாளியா யிருந்தாலும சரி அல்லது சௌக்கியமாய் இருந்தாலும் சரி, ஒரு வாரம் அல்லது சில நாட்களுக்கு முன்னதாகவே, அவன் நாடியின் குறி குணங்களைக் கொண்டு மரணத்தை திருத்தமாக சொல்லிவிடுவதற்கான அவ்வளவு வல்லமை வாய்ந்தவர்களாக இருக்கிறார்கள்.

ஆகவே, சித்த வைத்தியத்தில் இந் நாடி சோதனையும், நோயின் சிகிச்சையும் மிக்க புகழத்தக்கதா யுள்ளது. வைத்தியர்களோ சிகிச்சை காலத்தில் மருந்தின் குணத்தை கவனிக்காமல், மருந்து கொண்ட பின் நோயாளியின் (1) உணவு செரிமானம், (2)

சுவாசப் போக்கு, (3) தாது நிலைமை ஆகிய பிற் குணங்களை கவனிப்பார்கள்.

மேலும், வைத்தியன் முதலில் ஒரு நோயின் கூறுபாடுகளை கவனியாது, அதனால் ஏற்பட்ட பல கோளாறுகளையும், அவற்றின மூல காரணங்களையு மாத்திரம் தெரிந்து கொள்ள வேண்டி முயலுவான். ஆகையால, நோயின வரலாற்றிலும் அதன் சிகிச்சை விஷயத்திலும், மேனாட்டு வைத்தியத்தை விட மிக்க விசாலமான போக்கைப் புகட்டுவதாகும், the treatment given for curing diseases according to the methods laid down in the Medical works of Siddhars. Several are the aspects of Siddha Medical treatment. According to them, disease consists of two classes—physical and mental, which refer to deviation from the normal physiological and psychological condition respectively; and these two have a common constitutional background and so, neither is known to exist without the other. Moreover, the Siddha treatment consists not merely with the *external* body of man but also the *inner man or the soul.* It is based more on spiritual basis than on materialistic one. Though simple, the treatment is comprehensive, and has stood the test of thousands of years.

It should be known that Siddhars have found out such aids to diagnosis as auscultation and feeling of the pulse. This pulse is being studied with great minuteness, and the secrets involved therein are handed down in strict confidence from father to son or sometimes from Guru to his disciple. Pulse is the most essential preliminary factor in the treatment of diseases, and some physicians are so very skilled in detecting the symptoms that he can often accurately foretell even the death of a person whether he be sick or hale and healthy, a week or so before it actually happens.

So, one of the most interesting phases of Siddha medicine is its diagnosis by way pulse and the treatment of diseases. In the treatment of diseases, the physician does not confine his attention to the immediate effect of his medicine on the disease, but notes with equal care its after-effects and its by-effects in the (1) digestive, (2) respiratory and (3) the reproductive systems.

Moreover, he does not take first into consideration about the manifestation of a particular disease, but only the root and causes of all diseases and disorders; and so, wider and grander generalisation is offered in the cause of diseases and their treatment than the Western medical science.

NOTE.—In this treatment, the patient is always first treated before he is treated for the diseases. It is believed that in most cases, the root cause of the disease is the depletion of nerve-force. By curing nerve disorders and regulating nerve metabolism, certain diseases may be prevented from becoming chronic. If the patients' nerve-force is improved, his defective metabolism due to the defective nerves may also be improved. It is believed that the common cause of diseases is the depletion of nerve-force, and that, in order to be physically sound a man must have adequate nerve-force in all his organs. See also சிகிச்சை.

சித்தர் சூரணம், see சித்தா பொடி.

சித்தர் ஞானம், தன்னைத் தானறியும் சித்தர்களின் பேரறிவு அல்லது ஆத்ம ஞானம். இது சிவனால் அளிக்கப்பட்டது. சாதாரணமாக மனிதன தன்னையும், ஆத்மாவையுமல்லாமல், தன்னைச் சுற்றியுள்ள மற்ற மனிதர்கள், வஸ்துக்கள் தன்மையையும், எங்கும் நிறைந்த ஈசனையும, விவேகத்தால் அறிந்து தெளிவடைவதினால் ஏற்பட்ட ஞானம். இதனால் அவர்கள் நோக்கம் என்னவெனில், உயிர் இருக்கும்போதே முத்திக்கு வேண்டிய சாதன வழிகளைத் தேடிவிட வேண்டியது என்பது தான். இவ்வித நிலையை ஆத்மா ஞானத்தினால்தான் அடையக்கூடு மெனபது அவர்கள் துணிபு. இதற்கு யோகம் முக்கிய ஆதாரமாகும். யோகிகள் அடையும் ஆனந்த மயத்தால் இது கைவல்லிய மாகும், it means the Siddhars philosophy or practical wisdom or the highest stage of spiritual knowledge obtained from Siva. It arose from the study of man and his soul and the self and the human society as well as the nature and matter around him, together with the Universal God. Their aim in this respect is, that salva-

tion should be attained in the life-time of one's own living period with consciousness in himself, and not after death, as it is generally understood; and this is known as 'Ananda Mayam' (ஆனந்த மயம்) stage of the Yogi or the inertness in the activity of the Gnani, and 'the Nirvana of the Buddhists'. Freedom of soul is their goal through perfection, and the method is by Yoga.

NOTE.—This ancient wisdom is surrounded with mysteries, from time immemorial. The great centre of all sublime teachings is always found in the form of mysteries. The end and nature of all these mysteries is only meant to teach the doctrine of immortality or a life beyond the present state. Siddha gnanam which is the real Philosophy and Science of this world can be unlocked by the key of Bindu and Natham.

Siddhars hold that the entire universe comes from one source Divine intelligence. This intelligence is unlimited by time or space (காலம் கடந்த ஞானம்); it pervades all things, it it is eternal and cannot be destroyed. They found that truth does not lie in any religion, but it is in the human soul. The God is in the heart of man and so, Reality is in us. A man of wisdom ought to live like a lotus leaf, which grows in water, but is not moistoned by it. It is easy to be active, but hard to be calm which means the control over mind.

NOTE.—This individual conciousness or knowledge of the soul is the spiritual knowledge attained through Yogic power; and when once this is attained, the Siddhars have only a course of empirical existence in which they are mostly unconcerned. They will always have a matured tendency of being helpful to others; and possess a universal sympathy.

சித்தர் தங்கம், வாதத்தினு லுண்டான தங்கம். இதுவே தங்கச் செம்பு, the synthetic gold obtained through Alchemical process. It is a highly concentrated gold of copper colour.

சித்தர் தமிழ், சித்தர்களெல்லாம் அனேகமாய் சைவத தமிழர்களே என்று இதற்கு முன்னமே கூறப் பட்டிருக்கிறது. அவர்கள் பாடிய வாதம், வைத்தியம், யோகம், ஞானம், சோதியம் முதலான நூற்களெல்லாம் தமிழில் செந் தமிழ் நடையில் தெளிவாகவும், இலக்கணப் பொருத்தமாகவும் செய்யுள் ரூபமாக எழுதியுள்ள விஷயம் அவர்கள் செய்த நூற்களினுலேயே இனிது விளங்குகிறது. அவற்றுள் வாதம், யோகம், மாந்திரீகம், ஞானம ஆகிய இந் நூற்களைப் படித்து அருத்தம் தெரிந்து கொள்ள முடியாத கடினமான முறையில் எழுதப்பட்டிருப்பதாகக் கருதப் படுகிறது. ஆயினும், செய்யுளா யுள்ள வைத்தியம் முதலிய இந் நூற்களையே தனிப்பட்ட முறையில் வாசித்தறிந்தவர்கள் இதை மிகவும் கொண்டாடுகிருர்கள். சோதியத்தைச் சார்ந்த நாடி நூற்களெல்லாம் மிக்க உயர்வான தமிழ் செய்யுளில் எழுதப் பட்டிருக்கிறது. சித்தர்களால் தமிழில் எழுதிய நூற்களெல்லாம் வட மொழியில் எழுதியுள்ள, அனேக நூற்களை விட மிகச் சிறந்ததாகும். சித்தர்களின் மரபில வந்த நூலாசிரியர்கள் எழுதிய நூற்களும், இக்காலத்துக் குதவும்படி, சுலபமான முறையில் இலக்கண நடையில், பூர்வ காலத்து தமிழை தழுவாமலே எழுதி யுள்ளார்கள். ஆகவே, தமிழ் பாஷையின் போக்கையும், அதன் ஒழுங்கையும் நோக்கில், நாம் எப்படி பேசுகிருேமோ, அம்முறையில் தெளிவாயும், சுலபமாயும், அறியும்படி எழுதியிருக்கிற தென்பதற்கு சிறிதேனும் ஐயமில்லை. ஆனுல ஒன்று—சித்தர்களெல்லாம் தங்கள் வாழ் நாளில் 120 வருஷத்திற குள்ளே, கடைசியாக போத நிலை அடைந்த பிறகே, இவ்விதமான சுத்த இலக்கண மமைந்த செய்யுட்களை இயற்றினுர்களென்று தெரிகிறது. இந் நூற்களை தெரிந்து கொள்ளக் கூடாத முறையில் மறைவாக எழுதப் பட்டிருக்கிறது என்று பல பேர்கள் கொண்டிருக்கும் கருத்து சுத்தப் பிசகு. ஏனெனில பாஷையோ பேசக் கூடிய முறைதான், கூறியிருக்கும் பரிபாஷைச் சொற்களோ அருத்த விற்பத்தியில் யாதொரு வித்தியாசமும் கிடையாது ஆகவே, தனிப்பட்ட முறையில் படிக்கப் படிக்க நன்ருய் விளங்கும். வார்த்தைகளும் அப்பொழுதும் இப்பொழுதும் ஒன்றே. பாண்டித்தியம் பெற்ற பூர்வ காலத்து சித்தர்கள் எழுதிய தமிழ் நூற்கள் மிகச் சிறப்பும், கலவித்திறம் வாய்ந்ததும், உயர்வான நடையிலும் எழுதி யுள்ளது. ஆகையால் சித்தர் காலத்தில், பாண்டித்தியம் பெற்ற அனேக கவிவாணர்களும் இருந்திருக்க வேண்டுமென கருதப் படுகிறது.

அகத்தியர் மூலியமாய் ஆரிய மக்கள் இத தென்னுட்டுக்கு வந்த பிறகுதான், இத தகைய சிறப்பு வாய்ந்த இத தமிழ் பாஷையும், தமிழ் நூற்களும், வடமொழியில் கலக்கப்பட்டு சீர்குலைந்த தென்பதை இவ்

விடம் மறக்கற் பாலது, it was already mentioned that majority of Siddhars were Tamilians of the Saiva Sect. Many of their works on Alchemy, Medicine, Yoga, Philosophy, Astrology etc., were all written grammatically and lucidly in what is called high Tamil, and this, we see very clearly from their works. Some of the works, especially those on Alchemy, Yoga and Philosophy are generally considered to have been written tersely in an incomprehensible way. The Kavi or poetry in which the medical and other scientific tracts have been composed is much admired by those who have made it a special study. Some works on Astrology, especially what are called Nadies (a branch of Astrology) are found to have been composed in verses in chaste Tamil. Their works in Tamil are supposed to be more valuable than many that have been written in Sanskrit. There are also some works written by the followers of Siddhars in Tamil, which is thoroughly modern and colloquial with grammatical forms and structures not at all familiar to the ancients. So, as regards its language and style, there is no doubt that they were all written in easy, fluent and colloquial spoken language, rhetorically not hard, through in long long verses and metres. But one thing —it is said that they have all been composed in pure grammatical verses only after the Siddhars have attained their final beatitude within the first 120 years of their existence.

The popular notion of imputing that they were all written in obtrusive enigmatic language and fashion is simply incorrect, because people have to remember that their language is too colloquial, and the sense and import of their significantly pregnant word, have been the same and there is no study of words written then or now. A special and an exhaustive study will make it more intelligible. Some ancient scholarly Siddhars have written their works in the best literary and high style also; and this is a proof to show that some poets must have been in existence and flourished during the time of Siddhars. It is not to be forgotten here that it was only after the advent of the so called Agastya into the South India, that the older Tamil literature and language devoid of Sanskrit terms, have become mixed up and had lost its merits.

NOTE.—Tamil poetry like everything else in the universe was the result of slow growth during many centuries, and has had from its birth till to-day an uninterrupted course of evolution. The artificial poetry of Sanskrit subjugated the Tamil mind, and for all time destroyed the beautiful realistic poetry of the early Tamils—but one thing, though the Aryan culture was imported into the Tamil country, still the bulk of the people, especially in the rural country, still continue to live, as if Aryan culture did not exist.

சித்தர் நாடி, சித்தர்களால் செய்யப்பட்ட சோதிட நூல்கள். இவைகள் ஒவ்வொரு மனிதருடைய வாழ்நாளின் நிகழ்ச்சியைப் பற்றி கடியாரத்திற்கு சாவி கொடுத்து, பின்னால் ஓடுவதற்கு தகுதியாக வைத்திருப்பது போல், முன்பதாகவே தயாராக எழுதி வைக்கப் பட்டிருப்பதாகும். வேண்டிய போது அவைகளை எடுத்து, ஒருவனின் வாழ்நாளில் நடக்கக் கூடிய முக்கியமான விஷயங்களை எடுத்துக் கூறுவதாகும். அந்த நூல்களில் கடிகை, லக்கினம் முதலிய விவரங்களோடு, ஒவ்வொரு நாளும் நேரும் சங்கதிகளை குறிக்கப் பட்டிருக்கும். இது உண்மையில், ஒவ்வொருவரின் சாதகமே ஒழிய வேறல்ல. ஆகவே, அனேக வருஷங்களுக்குப் பின்னால் சாதகன் இச் சாதகத்தை வந்து கேழ்க்கக் கூடும் என்ற கருத்துடன் சித்தர்கள் தெய்வ சகாயத்தினால் தங்களுக்கு கிடைத்த உதவியைக் கொண்டு எழுதி முடித்தது. அவ்வப் பொழுது நடக்கவேண்டிய விஷயங்களைக் கிரமமாகவும், முறையாகவும், முன்னதாகவே சிலருக்கு எழுதி வைத்ததை நோக்குமிடத்து, மிகவும் மெச்சத் தகுந்ததாகவும் அவ்வளவு தெளிவான நடையை ஒருவரும் சரிவர விவரித்து சொல்லக் கூடாத முறையாகவும் இருக்கிறது. அன்றியும், ஒருவரும் பழுதுகூற முடியாத வகையில், அவ்வளவு நேர்மையாகவும், உண்மையாகவும் எழுதப்பட்டு இருக்கிறது. இதை வாசித்து காட்டுபவன் தன் அசாக்கிரதையாலும் அல்லது ஒன்றுக் கொன்று தவறுதலாகவும், அல்லது அருத்தம் சொல்லுவதினும், ஒருவேளை

பிசகு ஏற்படலாம். அன்றியும், அனேகரின் விஷயங்களில் தாய் தந்தையர்கள் குழந்தை பிறந்த நேரம் சரிவர குறிக்காத காரணத்தினால், தவறுதலின் பேரில் சொல்லப்பட்ட சாதக விஷயங்கள் சாதாரணமாக சரியாகவும், உண்மையாகவும் இருக்கவே இருக்காது. அவ் விஷயங்களில் சோசியம் சொல்பவரை நிந்திக்கப்படாது.

பூர்வ கருமத்தின்படி, தெய்வ சங்கல்பமாக ஏற்பட்ட நோய்களுக்கு, தெய்வீக முறைப்படித்தான் சிகிச்சை செய்யவேண்டும். ஆகவே, சோசியத்தைப் பார்த்து கரும காண்டத்தின்படி, இன்ன விதமான நோய் எப்படி நிவர்த்தியாகுமென்பதை விவரமாய்த் தெரிந்து கொள்ளலாம். இவ் விதமான விஷயங்கள் கௌதமர், புஜண்டர் முதலானவர்களால் செய்யப்பட்ட நாடி நூற்களில் கண்டறியலாம், the Astrological works compiled by Siddhars. They are the lives of the individuals which had been kept wound like a clock, and the giving out of one's career in life is nothing but the sure and steady unwinding of predestined careers. It clearly indicates life that proceeds on the basis of a day and night consisting of Kadigay and Lagnam. It is really a horoscope written long long ago by Siddhars through divine inspirations for each individual who may go in for consultation several hundreds of years after.

It seems that in some cases, the systematic terse and the methodical manner in which the man's career in life have been predicted, seems a marvel defying attempts at elucidation. It is the most accurate and truthful, and no one can find any flaw in it unless the reader makes mistakes by careless or ignorant selection or sometimes by wrong interpretation.

In many cases, the time of birth of the child is not at all correctly recorded by the parents, very naturally the predictions made under the storm and stress of professional conditions, on an incorrect basis with a rough and ready approximations do not come true. In that case, there is no use of blaming the astrologer concerned and the reader.

சித்தர் நாடி

**The Divine method or path based upon the principle of Karma, is usually employed in Karmic diseases. In such cases, the horoscope should be consulted, and the Karma chapter may explain how this disease can be cured. Such predictions will be found in these Nadis compiled by Gowthama, Bujander etc.**

NOTE :—It is said that Duruva Nadi (துருவ நாடி) seems to be the best, as it has a definite and unmistable data for unfolding of predictions. It is unwise from a cultural point of view, to dismiss the Nadi-works as deceipt, humbug or speculation. It should be known, as a matter of fact that the authors of the different Nadis are spiritual men of super-eminent culture and had recorded the future of the individuals concerned as perceived by them through the instrumentality of Yogic intuition. The authors of these Nadis must have had a complete and exhaustive study, and had evidently mastered the entire lite atme before they ventured to reduce their predictions to writing in Tamil in a lucid style. The manuscripts written in palmyra leaves in Tamil are very luminous and voluminous. These Nadis were kept in the 'Saraswathi Mahal Library' in Tanjore, and subsequently auctioned on account of its voluminousness, having then considered, not worthwhile stocking them.

சித்தர் நாடி, பதினெண் சித்தர்களால் தமிழில் பாடியுள்ள நாடிநூல். இது மனிதர்கள் நோய்வாய்ப்பட்ட காலத்தில், கையில் ஓடும் நாடிகளை விரல்களால் பிடித்து சோதித்து நோயின் நிலைமையையும், மற்றுமுள்ள குணா குணங்களையும் நிர்ணயித்தலாம். ஆகவே, நோய்கள் அணுகாதபடி, அப்போதைக்கப்போதே தகுந்தபடி முயற்சியெடுத்து தடுப்பதற்கு வேண்டிய அறிவு, வைத்தியர்களுக்கு எப்பொழுதுமே மிக்க அவசியமும் உபயோகமுமானது. வைத்தியர்கள், நோயின் குறி குணங்களும், மற்றுமுள்ள அவ்வளவு முக்கியமில்லாத விஷயங்களை மிகுதியாக கற்றிருந்தாலும், நோயாளிகளின் உடம்பினுள்ளிருக்கும நோயின் தன்மை அவர்களுக்கு உள்ளபடி தெரியவே தெரியாது. கையில் நாடி பார்த்து நோயின் தன்மையையும, கூறுபாட்டையும், அறிவது தான் பலனைத் தருவதாகும். இவ்விதமாக சோதித்து அறிவது அவ்வளவு சுலபமான காரியமல்ல. ஏனெனில், இதற்கு மிக்க சாமர்த்தியமும், அனுபவமும் இல்லாவிடில் வைத்தியனுக்கு ஒன்றும் பிரயோசனப்படாது.

நாடி விஷயமோர் தனிப்பட்ட நூல். இது நாடி பரிட்சையில் நிபுணர்களினால் போதிக்கப் படவேணடும். ஆகவே, குரு மூலியமாய் சிஷன் இரகசியமாய் தெரிந்து கொள்ள வேணடிய விஷயம். மிக்க அனுபோக சாலிகள்தான் இதன் இரகசியங்களை விவரமாய் சொல்லக் கூடும். இது காரணம் பறறியே, பிற்காலதது தமிழ் நூலாசிரியர்கள் எல்லாம இது விஷயம் விவரமாய் தங்கள் நூற்களில் எழுதாமல விட்டு விடுகிறார்கள்.

இதை உபயோகிப்பதும், பழக்கப் படுததுவதும சாமானிய காரியமல்ல, மிகவும் கஷ்டமானது. சாதாரண அறிவும், முயற்சியும் உள்ளவர்கள் கற்றுக் கொள்ள முடியாது. மேற் சொல்லியபடி குரு மூலியமாய் தொட்டுக் காட்ட தெரிந்து கொண்டு, கைப் பழக்க முண்டானால், நாடி நடையை வெகு நுட்பமாக தெரிந்து கொள்ளலாம் என்பதற்கு ஐயமே இல்லை.

தேர்நத வைத்தியன கைக்கு, நாடி நடையின் பலவிதமான குண குணமும், நிலைமையும் தெட்டென விளஙகும். மேலும், உடம்பின் ஆரோக்கிய நிலையும், நோயின் குணமும், வீணையின் கம்பிகள் வாசிப்பவன் கைவிரலுககு இராகம மெட்டுகளை எப்படி அறிவிக்குமோ அதே மாதிரி, வைததியனுககு விரலகள் நோயின் நாடி நடையை காணபிக்கும். இததகைய நாடிப் போக்குகளின சிக்கல்களையும, அதில் இருக்கும் கஷ்டஙகளையும், அனேகர் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். நாடி நடைகளின் மூன்று பிரிவுகளையும, ஆள் காட்டி விரல், நடுவிரல், மோதிர விரல்கள் முறையே, வாத, பிதத, சிலேட்டும குணங்களைக் காட்டும். ஆகவே, இம்முறையை மேனாட்டுக் கருவியான சிக்மோகிராப் (Sygmograph) காட்டும். இதை மூன்று விதமானகுறிகளுக்கு ஒபபிடலாம்.

ஆகையால், இவ்விதமாக நாடி பிடித்து பார்ப்பதின கருதது என்னவென்றால், உடம்பிலுள்ள மூப் பிணியாகிய வாத, பித்த, சிலேட்டுமக் கூறுகளையும், வேறுபாடுகளையும், கண்டு பிடிப்பதற்காகவே ஒழிய வேறல்ல. அன்றியும், நாடியானது இருதயததின் நிலைமையையும், தோஷங்களையும் குறிபபதாகும். ஆண் பிள்ளைகளுக்கு வலது கையும, பெண் பிள்ளைகளுக்கு இடது கையும் பிடிததுதான நாடி பார்க்க வேண்டும. தற்காலததில மேனாட்டு வைததியத்தில் மருந்துகளைக் குறிக்க ஏற்பட்ட அடையாளங்கள் எப்படி சிர்கெட்டிருக்கிறதோ, அது மாதிரியே, இதுவும் நிலைகுலைந்து விட்டது. பூர்வ காலததில், இம் முறை உடம்பிலுள்ள



கூர்ம சக்கிரத்தின் நிலையை அனுசரித்ததாகும். இவவுறுப்பு தற்காலததிய தேக தத்துவ சாஸ்திரிகளால கூறப்பட்ட ஒது துணர்வு நரம்பா யிருக்கலா மென்று ஊகிக்கலாம. இந் நரம்பு விஷய சம்பந்தம் இப்போது கூட அவர்களுக்கு அவவளவு அதிகமாய் தெரியாது ஆகவே, நாடி நடையை ஆண் பெண்கள் விஷயத்தில் இரு விதமாக பரீட்சிக்கும் முறைகளுண்டு.

சில நிபுணர்கள் நாடியைப் பார்தது நோயின் குணததை உள்ளபடி திருததமாக சொல்வது மிக்க ஆச்சரியததை உண்டாக்கத தக்கது ஏனெனில், சோசியர்களைப் போல வைததியர்களும், நோய் குணப்படும், குணப்படாது எனபதையும், நோயாளி சாவான் என்பதையும், முனனதாகவே சொல்லி விடக் கூடும். சிதத வைததிய முறையில் பழக்கப் பட்டவர்களுககே, இவ்விதமாக சொல்ல முடியும். ஆகவே, ஆயுள் வேதம் உளபட, மற்ற முறை வைத்தியங்கள் இதற்கு இணையல்ல. (மெகன்சி நூலைப் பார்க்கவும).

ஆகையால், எவனொருவன் நாடிப் பரீட்சையிலும், நாடிப பார்ப்பதிலும் வல்லவனாய், நோய்களின் குண குணஙகளை வெகு நுட்பமாக கண்டறிகிறானோ, அவனே பாணடிததியம் பெற்ற வைததியனாக சொலலப் படுவான். நாடி நடையின் வேகததையும், அடிக்கும் கிரமததையு மாததிரம நோக்கி வைததியம் செய்யும் மேனாட்டார், இந் நாடி முறையின் கஷ்டங்களை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இவவித நாடிப் பரீட்சையை யாவரும் ஒப்புககொளளும பட்சததில், மேனாட்டார் இது வரையில் தங்களால் முடியாத செயலை, சிதத வைத்தியர்கள் வைததிய சாஸ்திரததை திருத்தமான வழிக்கு கொண்டு வந்து முடித்து விட்டதாக சொல்வது ஒருவாறு சில விஷயங்களில பொருந்தும், the science of pulse compiled in Tamil by eighteen Siddhars. When a man falls ill, this science is useful, for diagnosing the disease and for determining through pulsation (feeling with the fingers) the nature and other characteristics of the disease. Therefore, some knowledge of pulse is always essential and useful to the physicians, for adopting prophylactic and preventive steps in time. Although physicians learn more about the non-essential or accessory factors or signs of the disease, yet they are

entirely in the dark as to the exact nature of the disease *inside* the body, which alone is really beneficial from a therapeutic point of view. Diagnosis of the disease by means of the pulse is not so easy, and it requires great skill and experience before it can be of any real value to the physician. Nadi (pulsation) itself is a separate science. *It is mostly taught by the* specialists on the subject, and privately by a Guru to his disciple. Men of great experience alone can explain the various factors in regard to the pulse and this is the reason why this subject *of pulse is not at all included in the* books of the subsequent writers explicably but quietly omitted.

Its use and practice are so very difficult, that it cannot be learnt by men of average intellect or common experience. With careful tuition from a Guru, as above mentioned, the trained finger can undoubtedly became a most sensitive instrument.

The various character and conditions of the pulse-beat communicate *to the* fingers of the experienced physician, the sign of health and disease, just in the same way as the wires of a violin does to a musician, the different notes when pressed by his fingers. The difficulty *of the method in this art is acknowledged* even by the foreign authorities. The three divisions in the pulse are indicated by the three fingers—fore, middle and the ring fingers showing respectively the Vatha, Pitta and Kapha. This may *be roughly compared to the* three parts of a normal Sphygmographic tracings—the upstroke, the notch or the tidal wave and the downstroke.

So, the object of the palpation or the feeling of pulse for prognosis and diagnosis is to find out the state of the three Doshas and their variations in their natural character. It should be remembered that the pulse is the indication about the state of the heart and other Doshas. The feeling of the pulse in cases of male and female — in male the right hand pulse and in female the left one. This custom has at present degenerated like the signs used as a prefix to all prescriptions of the modern scientist. Originally, the method was based upon the knowledge and position of Koorma Chakra (கூர்ம சக்கரம்) one of the plexuses, probably the sympathetic system of the modern physiologists, who really know even now very little about this system. So, there are two different methods of examining the radial pulse in man and woman.

Some experts in this, give out the exact nature of the disease to an astonishing degree Not only this, they can even predict like astrologers, as to whether a disease in which a man is going to be afflicted with, is curable or incurable and also predict his death. This is possible only in the Siddha system of medicine, and here, it superseedes all other systems including Ayurveda (See Study of pulse by Mackenzie) A well versed physician is one who is trained in the feeling of pulse or examination of the movements of the pulse only, and the *one* arriving at the correct, and accurate diagnosis by the pulse But in the Westerners, they are only guided by the rate and rhythm of the pulse. The difficulty of this pulse method is acknowledged even by the foreign authorities *who concluded* by remarking, "If this test of pulse is accepted, then in some respects Siddha physicians have brought Medicine nearer an exact science than the West has yet been able to do"

NOTE 1—One of the most interesting phase of Hindu Medicine is its diagnosis and treatment of diseases. It is noteworthy in this connection that long before similar so-called "discoveries" had been made in Europe, the Hindu physician had found out such aids to diagnosis as auscultation and the feeling of pulse, and the latter being studied with great minuteness. Probably, if Europe were better acquainted with the extent of Hindu medical knowledge, the credit for being "the first physician to teach the value of pulse, an honour assigned in the West to Praxagorus of Cos, might be given to a Hindu physician of a much earlier date."

NOTE 2 —Charaka and Susruta are silent on the pulse. It is only later, physicians who borrowed their ideas and knowledge from the Siddha works, came to regard the pulse as a determining factor of great importance; but there can be no doubt that the works on the pulse are all very modern to Ayurveda. So, Ayurvedic physicians who set great importance on the pulse, are not true to Charaka and Susruta. It is a mere pretence and nothing more, for a Kaviraj to examine the pulse repeatedly and assure the friends of the patient that his declaration about the patient's condition are all based upon his observations of the pulse, and not at all upon dictation or authority of their science

It would seem that about the time of Charaka, the pulse was not at all regarded as an indication of health or disease for, nothing is said about the pulse in their books.

சித்தர் நுட்பம், சித்தர்கள் பேரறிவின் நுட்பத்தினால் ஆராய்ச்சி ஒன்றும் இல்லாமலே, பல விஷயங்களைப் பற்றி பொதுப்பட எழுதப் பட்டுள்ள நூற் சுருக்கம். இவ்விதமான நூற் தொகுப்பு புத்திக் கூர்மை, ஆதம சக்தி பெற்ற சித்தர்களால் முடியுமே யல்லது, மற்றொருவராலும் ஆகாது. ஏனெனில், இவர்களுக்கு இயற்கையே ஏவல் புரியும். அதனால செயற் கருமையான செயல்களைச் செய்து முடிக்க ஏதுவாகும். இவ்விதமான அருஞ்செயல்களை, அவர்களால் எழுதப்பட்ட நூற்களால் இனிது விளங்கும். அவையாவன—வாதம், வைத்தியம், யோகம், ஞானம், சோதிடம், நாடி, மாந்திரிகம் முதலியன. இவைகளை மற்ற நூற்களுக்கு இணையாகச் சொல்வதற்கிடமே இல்லை, synopsis or summary, exhibiting only the principal and intricate points of several subjects in a general view. Such a kind of keen compilation is possible only by Siddhars endowed with spiritual knowledge, and not by others, simply for the reason that they have conquered Nature. So, they can accomplish tasks which are impossible to others; and their works are themselves a proof viz.—Alchemy, Medicine, Yoga, Philosophy, Astrology, Nadi (Individual horoscope) Magic etc. There are no works parallel to them in any other system.

சித்தர் நூல், பதினெண் சித்தர்கள் செய்த வாத வைத்திய யோக ஞான முதலிய நூற்களும் மற்று மதைச் சேர்ந்த சோதிடம், மாந்திரீகம் முதலியனவும், the several treatises compiled by Siddhars on alchemy, medicine, yoga, philosophy etc. and other allied sciences as Astrology, Magic etc.

சித்தர் நூல், சித்தர்கள் செய்த நூற்கள். இவை செந்தமிழ் நடையில் எழுதப் பட்டுள்ளன. சித்த வைத்திய நூற்களையும், மற்றுமுள்ள அதைச் சார்ந்த நூற்களையும் சிரத்தையோடு படித்தவர்கள், மேற்படி நூற்களின் செய்யுளின் சிறப்பையும், கவியின் வல்லமையையும் கண்டு மிக்க மகிழ்ச்சி யடைவார்கள். தமிழ் வைத்திய நூற்கள் இலக்கண வழியாக எழுதப்பட்டும், இச் செய்யுள்களை, வேண்டியபோது அவைகளின் கருத்து மாறாமலே, கிரேக்கர் பாஷையைப் போல் மாற்றவும், திருத்தவும், யாப்புக்கு பொருத்தமாக பாடும்போதும், அடிகளின் சீரை அதற்கிணங்கச் செய்யவும், உரிமை கொடுக்கப் பட்டுள்ளது.' தமிழில் எழுதியுள்ள இச் சித்தர் நூற்கள், வடமொழி நூற்களைக் காட்டிலும் மிகச் சிறந்ததாக கருதப்படுகிறது. பூர்வ ஆயுள் வேதத்தில், ஆதிகாலத்து விஷயங்களை கட்டுக் கதையாகவும், கற்பனையாகவும் காட்டியுள்ள கொள்கைகளுக்கு பொருந்துமாறு, இந் நூற்கள் எவ்வகையிலும் கட்டுப்படாமலே எழுதப் பட்டிருக்கிறது. இந்த நூற்களில் அனேக முறைகளும், நோய்க் குறிகளைப்பற்றி வெகு நுட்பமான விரிவினையும் அடங்கி யுள்ளது.

தமிழ் வைத்திய நூற்களுக்கே ஓர் நூதனச் சிறப் புண்டு. அதாவது அதில் வைத்திய விஷய மாத்திரமல்ல, வேறு அதன் சம்பந்தமான மானதம், சோதிடம், பௌதிகம், வாதம், தத்துவம் முதலிய நூற்களின் விஷயங்களும் கலந்துள்ளது. ஆகவே, இவ் விஷயத்தில், இம் முறைக்கும், ஆயுள்வேதம் உட்பட மற்ற வைத்திய முறைகளுக்கும், வெகு வித்தியாசங்க ளுண்டு.

சித்தர்கள் பலவிதமான நூற்களை பொது ஜனங்களுக்கு உபயோகமாகு முறையில் எழுதுவதில் மிக்க வல்லவர்கள். புசண்டர், கௌசிகா முதலியவர்களின் நாடி நூற்கள் என்று சொல்லப்பட்ட சுத்தமான செய்யுள் ரூபமாக உள்ள சோதிட நூற்கள், இப்பொழுதும் அனேகரிடம் அழியாமலிருக்கக் காணலாம். சீனத்தைச் சார்ந்தவராகிய போகர், புலிப்பாணி, ஆகிய இவர்கள் சித்தா கூட்டத்தில் சேர்ந்து பிறகு, தமிழில் அனேக நூற்களை பாடியுள்ளார்கள். ஆயினும், அகஸ்தியர் மாத்

திரம், உள்ளபடி சித்தர் என்பதுதான், மிக்க சந்தேகப்படக்கூடியதாயிருக்கிறது. ஏனெனில், வடமொழி சரித்திரப் பிரகாரம், அவர் ஆரியரென்றும், அவர் பேரால் வழங்கும் வைத்தியம், வாதம், மாந்திரீக நூற்கள் முழுமையும், அவருக்குப் பிற்காலத்தவரால் எழுதப்பட்டு, அவரால் செய்யப்பட்டது என்று சொல்வது பொய் என்று கருதப்படுகிறது.

ஆனால், உண்மையாகவே, சித்தர் முறையை அனுசரித்தவர்கள், வைத்தியம், வாதம் முதலியவற்றில் பாண்டித்தியம் பெற்று அனேக நூற்களை பாடியுள்ளார்கள். அவைகளெல்லாம் சித்தர் முறையைத் தழுவினதாகவே இருப்பதால், தமிழர்களுக்குள் இந் நூற்கள் எங்கும் பரவி, படிக்க முயன்றார்கள். அவைகள் நடையில் தற்காலத்திய நூலைப்போல் சகசமாக இருந்தாலும், சித்தர் கருத்தையே கொண்டதாக இருக்கின்றன. அவர்கள் காலத்தில் ஆயுள் வேதத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது. ஏனெனில், அனேக ஆயிரம் வருஷங்களுக்குப் பின்னிட்டுதான் தமிழ் நாட்டுக்குக் கொண்டு வரப்பட்டது.

தமிழ் பாஷை எப்படி வடமொழியைத் தழுவாது தனிப்பட்ட முறையிலிருக்கிறதோ, அதே மாதிரி தமிழ வைத்தியமும் இருப்பதை பிரத்தியட்சமாகக் காணலாம். சில நூற்கள் உயர்வான இலக்கணமுறையில் எழுதப்பட்டுள்ளதால், அவைகள் தெரிந்து கொள்வதற்கு கஷ்டமாகவிருக்கும்; அதிலும் வாத முதலிய நூற்கள், பரிபாஷையில் பிறர் எளிதில் தெரிந்து கொள்ளாத முறையில் எழுதப்பட்டுள்ளன. ஆயினும், விரிவாக நூற்களை கற்றுத் தேர்ந்தவர்களுக்கு சுலபமாக விளங்கும். சில சித்தநூற்களை தமிழ் நாட்டில் ஒவ்வொரு வைத்தியர் கையிலும் பார்க்கலாம். அவர்களுக்கு வடமொழியில் எழுதியுள்ள ஆயுள்வேதமாகிய சம்ஸ்கிருதத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது. இப்பொழுதுதான் பல பாஷைகளில் மொழி பெயர்க்கப் பட்டு வெளி வந்துள்ளன.

சில சித்தமுறை நூற்களில், ஆயுர்வேத சமஸ்கிருத மொழிபெயர்ப்பு கலக்கப்பட்ட நூற்கள் ஒருவாறாய் இருந்தாலும், சித்த முறையின் தமிழ் வைத்திய நூற்களில் தனிப்பட்ட முறையில் எழுதிய ஆசிரியர்களின் போக்கு மிக்க சிறப்பு வாய்ந்ததும் மெச்சத் தகுந்தது. சித்த நூற்களின் முகவுரையில், இடங்களின் சீதோஷ்ண நிலைகளும், பூமி வளங்களும், பதார்த்த குண நூலுக்குப் பொருத்தமாக, காய்கறிகள், மூலிகைகள், தாதுப் பொருள்கள் ஆகிய இவைகளை சேர்க்கும் விதமும் அளவும், சுருக்கமாகக் கண்டிருக்கிறது. அன்றியும், சில நூற்கள் மேனாட்டு கிரீக், லாடின் வைத்திய நூற்களுக்கு இணையாக வுள்ளது. இதினால் இந் நூற்கள் ஆதிகாலத்து சித்த நூற்களினின்று திரட்டியது என்பது பிரத்தியட்சமாக விளங்குகிறது.

சில சித்த நூற்களுக்கு நூதனமாகவும், பொய்யாகவும் பெயர்களிட்டு, சனங்கள் அவைகளினிடத்தில் கவனம் செலுத்த வேண்டிய முறையில் தொகுக்கப் பட்டுள்ளன. ஆனால் சில நூற்கள் மாத்திரம் உண்மையாகவே, விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் முறையில் எழுதியிருக்கக் காணலாம். வடமொழி 'உத்தர தந்திரம்' என்னும் நூலின் தொடக்கத்தில், சித்த நூலினின்று காய சிகிச்சை முறையும், பொதுவான நோய்களைக் குறித்த விஷயங்களையும், எடுத்து, ஒரு முகத் திரட்டாக எழுதப் பட்டிருப்பதாக கருதப்படுகிறது.

பல நூற்களினின்று விஷயங்களைத் திரட்டி, மொழி பெயர்த்து எடுத்து, தங்கள் பாஷையில் சேர்த்துக் கொள்வதிலேயே கருத்தாகவுள்ள அரபியமக்கள், சித்த நூற்களிலிருந்து, வைத்திய முறையும், தெய்வீக விஷயங்களையும், ஆராய்ந்து எடுத்துக்கொண்டதாக தெரிகிறது. வித்திய நிபுணராகிய மேனாட்டு வில்ஸன் துரை அபிப்பிராயப்படி, அரபியர்கள் கிரீக்தேசத்தாரை விட வைத்திய முறையில் சித்த நூற்களை நெருங்கத் தழுவி வந்ததாக தெரிகிறது, the Siddhars works were written in what is called high Tamil. The *Kavi* or poetry in which the medical and other allied scientific tracts have been composed, is much admired by those who have made them their special study. The Tamil medical works are written grammatically (in *Ilakkanam*), liberal license being permitted, as in the Greek, in altering, and transposing, in order to harmonise and vary the rhythm without affecting the sense. Their works in Tamil are supposed to be more valuable than many that have been written in Sanskrit. They are said to be works less shackled by the mythological doctrines of the original Ayurveda. They contain a large number of valuable formulae, and exhibit

further minute enumerations of morbid symptoms.

It is a characteristic peculiarity of the Tamil medical works that Medicine alone was not dealt with, but were mixed up with the principles of Metaphysics Astrology, Chemistry, Alchemy, Philosophy etc. In this respect, this system entirely differs from other systems of medicine including Ayurveda.

The Siddhars were a class of popular writers in Tamil in all its branches. Some works on Astrology and Astronomy, especially what are called Nadis compiled in pure Tamil verses such as, Bujandar, Kowsikar etc. are examples extant of Siddhars. Bogar and Pulippani, natives of China who joined Siddhar's school were also authors of several works in Tamil. Whether Agastya (Aryan) is really a Siddha is very doubtful for, in the Sanskrit legend, he is said to be an Aryan; and all his works on Medicine, Alchemy, Magic etc. are considered to be literary forgeries written by his followers and fathered on him.

But there are also some real followers of the Siddha school who are credited with a knowledge of medicine and Alchemy etc.; because their works bear a *close resemblence to the Siddhars* system of medicine; and as such, command a large circulation and widespread study *amongst the Tamilians. They are* apparently, the supposed compositions of the Siddha school, although they are thoroughly modern and colloquial. It should be known that during their period, Ayurveda was unknown.

It should be remembered here that the early writings in Tamil medicine are quite independent of Sanskrit even as its language and literature are. Some of them are in highly grammatical verses, sometimes incomprehensible. Some of the secret works such as Alchemy etc. are written in code words, or enigmatic language, so that others may not easily understand them; and it is only persons who made an extensive study of their works will have sufficient experience and knowledge to grasp the meaning easily. Some of the principal Siddha works are in the hands of every physician practising in S. India. Tamilians know nothing of Charaka and Susruta of Ayurveda practice written in Sanskrit. It is only now that they are being translated in other languages.

The plan followed by Tamil medical writers is excellent—not to speak of the literary forgeries mingled with the ideas of Ayurveda in Sanskrit translation. They preface the work with a topographical memoir, descriptive of the climate and soil of some locality, and follow this with Materia Medica, noticing the seasons for gathering vegetables, drugs and minerals, and the modes of preparing from them, medicine and their doses. Some of the books in the Tamil Siddha system have a parallel to Greek and Latin medical works which is an evidence to show that the latter were adapted from the selections of the original works of Siddhars.

Some of the works of the Siddhars are dubbed with fancy or fantastical names to draw the attention of the public. There are only a few works really of comprehensive character with real merit. In the Sanskrit work of Uttara Tantram, a seperate introduction is said to have been compiled from the works of Siddhars in the divisions of rejuvenation (காய சிகிச்சை) and treatment of diseases in general.

The Arabs who were avowed borrowers of science, translated into their own language, some of the Medico-theological compositions of the Siddha physicians. Prof. Wilson is of opinion that the Arabs followed the Siddha works on Medicine more closely rather than of the early Greeks.

NOTE 1.—It is only after Bogar's visit to Arabia, Persia and Turkey, that the Arabs made great improvements in the department of Pharmacy and conducted research into vegetable and mineral kingdoms, which in later ages, proved so beneficial to mankind.

NOTE 2.—The language and style of the Siddha literature in general is easy, fluent and colloquial, but rhetorically not difficult though in long metres. Some ancient scholarly Siddhars have written books in the best literary and high style also. The popular notion of imputing that they were all written in abtruse enigmatic language (பரிபாஷை) and fashion, is simply incorrect, because the sense, import and connotation of their significantly pregnant words, have become changed in meaning in our own times.

Moreover, we have neither their training nor depth of knowledge, as understood by them in that particular branch, nor have we the patience to work indefatigably to fathom the deep sense imbedded in words, which some noviatiates among them have remarked 'the heartless language of the Siddhars'. So, we cannot accuse them uncharitably through our ignorance of their environments, and comparing this, with the present common knowledge of worldly materialistic nature of worldly things, they can be excused of their seemingly selfish nature which is unseemly presumed by us.

NOTE 3.—Agastiyar, in Tamil has to be mentioned as the most prolific writer on several subjects, as Alchemy, Medicine, Yoga of Siddhars. The language of this trashy collections cannot be considered as or called by the dignified name of literature, but only the common place language or the language of the puny and the narrow-minded men absolutely devoid of culture, learning and moral elevation. They are only the back-alleys and slums of the Tamil literature. In all probability, these are the collections of works of different persons at different periods of times, attributed to Agastyar to invest them with dignity and antiquity The attempt to squeeze and import the ideas and principles and nomenclature of the Sanskrit commentators into the facts of alien Tamil language. is only too patent throughout.

So, there is every reason to believe that the Agastiya's mint was opened and kept on going for some time solely to bring down the authority of the other 18 Siddhars and belittle their importance.

NOTE 4.—There are also some stray stanzas composed by the latest scholars in their admiration of Sanskrit, imported wholesale the conceptions and the borrowed ideas, with a view to fathering them on the supposed Agastiya in order to secure an authority more ancient. They are so badly written that one would hardly believe, whether the author of such miscellaneous trash, could have any clear notions of the subjects dealt with and the scope of grammar which are hopelessly mixed up. Next, the style and phraselogy have neither lucidity nor ancientness about them.

Many are attempts made and incidents found inserted to create a belief that the Siddhars science is, after all a part of Ayur Veda and not an independen- science. But anyway, the superior meritt of Siddhars work cannot thus be extinsguished. All these changes start with the Agastya's legend in S India.

சித்தர் நூற் சிறப்பு, சித்தர்கள் தங்கள் முறைப்படி செய்த அனேக விதமான விஷயங்களைப் பற்றிய நூற்களை, மற்ற முறையில் செய்த நூற்களோடு ஒத்து பார்க்கும்போது ஏற்படும் மேம்பட்ட முடிவுகளாவன, the superiority of the science under the Siddha system in all its branches, as compared with the other sciences leading one to the following higher conclusions viz :—

1. சித்த முறைப்படி, மனிதனானவன் (*a*) பஞ்சபூத அம்சங்கள், (*b*) கிரகங்களின் அம்சங்கள், (*c*) பிரகிருதியின் மூலத்தில் உண்டாகி, கிரக சம்பந்தமும், உலக லௌகிக சம்பந்தத்தையும் அனுசரித்த உடம்பிலுள்ள ஏழு தத்துவங்களையும், கொண்ட ஆன்மாவை பொருந்தியவனுவான. ஆகவே, பூர்வ நூற்கள், மனிதனை கடவுளுக்கு சமானவன் என்று பல முறையும் வற்புறுத்துகின்றன. ஆனால், தற்காலத்து மேனாட்டு நூற்களோ, மனிதன் சாதாரண இருகால் சீவனென்றும், (அவ்விதமாக எண்ணுபவனையும் சேர்த்து) அது தவிர வேறொன்று மில்லையென்றும் ருஜுப்படுத்த முயற்சிக்கின்றது, man according to Siddha system is a production of divine mind and thought produced (*a*) of the essence of the five elements, (*b*) sole of the stars, (*c*) and the spirit which is the stellar and temporal sides of *Magnum limbus* from the Matrix of Nature formed of seven layers of tissues The ancient science inculcates that he may be equal to God. Modern science attempts to prove that

man is after all a biped animal including him who presumes to be so.

2. பிரகிருதி வடிவமா யுள்ள இவ்வுலகம், எங்கும நிறைந்த பரமாத்துமா சொரூபமான அனேக ரூபபேதமாயுள்ள உயிர்ப பிராணிகளை தவிர, ஒன்றையும உயிரில்லா வஸ்துவாக கொள்ளப் படாது. ஏனெனில், எது உள்ளனவோ, அது மறுபடியும் இயற்கையின் கருவில் தோன்றி வேறுவித ரூபமாகப் பிறக்கிறது. அவற்றுள மனிதன் ஒருவனதான், கடவுளுக்கு மிக்க நெருங்கிய சம்பந்தமுள்ளவனாவான என்று பூர்வ சித்த நூற்களின கொள்கை. தற்கால நூற்களோ அவ்விதமாக இல்லை. மனிதன சாதாரண பிராணியே, உலக வஸ்துக்க ளெல்லாம் உயிரற்ற அசேதனப் பொருள்கள் என்றும, அதி னின்று அறியக் கூடாத தன்மையில, உயிர்கள் பலவித ரூபங்களாய தோன்றிய தென்றும் கூறும், ancient mystic Siddhars science declares that the Universe is a manifestation of a universal principle of life which pervades all over, acting all through the instrumentality of forms; and there is no *dead* matter in the Universe; and that which dies returns again to the Matrix of Nature to be re born into other forms to serve again as an instrument for manifestation of life, and that *Man* is the nearest approach to God. Whereas, modern science declares that man is an animal and the Universe is a nebulae or a conglomeration of dead matter out of which, by some inexplicable process, *life has evolved* in so many forms.

3. சித்த வர்க்கத்தைச் சார்ந்த ஞானிகள், உலகத்தை ஆட்டுவிக்கும் சக்திகள் இன்ன தென்றும, வெகு தூரத்து விஷயங்களையும் தங்கள் கியான திருஷ்டியால கண்டறிவார்கள். தற்காலத்து மேனாட்டு நூற்படி இறந்த மனிதனைத்தான் தெரி



யும், அவனுக்குள்ளே யிருக்கும் இயற்கை உயிர்ச் சக்திகள் இன்ன தென்று தெரியாது. வைத்தியத்திலும், அனேக வழியில் சேகரித்து தெரிந்து கொண்ட அறிவையும், தான் கொண்ட நினைவையும், கருத்தையும சேர்த்து ஆதாரமாக ஏற்படுத்திக் கொண்டு சரியான நூல் வழி இதுவே யென்று கருதுகிறார்கள். அவர்களுக்கு வஸ்துக்களின் வெளித்தன்மை தான் முக்கியமாகத் தெரியும. அன்றியும், புகைவண்டி, வானஊர்தி முதலிய புதிதாகக் கண்டுபிடித்த யந்திரங்களும் தெரியும், the ancient philosophers of Siddha School knew more about the powers that move the world and of communications of thought at a distance without the employment of any visible means which is Thought current. Modern Western Medicine knows only the dead body of man and not the living image in him presented by Nature. Their medical art is based upon scattered knowledge collected from several sources together with their fancies and speculations which they imagine to be a science proper; and so, modern science knows more about the superficiality of things, of steam engines, aeroplanes and other modern inventions.

4 பூர்வநூல, மனிதனுக்கு உலகத்தையே தன்வச மாக்கிக் கொள்ளக் கூடிய சக்தியை அளிக்கிறது. மேனாட்டு நூற்களோ, மனிதன தன்னுடைய கனத்தை மாத்திரம் தூக்க வல்ல சக்தியை பெற்றிருக்கிறான என்று அறிவிக்கிறது, ancient Science invests man with the power to control the destiny of the world; whereas the Modern science invests him with power to left his own weight.

5. பூர்வ நூல் தெய்வதன்மை பொருந்திய உள மனிதனை குறிக்கிறது. தற்காலத்து நூலோ ஒரு யோக்கியதையு மில்லாத வெளி மனிதனை

மாத்திரம் காட்டுகிறது, ancient Science deals with internal living deified man; but modern science only external man as an ordinary being without spiritual elevation.

6. பூர்வ நூல், மனிதன் உயிரோடிருக்கிருன். தான் பிரியப்பட்டால் சாகாமல் நீண்டகாலம் இருக்கலாம் என்பதைக் கற்பிக்கிறது. ஆனல் தற்கால நூலோ மனிதன் சில வருஷங்கள் மாத்திரம் தான் உயிருடன் இருக்கலா மென்று கட்டுப்படுத்துகிறது, ancient Science teaches that man has existed and will never cease to exist if he only desires to live; but modern science allows men to live only for a limited number of years.

7. பூர்வ நூலில, அனேக ஆயிர வருஷங்களுக்கு முன் கண்டு அறிந்த விஷயங்கள் மறுக்கப படவில்லை. ஏனெனில இவைகள் உணமையையே ஆதாரமாகக் கொணடிருைல், எப்பொழுதும் உண்மையே. உண்மையைத தவிர வேறொனறு மில்லை. ஆகவே, அவைகளை மறுக்கவே முடியாது இது வரையிலும் மறுத்ததும் கிடையாது. மேனுட்டார் அனுசரிக்கும் கொள்கைகள் பிரதி வருஷங்களும் மாறும். பழையன கழிந்து, புதியன தங்கள் இஷ்டப்படி ஏற்படுத்திக் கொண்டு, எளிய உயிர்ப் பிராணிகளை கையாள்வதறகு இடங் கொடுக்கும. ஆகவே, எக்காலத்திறகும் களஞ்சியமாகவும், எவரும் ஒபபுக் கொள்ளக் கூடிய அறிவு வாய்ந்ததாயும், முக் காலததிறகும் உபயோகப் படும் முறைமையில் உள்ளதுதான் உண்மையான நூல் என்று கருதப் படும். ஆனல். மேனுட்டு நூலோ அப்படி யல்ல, தெரிந்தும் தெரியாத விஷயங்களை ஒருங்கே திரட்டிய ஓர் நூலே ஒழிய வேறல்ல, the facts well ascertained in our ancient books thousands of years ago, have never been disputed, and cannot lose their ground, being nothing short of truths, and nothing but absolute and universal truths. The Westeners are changing their theories every year and wish to stand on their new ground by refuting the old theories according to their whims and fancies and trade upon the lives of poor creatures. So, the real science is that which should be a store-house, incontrovertible, universal knowledge which holds good for all times—the past, present and future. The modern science is no better than a mere compendium of ascertained and unascertained facts.

NOTE 1.—Some correspondences are discoverable between Siddhars works and the American Indian Maya Scriptures of the Zunis called "Popnl Vuh". They show that their air-tube is the Sushumna (சுழி முனை); their two-fold air tube are the Nadis—Ida and Pingala (இடகலை பிங்கலை); their 'Hurakan' is Kundalini (குண்டலினி சக்தி) and the six psychic centres (ஆறுதாரம்) are depicted by animal glypho.

We find similar notions regarding the six centres or Chakras borrowed by Mahomadans; and mention of it, is made in their work called "The Compass of Truth". They have apparently learnt this from the Indian Siddhars who are known to them as Sadhus

NOTE 2.—Siddha literature is brilliant in its evolution of a vast cycle of original occult knowledge, dealing with the essentials of Religion and Science in consonance with the principles of theoritical and practical knowledge. So, it is calculated to confer benefits of the highest kind on humanity in the shape of Siddhi and Mukthi

These are said to have been written after they have attained their final beatitude stage, within their existence of the first 120 years.

NOTE 3.—Though the records of Hindu Medicine may be traced as regards the Ayurveda, as far back as the time of Buddha (16th century), yet the history of Siddha works and their tradition go to prove the several thousands of years.

¶ From a research of the ancient Tamalians, will be found just as truly and unmistakably as ancient Babylon and Assyrian. Many of the theories and principles traced to the Greeks and the Romans were known to Hindus long before; and the high degree of astronomical science of S India, is a convincing proof of its originality.

Ayurveda of N. India which is considered as a part of Veda is said to have originated from Brahma, and it dates from at least 4000. B.C., whereas the Tamil Siddha works of S. India, which have its origin from the Great Shiva and Parvati, introduce us to a well developed civilisation of several thousands of years.

We read in their works, the principle of Alchemy and all about chemistry, and of the principles of mercury, sulphur and poison salts (இரச, கந்த, பாஷாணம்) and the chemical preparations of medicines from gold, silver, copper, iron and precious stones, as well as Rejuvenation etc. —which are only the proofs of the existence of guilds and numerous other arts and sciences.

The standard works on Tamil Medicine, of the 18 Siddhars who were men of very high culture, and intellect, consist of several thousands of verses by each, on different subjects as Alchemy, Medicine. etc. Some of the methods of their preparing oxides, sulphates, carbonates, chlorides from metals and their use of 64 poisons, alkalies and salts etc., are of a high degree of perfection and many of which cannot be solved by even Modern Scientists, because they truly had a encyclopoedic mind guided by intuition.

Of course, they had laid a very strong foundation of medicine and the allied sciences in all its branches, enlarged and established them on a broader basis, and then passed them on to the successive generations with a view to permeate and fertilise it far and wide.

(Antiquity of Hindu Medicines).

சித்தர் நோக்கம், மனிதர்களுக்காக இவ்வுலகின்கண் வரையறுத்திருக்கப்பட்ட விஷயங்களைப் பற்றியும், அவர்கள் யாதொரு இடையூறின்றி உயிர் வாழ்வதற்குண்டான வசதிகளைப் பற்றியும் சித்தர்கள் கொண்ட கருத்துகளாவன, the following are the end and aims of Siddhars regarding the dictums or positive assertions towards the welfares of mankind to enable them to live in this world without any hindrance viz :—

1. சிருஷ்டி முறை எக்காலத்திலும் ஒன்றே. மனிதன் வாழ்க்கையும், அவன் நோய்களும், உலகம் முழுவதிலும் எக்காலத்திலும் ஒன்றே. வைத்தியக் கொள்கையும் உலக முழுவதிலும் இப்பொழுதும், எப்பொழுதும், எல்லாக் காலத்திலும் ஒரே மாதிரிதான். ஏனெனில் சிருட்டி காலத் துவக்கத்திலிருந்து தனிப்பட்ட முறைமையில் மனிதப் போக்கும், ஒழுங்கு முறையும் கடவுளால் வகுத்த வண்ணமாகவே முன்னமும், இப்பொழுதும், ஒரே மாதிரியாயதான இருந்து வருகிறது. இனிமேலும், அப்படியே தான் எக்காலத்திலும் இருக்கும். இதில் யாதொரு பேதங்களும் கிடையாது. மனிதன் தோன்றிய போதே மருந்துகளும் நிவர்த்திக்காக கூடவே உண்டாயிற்று, the principles of Creation are always the same, the Man, his life, his diseases are always the same. The theories of diseases are and were always the same all over the universe, during all times, because when creation evolved out from chaos, and from that time, man's edition and the copyright of man by God has remained, remains and will also remain the same all the time over and is yet unchanged. With the man in existence, comes also medicine as a cure.

2. 'அண்டமே பிண்டம், பிண்டமே அண்டம்' அதாவது உலகத்தில் இருப்பதுவே மனிதனுள்ளும் இருக்கிறது. ஆகவே, நவக்கிரகங்களும், பஞ்சபூதங்களும், அதனதன் கிரித்தியங்களை மனிதன்மேல் செலுத்துகிறதினால், மனிதன் அதற்குட்பட்டவனாகிறான். ஆகையால் சுபாவக் கிரித்தியங்கள் நல்லதாயின் மனிதனுக்கும் நன்மையே உண்டாகும். கெடுதியாயின் பொல்லாங்கையே விளைவிக்கும். பிரகிருதி சுபாவத்தில உலகத்தைக் காக்கும் தேவதைகளின் செயல்களால், இயற்கையில் கெடுதிகளுக்கு இடமுண்டானால், பெருவாரி முதலிய கொள்ளை நோய்கள் உற்பத்தியாகி, அதனாலேற்படும் விஷத்தன்மை மனிதனையும் தாக்கும ஆதம கோளத்திற்குள் உள்ள தொத்துக் கிருமிகளால் காரணங்கள் ஏற்பட்டு, பிரகிருதியிலுள்ள சூக்கும காரணங்களை அனுசரித்தால், பெருவாரியாக கொள்ளை

நோய்கள் ஏற்பட்டு நாசத்திற்கு ஏதுவாகும், as the Universe is compared to man, all that exists in the world, exists in the man. All the planets and the five elements direct their influence upon man. If the influence in Nature is good, then good influences are produced on the man. If the cosmic nature is bad, the result also will be bad. If the evil effects are the outcome as a result of the cosmic evolutions produced in nature by world agencies, as epidemics etc, noxious effects will be also produced in man also. If in the sphere of souls, infectious germic causes exist to attract those astral causes from nature, all destructive epidemics are produced.

3. பிண்டமே அண்டம். ஆகவே மனிதனே சிருட்டி வகையில மேம்பட்டவன. ஏனெனில், வேறு பிராணிகளில் காணப்படாத தேர்ந்த பேரறிவு இவனுக் குண்டு. மனிதனே உலகம என்ற முறைமையில, இவன தனக்குள் ளிருக்கும் அண்டத்தை ஆகாயத்தின் ஓர் பாகமாக வாய்ந் துள்ளான், man is himself the cosmos and is the highest among the animal creation. He is possessed of highest intellectual faculties which no other animal is endowed with. Individual man is the individual universe having his own heaven within himself as a part of the heaven in the universe

4. மனித வுடம்பினுள் ஒவவொரு அவயமும் தனககு வேணடிய வற்றை விருத்திக்காக, பிரகிருதியில் மூலப் பகுதியி னின்று கிரகித்துக் கொள்கிறது, every organ in the human body is formed by the action of certain universal principles, attracting that which is required to its own development from the *magnum limbus*.

5. பேரறிவுடைய மனிதன் தான், தன் இயற்கைக்கு மாறாக நடப்பவன், அப்படி நடப்பதினால் தன் உடம்பின் ரூபத்தில் அதீத கிரித்தியங்களினால் ஒன்றும் ஏற்படா விட்டாலும், தனது குணுகிசயங்களை கெடுத்துக் கொள்கிறான், it is only that the highest endowed man that becomes unnatural to his instinct, to belie his form and character though he retained his shape even after his physical excesses.

6. எல்லா குழந்தைகளும் ஏக காலத்தில் பிறக்குமாயின், அவைகள் ஒரே மாதிரியாக அமைந்தனவாகும். ஆரோக்கியமும், நோய்களும் ஒரே காலத்தில் உண்டாகும். இரட்டைப் பிள்ளைகள் விஷயத்தில் இவை தெட்டென விளங்கும. ஆனால், கருத்தரிக்கையில மாத்திரம இவ விதி ஒவ்வாது. ஏனெனில் கருமானுசாரப்படி, தன் தேக சுபாவத்தில் எது உளதோ, அதையே உரிமையாகக் கொண்டு பிறத்தலால் வித்தியாசங்கள் ஏற்படும், if all children were to take their birth simultaneously, they would all be constituted alike and would be sick or well at the same time, just as in the case of twin children; but at the conception a differentiation takes place, and each children will inherit its own individual nature according to its own Karma.

7. தெய்வ அருள், மனிதனுக்குள்ள சுபாவத் தன்மையை மாற்றி உடம்பிற்கு ஆரோக்கியத்தை உண்டாக்கும், divine spirit is able to change a man's nature and restore physical health to the body.

8. சுயேச்சைத் தன்மையில், மற்றப் பிராணிகளைவிட மனிதன் நோய்க்கு வெகு சுலபமாக உள்ளாகிறான், man is much more easily subject to diseases than animals in a state of liberty.

9. இயற்கையில் வியாதிகள் தானே உண்டாகும். பிறகு தானே நீங்கும். ஆகவே, வைத்தியனுக்கு இவ வியற்கையின போக்கு இன்னதெனத் தெரிய வேணடும். எவன் பிரகிருதியின் கூறுபாடுகளை தெளிவாக அறி

கிருனே, அவன் தான் மனித வுடம்பின் அமைப்பின் கூறுபாடுகளையும் இயல்பிலேயே தெரிந்தவனாகிறான், it is Nature that causes diseases and again, it is Nature that effects their cure; and it is therefore necessary that a physician should know the process of Nature. So, he who knows the anatomy of Nature, knows naturally the anatomy or the constitution of man.

அண்டமும் பிண்டமும் ஒன்றே அறிந்துதான் பார்க்கும் போது' என்று சட்டமுனி நிகண்டில் கூறியுள்ளபடி, மனிதனின் இரத்தசாது செவ்வாய் கிரகத்தை அனுசரித்ததாகும். இது மாதிரியே ஆத்தும நிலைகள், சுக்கிரனுடைய ஆதரவை ஒட்டி நிற்கும. இவ்வித ஆத்தும ஆதரவு ஏற்படாவிட்டால் மனிதருக்கும், மற்றப் பிராணிகளுக்கும் சந்ததி விருத்திக்கு ஏதுவான காம விச்சையே உண்டாகாது. ஏனெனில் உலகத்திலுள்ள உயிர் பிராணிகளெல்லாம் சுக்கிரனுடைய சம்பந்தத்திற்கு உட்பட்டதே. ஆகவே, ஆண் பெண் இருவருக்கும் ஏற்படும் காம நட்புக்கு சுக்கிரனுடைய அம்ச சம்பந்தம் அவசியம் வேண்டும். (இதனால் தான் வெள்ளிக்கிழமை சம்போகத்திற்குகந்த நாள் என்று கருதப்படும போலும்), according to the principle of Siddhars as regards Macrocosm *vs.* Microcosm, mentioned in Satta Muni works, the quality of life found in the elements of blood of a man corresponds to the quality of the invisible influences radiating from Mars. If the soul-essentials that characterise the influence of Venus do not exist, the natural instincts that cause men and animals to propagate their species would cease to operate, because all beings in the Universe are sympathetically connected with the only one universal principle of life from Venus, resulting in love between two persons of the opposite sex.

சித்தர் நோக்கம்

(Perhaps, it is why Friday is selected for sexual intercourse).

11. மனிதனிடத்தில் இரண்டுவித அமைப்பின் கூறுபாடுகள் உண்டு — அதில் ஒன்று, தேகத்தின் வெளி அமைப்புக் கூறுபாடு, மற்றொன்றே, உள்ளமைப்பின் கூறுபாடு. முன் சொல்லிய ஒன்றுதான இத்தூல உடம்பை அனுசரித்தது. மற்றொன்று சூக்கும உடம்பை ஒட்டியதாகும். ஆகவே, நாம் உள்ளுடம்பின் கூறுபாட்டை அறிந்துவிட்டால், மூலவஸ்து மூலியமாய் மனிதனுக்குள்ள நோயையும், அதற்குண்டான நிவர்த்தியையும், எளிதில் தெரிந்துகொள்ளலாம, there are two kinds of Anatomy in Man—one teaching the constitution of the *external* form of Man; and the other, that of the *internal* living man; the former is the physical body, and the latter is the spiritual or subtle body. If we know the anatomy of *inner* man, we know the *Prima Materia* (first matter) through which, we will come to know easily the nature of the diseases in Man as well as their remedies.

12. மனிதன் தனக்கு இயல்பிலேயே அமைந்த பூரண சக்தியையும் சரியான வழியில் காட்டுவதற்கு மாயை இடங்கொடுக்காது அப்படி அதையும் மீறி, இத தடையை கடந்துவிட்டால மேற்படி இயற்கை சக்தி உடனே தனது பூரண சகதியை காட்டி விடத் துடங்கும். அப போது தான் யோகிகளைப போல் அபார சக்திகள் கை கூடிவிடும, perfection in man's nature is only banned by and prevented from taking its proper course by Maya; and when once this bar is removed. Nature rushes in with all its potentialities and powers (supernatural). It is only then that supernatural powers can be attained like a Yogi.

NOTE —From a glance or cursory reading of the Siddhars works, it can be inferred that the secret of their culture, their penetration and intuitional knowledge

and their wide spread influence lay chiefly in their grasp of the central fact — that man is a spiritual being. So, they subordinated every branch of science, arts, commerce, industry and knowledge to that supreme factor-spiritualism. It is only their spiritual culture and their asceticism in the midst of luxury and materialism, that gave them a stability and vitality which outlived the ages of several Empires.

Their ideal was to save the suffering humanity regardless of earthly gain—not for self. It is well said that those who sell the treatment of diseases and make it commercial for gain, gather only the dust and neglect the gold. The Siddhars argued from the inner to the outer and relied upon only the natural means of cure instead of operation or other artificial method which they classified as the last (Rakshasa treatment) of the three kinds of cure.

They arrived at conclusions, such as the doctrine of truth and evolution, from introspective reflection and mental vision rather than by the toilsome and tedious researches of the laboratory from the imaginary knowledge rather than intuitional one.

So, the only conclusion to be arrived at lastly, is the spiritualism which is the real, and in that reality, they saw further and deeper beyond the ordinary comprehensions, and achieved more than it would have been possible for the West.

13. வைத்தியன் தான் வைத்தியத்தொழிலில் எவ்வளவு தேர்ச்சியடைந்திருந்தாலும், சோதிட அனுபவமில்லாமற் போனால் அது பயன்படாது. ஏனெனில், நமது நாட்டு வைத்தியம் முன்னேற்றமில்லாமல் இத்தனை வருஷங்களாக சீணித்து ஒரே நிலையில் நிற்பதற்கு, சோதிட விஷயத்தையும், வாத பித்த சிலேட்டுமக் கூறுகளையும் அறியாததே முக்கிய காரணங்களாகும். ஆனால் தற்காலத்தில் அவைகளின் உண்மை விஷயங்களை ஒருவராவது எளிதில் தெரிந்து கொள்வது சாமானிய காரியமல்ல, medicine could not be usefully or efficiently practised by any Medical practitioner, though fully equipped for his task without the knowledge of Astrology. The long inertia of Indian medicine, its stagnation and lack of progress during so many centuries, were all due to in no small degree to the shackles of Astrology and Humoral Pathology, the principles of which could not be easily understood by anyone of modern times.

14. எவனொருவன் பஞ்ச பூதங்களின் இரகசிய விதிகளின் உண்மையை, அதாவது பஞ்சீகரண சக்தியை தெரிந்து கொள்ளுகிறானோ, அவன் தான் ஒரு உலோகத்தை மற்றொரு உலோகமாக மாற்ற சக்தி வாய்ந்தவனாகிறான். ஏனெனில், உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களும் ஆதி மூலப் பொருள் என்னும் வஸ்துவினிடத்தே யிருந்து தோன்றியது. ஆகவே, ஏகம், கூட்டு என்ற பிரிவினையே கிடையாது. ஆத்துமா ஒன்றுதான் ஏகம். உலகத்திலுள்ள மற்றவஸ்துக்கள் முழுமையும் கூட்டு அல்லது கலப்பே ஒழிய வேறல்ல, if one is aware of the secret doctrine of the five elements known as Pancheekaranam, one metal may be changed into another on the ground that all substances spring or emanate from some primordial matter; and so, there is no classification as elements and compounds. The only element in the world is the soul and all else are compounds.

NOTE.—What we call in common parlance as the theory of பஞ்சீகரண சக்தி i.e., the operation of the five elements in the human body by the varied unions, by way of permutation and combination, is termed in the West "the perfections of the Kabala." This theory opens also the secret of foretelling events.

Moreover, it reveals the absurd theory of elements and compounds of Modern Science, for the reason that, according to Siddhars theory, each of the five so called elements contain in itself five subdivisions, according to the above mentioned division of 'Pancheekaranam.' (See Introduction to Vol. I of this work for details.)

சித்தர் பட்டை, கருப்பு சித்திர மூலம், black-flowered leadwort—Plumbago genus.

சித்தர் பதினெண்மர், பதினெட்டு சித்தர்கள். அவர்களாவன, the eighteen Siddhars viz :—

1. திரு மூலர், Thirumoolar
2. புலஸ்தியர், Pulasthiar.
3. நந்தி தேவர், Nandi Devar.
4. இடைக் காடர், Idaikkadar.
5 அகத்தியா, (Vellala) Agathiyar.
6. புண்ணாக் கீசர், Punnakkisar.
7. போகர், Bogar.
8. புலிக் கீசர், Pulikkeegar.
9. கொங்கணவா, Konganava.
10. அழு கண்ணி, Azukanni.
11. பாம்பாட்டி, Pambautti.
12. குதம்பை, Kuthambai.
13. கருரார், Karurar.
14. அகப்பேய், Agappei.
15. தேரையர், Theraiyar.
16. சட்டைமுனி, Sattaimuni.
17. பூனைக் கண்ணர், Poonaikkannar.
18. காலாங்கி, Kalaungy

NOTE.—These are the eighteen Siddhars who compiled Tamil scientific works in several branches of knowledge as Medicine, Alchemy, Yoga, Philosophy, etc. which remain as standard authorities in the Tamil Literature. C.f நவநாத சித்தர்.

சித்தர் பரிபாஷை, சித்தர்களின் இருண்ட கட்டுரை அதாவது தெரிந்த விஷயத்தை புலப்படாத பாஷையில் மறைத்துச் சொல்லும் ஓர் வாக்கியம். ஆகவே, இதற்கு பரிபாஷை யென்று பெயர். நாம் பாஷையில் சொற்களின் தாதபரியத்தையும், அதன் போக்கையும், சரிவர தெரிந்து கொள்வதற்கு முயற்சிக்காததினால் தான், அவ்விதமாக நமக்குக் காணப்படுகிறது. சித்தர்கள் செய்யுள் ரூபமாக எழுதியுள்ளதால், ஒவ்வொரு வார்த்தையையும் கவனித்தால், அதன் கருத்து தானே விளங்கும். ஆகவே, இது தான், அவர்கள் நமக்கு பலன் கிடைக்கும்படி தேடி வைத்த வெகுமதி. மேலும், பாஷையினால்தான் அதன் பூர்வீகத்தை நம்பக்கூடிய தன்மையையும் உணரலாமே ஒழிய, வேறு வகை சாட்சியங்களால் உணர வழியில்லை. ஆகவே ஞானம், மதம், புராணம் நூற் தத்துவம் ஆகிய இவைகளைப்பற்றிய மனிதர் பூர்வ மனக்கருத்துகளை உள்ளபடி பாஷையினால் தான் அறியக்கூடும், a dark saying in which some known thing is concealed under an obscure language. It literally means enigmatic language. The meaning is said to be hidden, and this appears to be so, because we never try to go into the root of the words or by the Science of language and the Science of words. Siddhars have composed their works in poems, but every word, if carefully examined, will tell its own story—a reward of the deed done or of a thought by those to whom we owe the whole of our intellectual inheritance. Further, there is no evidence, more ancient, more trustworthy and more accurate than language, to know the real significance of the earliest phases of human thought in Philosophy, Religion, Mythology and Science.

சித்தர் போக்கு, சித்தர்கள் தங்கள் நூற்களில், ஒவ்வொரு விஷயத்திலும் அனுசரிக்கும் விதம் அல்லது வழி, the method or ways adopted by the Siddhars on every subject in their works.

சித்தர் மறைப்பு, உலகத்தாருக்குதவாதென்று சித்தர்களால் ஒளிக்கப்பட்ட நூற்களும், ஆதியுப்பு, வழலை, கடுங்கார செயநீர், வீரச் சுண்ணம், வெடியுப்பு செயநீர், கல் லுப்புக் கட்டு முதலிய மருந்து முறைகள், the several sciences and scientific methods of preparing medicine of high repute that were held to be secret, and concealed to the view of the public viz.—primordial salt, the mystic three salts, alchemists liquid, calcined corrosive sublimate, quintessence of nitre, consolidated sea-salt etc.

சித்தர் மறைப்புமை, சித்தர்கள் தங்கள் ரூபம் ஒருவர் கண்ணிற்கும் தெரியாதபடி இருக்க வேண்டி மறைத்துக் கொள்ள உபயோகிக்கும் ஓர் மாந்திரீகமை. இது அழிஞ்சில் வித்து, பச்சோந்தி முதலியவைகளைக் கொண்டு தயாரிப்பது, a magic paint prepared by Siddhars with a view to conceal their figures so as to make themselves invisible to others.

NOTE.—They purposely do this, so that the people may not recognise their movements. This is also performed by common jugglers playing in the streets ; and we find them wearing a black paint between the eyebrows.

சித்தர் முதல்வன், முருகக் கடவுள், God Subramanya, the head of all the Siddhars.

**சித்தர் முறை,** சித்தர் நூற்களிற் சொல்லிய முறைகள். methods or processes described in Siddhar's science; 2. இரச கந்த பாஷாணங்களைக் கொண்டு செய்யும் மருந்து முறை, the secret method of preparing medicines with the aid of mercury, sulphur and arsenic.

**சித்தர் முறை,** சித்தர்களுடைய முறையை அவர்கள் செய்த நூற்களினால் கண்டறியலாம். மனித வாழ்க்கைக்கு இன்றியமையாததெல்லாம் அவர்கள் போக்குப்படி கூறியுள்ளார்கள் அவையாவன:—

சித்தர்கள் வழிப்படி, வெளியுள்ள இவ்வுலகத்திற்கும் மனிதனுள்ளுக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு உண்மையாகவே மனிதன் அண்டத்தின் ஓர் சிற்றுருவமே ஒழிய வேறல்ல ஆகவே, எப்படி பிரகிருதியின் மூல வஸ்துக்களினால் இவன் உடம்பு ஒரு பாகமாக ஏற்பட்டிருக்கிறதோ, அதே மாதிரி இவன் ஆன்மாவும், மனதும், உள்ளபடி தேக அமைப்பில் ஒரு பாகமாக ஏற்பட்டிருக்கிறது மனிதனனவன் தன் தசை, எலும்புகள், நரம்புகள், தத்துவங்கள் இவைகளினால் மாத்திரம் ஆக்கப்பட்டனவல்ல; இவன் அண்டத்தின் சிறு பாகத்தையும் உள்ளவனுகக் கொள்ள வேண்டும். சித்தர்கள் இது விஷயத்தில் கொண்ட கருத்தை வீண் மனோராச்சியமென்று எண்ணக் கூடாது ஏனெனில், ஒவ்வொரு நூல் வகையிலும், அவர்கள் மேற்கொண்ட சம்வாதத்தையும், ஒழுங்கு முறைமையையும் அன்றியும், அவர்கள் தங்கள் ஆழ்ந்த சிந்தனையையும், நுண்ணறிவையும், புகட்டியுள்ளதை நோக்குமிடத்து, அவர்களின் தேக தத்துவ முறைமைகள் மிகக் கொண்டாடத் தக்கதாகும். வனாந்தரங்களில், தாங்கள் வாழ்நாள்களையெல்லாம் தியானத்திலேயே போக்கிகாலங் கழித்த சித்தர்களுக்கும், ரிஷிஸ்வர்களுக்கும். மனிதனின் தேக தத்துவம் முழுமையும், தற்காலத்து விஞ்ஞானிகளைவிட அனேக மடங்கு அதிகமாகவே அறிந்து தெரிந்தவர்களென்றே கருத வேண்டும். அடியிற்கண்ட விஷயங்களே இதற்கு ஆதாரமாகக் கொள்ளவேண்டும்:—

முதலாக, அவர்கள் கொள்கைப்படி பஞ்ச பூதங்களாகிய பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், ஆகிய இவைகள் மேற்சொன்னபடி வெளிப்படையான உலகத்திற்கும் மனிதன் உள்ளுக்கும், மூலகாரணமாக வுள்ளது. இப் பூதங்களே, உலக சிருஷ்டி, திதி, சங்காரம் இவைகளுக்கும் முக்கிய ஏதுவாக வுள்ளது. ஒவ்வொரு பூதமும், மற்ற ஐந்து பூதங்களோடு கலந்து இருப்பதையும் காணலாம். எவன் இந்த ஐந்து பூதங்களின் இரகசியங்களையும் கோட்பாடுகளையும் அறிகிறானோ, அவன ஒரு உலோகத்தை பிறிதொரு உலோகமாக மாற்றக்கூடும். ஏனெனில், எல்லா பொருள்களும் ஆதிமூல வஸ்துவாகிய ஒன்றினிடத்தே தோன்றியது. ஆகவே, ஏக பூதம், கலப்பு பூதம், என்ற பிரிவினையே கிடையாது மேனாடாகிய ஐரோப்பாவில் பூர்வகாலத்து மனுஷர்ளும் இவ்விதம் நம்பிக்கை யுடையவர்களே; அதாவது இவ்வுலகமே மேற்கண்ட ஐந்து பூதங்களினால் உண்டானது உலகத்து எல்லா வஸ்துக்களும் அதனிடமே தோன்றியது என்பதாக அவர்களும் கொண்ட கொள்கையினால் இனிது விளங்கும்.

இரண்டாவதாக, முப்பிணியைப் பற்றி சித்தர்கள் நூற்களில் எல்லாவித நோய்களும் வாத பித்த சிலேட்டுமக் கூறுகளின் கலப்பினால் ஏற்படுகிற தென்று விவரமாய் கூறும் இந்த முப்பிணியையே, ஆயுர்வேதத்தில் திரிதோஷம் எனக் கூறப்படும். இம் முப்பிணியே மனிதனின் தேக அமைப்புக்கு முக்கியமான ஆதாரமாகும். வெளியுலகத்தில் ஏதாவது விகற்பங்கள் தோன்றினால், மனிதனுள்ளே யிருக்கும் முப்பிணியிலும் இதேமாதிரியான விகற்பங்கள் ஏற்படும். ஆகவே, இவ்விதமான அண்டபிண்ட கலப்பு சம்பந்தந் தான, முப்பிணியின் கொள்கைக்கும், அது விஷயமான தேக தத்துவ நூலுக்கும் மூல காரணமாகவும் அடிப்படையாகவு முள்ளது. உண்மையாகவே, உலகத்திலுள்ள ஒவ்வொரு வஸ்துவிலும், இம்முப்பிணி சிறிதளவிலாவது, பெருமிதத்திலாவது கட்டுப்படாதது இல்லவே இல்லை. மனிதரின் குணாதிசயங்களும், இம் முப்பிணி செயற்கையினின்று பிரிக்க முடியாது. மேலும், சித்தர் பதார்த்தகுண நூலும், இம் முப்பிணியையே அடிப்படையாக வுள்ளது. ஏனெனில், தாவர வர்க்கம், தாது வர்க்கங்களிலுள்ள எல்லா வஸ்துக்களும், இம் முப்பிணியில் ஒன்று அல்லது அதற்கு அதிகமாகவே இருக்கத்தான் செய்யும்.

மூன்றாவது, சுவாசம் அல்லது மூச்சு என்பது உடம்பின் தொழில்கள் எல்லாவற்றுள்ளும் முக்கியமான தென்று கருதப்படும் ஏனெனில், மற்ற தொழில்களுக்கு இது ஆதாரமாக வுள்ளது மூச்சில்லாவிடில்உயிர் கிடையாது. மானிட தேகமான யந்திரம்.

பிறந்த சிசுவில் ஊசலாடும் மூச்சு முதல இறக்கும் மனிதன் கடைசியாக திணறும மூச்சு வரையில் ஊடாடிக் கொண்டிருக் கிறது. இதையே 'பிராணு' என்று மாறு படக் கூறப்படும்

சித்தர்கள் எல்லா காலததிலும், இடங் களிலும் இரகசியமாக தாஙகள் சீடர்களுள் சில பேருக்கு, சாதாரண காற்றில் பிராணு (சுத்த சகதி) என்னும் தத்துவம் உண்டு என்றும, இதினின்று தான் எல்லாவிதசெய் கைகளேயும, சகதிகளேயும், அடையக் கூடு மென்றும் அவைகளே அடையக கூடிய விதத்தையும போதித்தார்கள்

நான்காவது, வாத முறையில், சித்தர்கள் கொண்ட கருத்தாவது,— இவ் விஷயற்றில் ஒருவன் ஆததும ஞான முள்ளவனு யிருக்க வேண்டும். அன்றியும், பிறப்பிலேயே எப் படி ஒருவன் வைததியனுக யிருக்க வேண்டி யது அவசியமோ, அதேமாதிரி வாதியும் இருகக வேண்டியது. தன் பூர்வ கருமப் படி, பிறக்கும்போது கிரகங்கள் சரிவர அமைந்துள்ளவனுகயிருக்கவேண்டும்.வாதத் தொழிலோ இலாபத்தைக் கருதி செய்யப் படாது. சித்தர்களுடைய அறிவின் தேர்ச்சி யாலும், ஊக்கம், முயற்சியாலுந்தான் வாத முறையும், அதைச் சார்நத விஷயங்களும் வெளிப்பட்டதென்தபற்கு அனேக ஆதா ரங்களுண்டு. தேகமும், மனதும், யாதொரு குற்ற மில்லாமல் பரிசுத்தமா யிருந்தால் தான், ஆத்தும சக்தியினுல் வாதம் சித்தி யாகும் என்பது பெரிய இரகசியம், முப்பு என்பதின் ஆதிமுலப் பொருள் தான் ஆத்து மாவில் உள்ளது ஆகவே, வாத நூல் என பதின் ஓர் பாகம்தான் மானத இரசாயனம என்பது.

ஐந்தாவது, சித்தர்கள் இறப்பு அல்லது மரணம் என்பதை மனிதனின் உயிர் வாழ்க் கையில் ஓர் முக்கியமான பகுதியாகக் கொள்ள மாட்டார், பிரகிருதி சுபாவத்தில் மரணம் என்பது ஓர் முக்கியமான அம்ச மல்ல மனிதனின் தொன்று தொட்டு பழகி வரும் அறியாமையாலும், பயத்தாலும், தனக்குத் தானே தப்பாக எண்ணுவ தாலும் தான் இறக்கிருன். ''சகமீ திருந தாலும் மரண முண்டென்பது சதாநிஷடர் நினைவதில்லை'' என்பது ஆக்கியோர்சொல். ஆனல் சித்தர்களோ உடம்பிலுள்ள அணுத் திரள்கள்சக்திகளேத் தகுந்தபடி தனக்குள்ள ஆத்ம சக்தியால் மீண்டும் ஒழுங்குப் படுத்து வதால் நோய் அல்லது மரணத்தை தடுப் பார்கள். ஆகையால் அவர்களுககு மரணம் என்பதே கிடையாது.

கடைசியாக, மாந்திரீகம். மாய வித்தை என்பது ஆதி காலத்து, சித்தாகள் பரம் பரை யிலிருநது தொன்று தொட்டுவந்த வித்தை யென்று கருதப்படுகிறது, இந்த வித்தையை நோய்களே குணப் படுத்தவும், எதிர்கால நிகழ்சசியை கூறவும் ஆகிய இவை முதலிய புண்ணியச் செயல்களுக்கு மாத்திரம் உபயோகப்பட்டு வருவதல்ல. இழி வான செயல்களாகிய பில்லி, சூனியம், ஈடு வசியம் முதலிய தீக் கருமங்களிலும் கையா ளப்பட்டு வருகிறது சித்தர்கள் விளையாட் டாகச் செய்யும் அற்புதங்களும் மாய வித் தையாகவே கொள்ளப்படும், the Siddha system can be learnt from the works compiled by them. They have mentioned all that is required for a man's career in life viz, According to Siddha system there is a close relation and intimate connection between the external world and the internal man; and in the real sense. Man-is the miniature of the world; There. fore, his soul and mind are as much parts of his true constitution, as are the terrestrial elements of which his elementary body is made up He is not merely a composite of muscles, bones, tissues and nerves, but is a representative also on a small scale of all that is contained in the Universe, The knowledge of Siddhars in this respect cannot be taken as abstruse speculations; and in their arguments and arrangements in every branch of science, we can see that they evinced such depths of thought, acuman and discermment. as would lead one to think that their systems of lagic or reasoning regarding physiological principles are remarkably striking and interesting. Siddhars and Rishis who had spent all their lives in meditation in secluded forests should be credited with a complete knowledge of the human body far better than the Scientists of the present day. The undermentioned six parts will go to prove this clearly.—

Firstly — According to their method, the five elements viz:— earth, water, heat, air and ether lie at the root of the externel world and the internal man, They are the fundamental principles of creation, preservation and destruction.

Every element will be found mixed with the other five elements.

Siddhars also held that, if one is aware of the secret doctrine of the five elements, one metal may be changed into another on the ground that all substances spring or emanate from some Primordial matter, and so, there can be no classification as elements and compounds. The ancients of Europe had also similar belief as evinced from the saying that " Chaos of auntients " was a confused mixure of elements from which the Cosmos arose and gave birth to different natural bodies.

Secondly — Siddhars humoural pathology explains that all diseases are caused by the mixure of the three cardinal humours vix. — Wind, Bile and Phlegm which are called in Tamil ' Muppini and in Ayurveda ' Tridosha ' They are the three fundamental principles and essential factors in the composition and constitution of the human body. Any change in the elementary condition of fhe external world, has its corresponding change in the human organism ; and it is upon this interchange of influences that the three houmours theory and the doctrine of humoural Pathology are based, In fact, there is no substance in the Universe, which does not own its formation to humours in large or small degree. Human dispositions are inseperable from the three humours.

Siddhar's Materia Medica is also based on Humoural Pathology. It asserts that all substances of the animal. the vegetable, and the mineral kingdoms contain one or more of these humours.

Thirdly — Breathing is considered the most important of all the functions of the body for, all the other functions indeed depend upon it ; and without breath there is no life. Human machinery is set in motion and kept on going from the first faint breath of an infant to the last gasp of a dying man. The esoteric meaning of breath is spoken of as 'Prana' Siddhars in all ages and lands have taught secretly to a few of their followers that, in the air, will be found the principle of this Prana (Absolute Energy) from which all activity, vitality and life could be derived ; and they also have taught how it can be advantageously taken in,

Fourthly — In Alchemy, one should necessarily be a spiritualist and like a born physician, he must be a born alchemist, taking birth at a particular constellation of stars, according to his former Karma. It is an art not to be practised for material advantage. We have ample grounds for believing that Alchemy along with other cognate branches of learning was purely the outcome of Siddhars' intellectual activities and labours. The secret of Alchemy is, that our soul has the power to do it, if the body and mind are only pure and free from malice ; and therefore, the first matter i.e. the prima materia of the Lapis philosophorum is in the soul So, Alchemy in one of its phases, is really Psychochemsitry.

Fifthly — Siddhars consider that death is not at all a necessary part of or event in human life ; and there is no law of Nature that calls for death as a necessary happening. Man dies of his traditional ignorance, fear, imitation and erroneous auto-suggestion. The ancient saying is — " Men engaged ever in meditation never think that man is after all a mortal being. '

Siddhars, through their spiritual power re-arrange the molecules of their bodies to avert sickness or death ; and what we call death, does not occur to them at all.

Lastly — coming to magic in the S. India in particular, Mantram and Magic is the traditional knowledge of natural secrets, handed down to Coming

generations by the ancient Siddhars Mantric science, as an art, is freely applied not only for noble purposes such as, magnetic healing, foretelling future events etc. but also for achieving nefrious ends, as in Black art, Witchcraft Necromancy etc Miracles played by Siddhras also come under the actegory of Magic.

NOTE :— Mantram and Magic is the art of consciously employing invisible occult powers for producing visible effects. It is a psychological use of the thought-force pertaining to man and his environments even as exactly as the elements of electricity Thus, we have Mantrams known also as Magic in every religious formula. In S, India, it originated from Siddhars. It should not be confounded with Tantrams which constitute a system of ritualistic details.

Ancient Siddhars, of whom Tirumular, Karuvurar, Konganava, Sundaranandha including the supposed Agastya are *types of representative exponents* who have formulated various unique dogmas in the Mantric scicnce. Mantric science in thus the out of the ancient Revelations vouchsafed to the earliest Dravadian races of Southeren India — not to speake of the Atlantians — through the Divine Dynastics of Siddhars. It is the Siddhar's metaphysics that led the mind of man to an occult knowledge.

**சித்தர் மூலம்**, சித்திர மூலம், leadwort — Piumbago zeylanica.

**சித்தர் மூலி**, see சித்த ருண்ணு மூலி, 2. see சித்தர் மூலம்.

**சித்தர் வர்க்கம்**, சித்தர் வகுப்பைச் சேர்ந்த (1) *நவநாத சித்தர்கள்* *(2)* மூலவர்க்க சித்தர்கள். அவர்களாவன, the two Schools of Siddhars viz — (*1*) Navanatha i. e. nine Siddhars, *(2)* the eighteen Moolavarga Siddhars viz :—

I. நவநாத சித்தர். மூலவர்க்க சித்தர்களுக்கு முன்னிருந்த ஒன்பது பேர்கள், the nine original school of Siddhars that were before the Moolavarga Siddhars viz :—

1. சத்திய நாதர், Sathya Nathar.
2. சதோக நாதர், Sathoga Nathar.
3. ஆதி நாதர், Authi Nathar.
4. அநாதி நாதர், Anathi Nathar.
5. வகுளித நாதர், Vagulitha Nathar.
6. மதங்க நாதர், Mathanga Nathar.
7. கடேந்திர நாதர், Gadendra Nathar.
8. மச்சேந்திர நாதர், Machendra Nathar
9. கோரக்க நாதர், Korakka Nathar.

II. மூலவர்க்க சித்தர்கள், இவர்கள் பேரறிவு வாய்ந்த பதினெட்டு சித்தர் வர்க்கத்தை சேர்ந்தவர்கள் அவர்களாவன, those Siddhars who belong to a school of great knowledge, which consisted of eighteen members known as Moolaverga Siddhars and they are — (1) Nandi (Brahmin) (2) Thirumoolar, (Vellala). (3) Pulasthya (Singhalee) (4) Idaikkadar (Shepherd), (5) Agastya (Vellala) (6) Punnakkisar (a Kanarese Shepherd) (7) Poonakkannar (not known), (8) Bogar (Chinese Potter), (9) Pulikkisar (not known), (10) Karurar (metal worker), (11) Konganava (Konkini shepherd) (12 Azuganni (Barber), (13) Kalangi (Goldsmith), (14) Agappai (Vellala) (15) Terayar (Brahmin). (16) Sattainathar (Singhalee) (17) Pambautti (Jogi) (18) Kuthambai. (not known).

NOTE 1. — Nos I and 15 : are mentioned as Brahmins which could not be true at there was no caste system during the the Siddhars time. It is only after the migrations of the race called Arya is into the South India that the caste systems were introduced. This is quite against the principle of the Dravadian system for the reason that the distinction, high and low, existed only in the profossion such as goldsmith potter metal worker othuvun, chuckler, barber, washerman etc.

NOTE 2.— The original school of Shiddhars founded by God Shiva consitsed *only of* nine members known as Navanatha Siddhars. It is a peculiarly interesting fact that the members of this school of Siddars took subsequently the names of Rishis, Reformers, Gurus, Acharyas etc, another Sankara Acharya, a third Gautama, and so on, Even Konganava Siddha supposed to have lived near Goa the first Christian settlement *in India is said to have been* reverred by the Christians there as a Sad-Guru (ideal teacher) since some of his poems alluded to Christianity. Those who have closely studied the Siddha works will come to know that some of the Siddhars such as, Rmaa Devar or Yaeooc and Roma

Rishi visited Turkey, Arabia, Tibet, China, Ceylon and other places and taught the people there all about Medicine, Magic etc. One of these even refer to Franks Bogar and Pulppani natives of China came to Southern India about 1600 years ago and joined the Siddhars school and learnt all about Tamil Medicine, Alchemy etc. and subsequantly become authors of several works in Tamil.

NOTE:—3. The school of Siddhars, though consisted of men of different classes and creed as are found in the list, they were mostly of a Tamil sect, which maintained Siva for its God. The school of Siddhars and their works in various branches of knowledge are clear proof of their over high perfection in science.

It is also said that Ancient Siddhars were nearly 64 in number and that they esta blished Mutts in S. India and arranged for hereditary transmission of their wisdom to posterity. Their teachings acquainted the people with true spirit of Religion to attain salvation in place of empty formalism and superstition; because such teachings used to promote rational thinking. It is the school of Siddhars that kept alive the flame of philosophical and mystic learning

see சித்தர் பதினெண்பர்.

**சித்தர் வாக்கியம்,** சித்தர்கள் கட்டுரைகள் the sacred sayings of Siddhars.

**சித்தர் விளையாட்டு,** சித்தர்கள் புரியும் அட்டமா சித்திகள், the eight imracle or supernatural powers played by Siddhars viz: —

1. ஞானதிருஷ்டி — தூரத்து சங்கதிகளை இருந்தபடியே கண்டறிவது— clairvoyance i. e. telling what is happening at a distance.

2. கவுனமோட ஆகாய மார்க்கத்தில் பரத்தல் — soaring in the sky Aero-flight.

3. பரகாயப் பிரவேசம் அல்லது கூடு விட்டு கூடு பாய்தல் அதாவது தன்னுடைய உயிரை வேறொரு உடம்பில் செலுத்தல் — Metapsychosis i. e, the passing of the soul into another's dead body

4. உயிர்ப் பித்தல், செத்தவர்களை பிழைக்க வைத்தல் — Resuscitation, reviving or restoring life to the dead.

5. நோயாளிகளை குணப் படுத்தல்— Restoration or recovery of health.

6. திடீரென தோன்றல், மறுபடியும் மறைதல்—Apparition or coming to sight i. e. becoming visible and then invisible.

7. பிறர் நினைத்ததை சொல்லுதல் — Thought-reading or telling what one is thinking.

8. அஷ்டமா சித்தியாடல், அதாவது அணுவாதல், பெரிதாதல், பாரம் அல்லது இலேசாகுதல், விரும்பிய வற்றை அடைதல், விரும்பியவிடத்திற்கு செல்லல், முத்தொழி லியற்றல், உருமாறதல், முதலியன — Octomiracle i. e. the eight miraculous powers viz:— becoming an atom and then bulky; becoming light or heavy, acquiring what is desired reaching the desired place, performing the three acts viz.—creating, preserving and destroying. metamorphosis i e., assuming different forms etc.

NOTE:—The Magic l powers of Saints and Siddhars are:— 'Siddhars cure barrenness or sterility in woman and other diseases found incurable, by ordinary means; appear to a person at a distance to save him from an unseen danger; calm storms especially at a distance; change female into male children; convert sincers and infidels to the truefaith turn man's heart by a look, thought or word; compel inanimate objects to act as if they possessed life volition; benefit friends and do troy foes, and exercise dominion over beasts, birds, fishes etc, restore vigour to aged men; raise the dead; put the fiend to fight; *summon angels and spirits; cause* trees to produce butter and honey; refine sensual to spiritual love, know man's thought and plans; break clains and fetters, doors and walls; live without food, drink or sleep; cause a single pot of water to support a caravan withouts ensible dimi-nution, commute the death of a person by providing a substitute and give learn. ing to fools (Encyclopedia of Religion and Ethics).

**சித்தர் வைத்தியம்,** see சித்த வைத்தியம்.

**சித்த லயம்,** சித்தர்கள் யோகாப்பியாசத்தினதில் அடைந்த மன வொடுக்கம், the concent·

ration of mind derived from the practice of Yoga.

**சித்தவரை**, see சிற்றவரை.

**சித்த வர்க்கம்**, see சித்தர் வர்க்கம்.

**சித்த விகாரம்**, மனத்தின் அலைவு, the waves. of the mind.

NOTE:—All thought-waves must be stopped so that the mind-stuffs may become smooth and tranquil. Mind is all always trying to get back to its natural state of calmness, but it is only the organs that draw it out, but man should restrain it-

**சித்த வித்தியா பூ**, வைதத்திய கிரந்தம் செய்த ஓர் முனி, a sage who is the author of a book on Medicine written in Sanskrit, 2. ஆயுர்வேத முறைப்படி இலுப்பை. சனிக் காய், தேவதாரி, சீந்தில், குருவேர், முசு முசுக்கை, வில்வ வேர், கோரைக் கிழங்கு இவைகள் சேர்த்துத் தயாரித்த கஷாயம், இது அம்மை சுரத்திற்த கொடுக்கப்படும், a decoction prepared as per process of Arurveda with the following ingredients viz-— honey flower, sani fruit, deodar, moon-creeper, cuscus root, rough bryonia and coray root. It is prescribed for pox-fever.

**சித்த விப்பிரம சன்னி**, உடம்பு மிக நொந்து, சுரம் காயும் ஓர் வகை சன்னி நோய். இத ஞல் மதி மயங்கி, உடம்பு முழுவதும முறிப் பதுமாய், அடிக்கடி எழுந்து விழுவதும், புலம்புவதும், வந்த பேர்களை கட்டித் தழுவு வதுமான குணங்களைக் காட்டும். இது பதினேரு நாளில் தீரும், a form of delirium occuring in febrile and inflammatory diseases of acute character. It is characterised by disorder of the brain and revesls itself in the languages and actions of the patient such as weeping, laughing, tumbling or tossing, wailing, embracing etc.—Delirium tremens It will be cured in eleven days.

**சித்த விருத்தி**, மனே விருத்தி, expansive thought-forms of the mind.

**சித்த வைத்தியம்**, பொதுவாக சித்தர்கள் முறைப்படி யுள்ள ஓர் வைத்திய நூல். இது ஓர் நூதனமான நூல், ஆகவே, ஆயுள் வேதம் அல்லது ஆங்கிலம் மற்ற நூற் களோடு ஒப்பிட முடியாது. ஏனெனில் இவ் வைத்திய நூலில, வாதம், ஞானம், யோகம், மாந்திரீகம், சோதிடம் முதலிய நூற்களும் சேர்ந்துள்ளன. வாசிப்போர்கள் இந்நூலைத் திறநது பார்க்கும்போது,மேற்கண்ட நூற்க ளெல்லாம் வைத்தியத்தோடு கலந்திருப் பதைக் காணலாம் ஆகையால விசாலமான ஆதாரங்களைக் கொண்டது. இந்நூலின் உள் விஷயங்களை நோக்குமிடத்து இவைக ளெல்லாம் மேனுட்டு ஆசியா,ஐரோப்பாவின் நாகரீகத்திற்கு நெடுங்காலத்திற்கு முன்ன தாகவே ஏற்பட்ட தென்று தெளிவாக விளங்கும்.

இதில் போகர், புலிப்பாணி, இராமதேவர் முதலியவர்களைத் தவிர பெரும் பாலும் சித்தர்க ளெல்லாம் தமிழர்களே யாத லால், இச் சித்தவைத்தியம் தமிழ் நாட் டுக்கே உரிய தென்பதை ஒருவரும் மறுக்க முடியாது. அதினுல்தான் அவர்கள் செய்த நூற்களெல்லாம் தமிழ் செய்யுளில் செய்யப் பட்டிருக்கிறது. மேலும், ஆயுள் வேதம் எப் படி ஆரியர்களின் தெய்வ அனுக்கிரகத்தை குறிக்கிறதோ, அதேமாதிரியே சித்த வைத் தியம், சிவன், பார்வதி இவர்கள் கடாட்சத் தால் ஆக்கப்பட்டதென தெளிவாகிறது. பூர்வீக நாகரீக சரித்திரததினுல் சித்த வைத் திய முறை அனேக சித்திகளை பெற்றதென் பதை ஒருவரும் மறுக்கவே முடியாது.

சித்தா முறை, அனேக ஆயிர வருடங் களுக்கு முன்னதாகவே ஏற்பட்டது. எல்லா தந்திரத் தொழில்களிலும், வித்தை நூற்களி லும் சித்தர்கள் மேற்கொண்ட முயற்சிகளும் அறிவின் திறமும் அபாரமானது அவான் வைத்திய முறையை கையாணட காலமோ தங்கத்தைப் போன்ற மிக்க சிறந்தகாலம். சித்த முறையை அனுசரித்த விஷயங்களைப் பற்றிய விசாலமானகேள்விகளுக்கு எளிதில் பதில் கூறிவிட முடியாது. ஆயுள் வேதத் தில் சரகர், சுசுருதர் முன்னேர்கள் ஆகிய இவர்கள் எழுதிவைத்த நூலைப் பார்த்து திரட்டியதே ஒழிய வேறல்ல. ஆனுல், சித் தர் முறையோ ஆன்ம சக்தி யடைந்த பிறகு விஷயங்களைத்தெளிவாக தெரிந்தபின்அவர் களால் எழுதப்பட்டது. சித்தர்களின் ஞான விளக்கத்தின் அறிவாலும், அனுபவத்தா லும் எழுதிய நூற்களில் உண்மையே அடிப் படையாக உள்ள காரணத்தினுல் ஒருவரும் அதை மறுத்துவிட முடியாது. மேலும், ஒரு மிக்க சிரத்தையோடு படித்து விஷயங்களை கிரகிக்கவேண்டு மென்று உண்மையாகவே முயற்சித்தா லொழிய, அனேக விஷயஙகள் அவன் புலனுக்கு எட்டாது. ஓர் இரகசிய, மான விதததை யெனவேகாணப்படும் ஆகவே

சித்த வைத்தியம்

ஒருவரும் இம்முறையைப் பற்றி குறைகூற முடியாது. திராவிட நாகரீகம் மலிந்த இந்த தென் இந்திய நாடு, பூர்வத்தில தமிழ் முதற் சங்கம இருந்த தென்பாகம் முழுமையும கடற்கொண்டுவிட்டது. சித்த வைத்தியத்திலும் மேற்கண்ட நாகரீகத்தைப் பெற்ற விஷயங்களும் சிலது உள்ளன. ஆகவே, இதை ஆயுள் வேதத்தின் ஓர் பாகம் என்று சில ஆரிய மக்கள் சொல்வது பொருந்தாது. தமிழ் பாஷை எப்படி வடமொழியைத் தழுவாமல தனிப்பட்ட முறையோ. அது மாதிரியே சித்த முறையும், ஆயுள் வேதத்தைச் சேராத தனிப்பட்ட முறை. இந்நூற்களெல்லாம் சித்தாகளால்தான் எழுதப்பட்டதென்பது அவர் செந்தமிழ் நடை செய்யுள்களினுலேயே இனிது விளங்கும் ஆகவே, சாதாரண எழுத்தாளர்களால் இவ்விதமாக எழுதிவிட முடியாது. அன்றியும், மற்றநூற்களில் கண்டறியாத, எப்பொழுதுமே கேட்டிருத, அனேக இரகசியமான விஷயங்கள் இந் நூற்களிற் காணலாம் சிலமுக்கியமான விஷயங்கள், சித்த நூற்களை முற்றும் செவ்வையாகப் படித்தவர்கள்தான், சித்தர்கள் பரிபாஷையிற் சொல்லியுள்ள முக்கியமான விஷயங்களை அறியக்கூடும். உலகமே பொன்னுசையினுல வெறிகொண்டதுஎன்ற விஷயம் நன்ருய் தெரிந்ததே. ஆகையால் சித்தர்கள் தங்கள் வாத முறையில் அனேக விஷயங்களை வெகு தந்திரமாக கூறியுள்ளார் ஆன்ருேர் வாக்கின்படி, வாதி மகன் வைத்தியன் என்பதினுல் வைத்தியன் வாதியின் மகனுய் இருக்கவேண்டு மென்பது ஏற்படுகிறது. ஆகவே, இம்முறையில் ஈடுபட்ட வைத்தியன் தன் தொழில ஆரம்பிப்பதற்கு முன்னதாகவே வாதத்தில் தேர்ச்சியடைந்தவனு யிருக்கவேண்டும் இவ்வாதத்தொழில் பணம் சேர்ப்பதற் கல்ல, தனக்கு சீவனத்துக்கு எவவளவோ அவ்வளவுமட்டும்தான், மற்றும் தன் வைத்தியத் தொழிலுக்கு பிறர் உதவியின்றி எவவளவு வேண்டியதோ அதுமட்டும்தான் என உணர வேண்டும் நோயாளி இடமிருந்து பணம் எதிர்பார்க்கப்படாது. எல்லாருமே சித்தியடைந்த வைத்தியர்களாய் இருக்க முடியாது. சில கிரகங்களின் அம்ச காலங்களில் பிறந்திருந் திருந்தால்தான் முடியும அவன் சாதகப் பிரகாரம் வைத்திய நூலிலும் வாதத்திலும் தேர்ச்சி யுள்ளவனு யிருக்க வேண்டும். சாதாரணமாக கற்கடக ராசியில் பிறந்தவன்தான், பிறவி வைத்தியன் என்று சொல்லப்படுவான், ஆகவே, தேர்ச்சியினுல் பெற்ற அறிவினுல் அவ்வளவு சித்தி பெற முடியாது நூற்களைக் கல்லாமல், சொற்ப அறிவினுல் செய்யும் வைத்தியம் மேற் சொன்னதை விட அவ்வளவுசிலாக்கியமானதல்ல.

சித்த வைத்தியர்களின் குணுதிசயங்கள் முதலியவைகளை விரிவாக இவ்வகராதி வாலியம் 1. முகப்பாயிரத்தில் எழுதப்பட்டிருக்கிறது. மேலும், சித்த முறை உலக நன்மைக்காக எழுதிய காரணத்தினுல், இவ்வைத்தியத்தை வியாபாரமாகவும், அல்லது பணத்திற்காக கிரயம் செய்யவும் பணம சேர்க்கவும் கூடாது. அப்படி விதித்த விதிகளை மீறி நடந்தால் சித்தர்கள் சாபம் வந்து சேருமென கருதப்படும். வைத்தியன் பேராசைப் படுவான் எனக் கருதியே அனேக கட்டளைகள் ஏறபடுத்தப்பட்டிருக்கிறது. சித்த முறையில் கண்ட மனக்கோட்பாடு, ஞானம் இவைகளை வைத்தியனை நியாயம், உண்மை ஒழுங்கு ஆகிய இவ்வழிகளில் புகட்டுவதற்காகவே நூற்களில் கண்டிருக்கிருர்கள். ஆகையால் இவைகள் சித்த வைத்தியத்திற்கு ஆதரவு கொடுக்கும் ஓர் கட்டடத்தின் மூலக் கல்லுகளாகக் கருதப்படும், the Siddha System of medicine. It is a peculiar science; and it cannot be compared with Ayurveda, Allopathy or any other system of Medicine. It is a medical sciences comprising with it, all kinds of sciences as — Alchemy, Philosophy, Yoga Magic, Astrology etc. If any reader opens a book on this system. he will naturally find all the said sciences mixed up along with medicine So. it is founded on a very broad basis.

The internel evidence of this literature shows that they were all written and composed at a time long before the civilisation of Western Asia and Europe.

It cannot be denied that the Siddha system of medicine is peculiar only to the Tamil country, as all the Siddhars are Tamilians except some as. Bogar. Pulipani, Rama Dever etc. of other countries and so, they all composed their works in Tamil verses. Moreover it is a science clearly attributed to the grace of God Shiva and parvathi, unlike Ayurveda to the Aryan God. That the Siddha system achieved many great

things very early in the history of civilisation is a fact that cannot be denied. Siddhars system was *founded* many thousands of years ago and the Siddhar's period was one of intense and intellectual activity in all its arts and sciences, in the realm of Medicine it was indeed a golden age. As regards the theories of this system it is very broad question to be answered The authors of this system, are spiritualists of great culture unlike Charaka and Susruta who only collected or copied from the works of the other writers on Ayurveda. The Siddhars have written from their spiritual knowledge and experience and therefore, the truths of them cannot be denied by any one or *criticised.* as *still informations on many* subjects are a mystery to a layman and beyond his comprehension unless one really attempts to get at them after exhaustive study.

The Tamil Siddha *Medicine has in* it certain features characteristic of Dravadian civilisation of S. India a greater portion of which was submerged in the sea, including of course, the first great Tamil Sangam It cannot be said that it is a part of Ayurveda as *rumoured by some Aryans It* should be known that Siddha system is as distinct a science from Ayurveda as of Tamil language is of a Sanskrit one. All the works in this system were written only by Siddhars, as could be learnt from their compositions in verses of high Tamil and so. they cannot be imitated by other ordinary writers, Besides, they contain many mysterious inform ations and quite unheard of things not to be found in other works, Some of the important secrets are couched by code words *(பரி பாஷை)* which could be solved only by those who made a complete and exhaustive study of Siddhar's works. Many points on Alchemy are dealt with so cleverly knowing fully well that the world is mad after it for making gold. Moreover. it is well known from what our elders say that a physician should be the son of an Alchemist. So, a physician, according to this system, should start his profession from Alchemy which he is expected to learn first. not for amassing wealth, but *for his bare subsistence and nothing* more, and for practising medicine without expecting money in return *from his patients*

It is said that all cannot be successful practitioners except *those who are* born at a particular constellation of stars. Horoscopically, the should be one eligible in the science of *Alchemy and* Medicfne. It is said that one born is cancer, a consteiation of the Zodiac. in a born physician. So. persons of acquired knowledge will never be so very successful. in the art chosen by him much less by those having prattling knowledge without a scientific study.

The qualification of a Siddha physician, as dealt with by Siddhars, is *fully dealt with in* the Introduction to Vol. I of this Dictionery Moreever, the Siddhar system intended *for the welfare of mankind, cannot be* commercialised or bartered for money or for amassing wealth; and any one who *contravenes the prescribed rules is* supposed to receive the course of Siddhars. Several are the injunctions prescribed against the avarice of such practitioners

In the Siddha syetem; *Religions* and Philosophy go hand in hand just to direct the practitioners in the path of righteousness, justice and truth which are considered the corner stones of Siddha Medicine.

NOTE :— Great is the contribution which Siddha system have made to the world's thought. It borne out by evidence that will stand any impartial scrutiny, that from earliest times Siddhar's culture *was at its zenith* when other countries were plunged some thousands of years ago in complete barbarism It is highly desirable *that scholars and* scientists of the eminence of Sir. P. C. Ray should enter into the field of Research of our Tamil Literature treating on the

system. It is characterised by the following symptoms viz—heaviness of head and the body, nausea, cough, in-salivation, cattarrh of the nose, breathing with wheezing, expectoration, general wasting of the body etc.

NOTE.—It is an almost incurable disease generally ending in death. It is also known as pulmonary tuberculosis. It is generally found prevalent among the civilised societies in the town, leading an easy-going life, especially girls.

சிலேட்டும சரீரம், சிலேட்டுமம் அதாவது கபத்தின் கூறு அதிகப் பட்ட வுடம்பு. இதனால் 20 வகை நோய்களும் உண்டாவ தன்றி, அத் தகைய மனிதனுடைய குணாதிசயங் களும் வேறு பட்டு ஏற்படும் கோளாறுகளாவன:- உணவில் வெறுப்பு, வெண் மலம், வெண் மூத்திரம், களகண்டம், சோம்பல், நாளத் தாபம், அதி தூக்கம், வெண்ணிறக் கண், கால் கை சில்லிடல், குருக்கள் எழும்பல் மார் கனதி, அசீரணம், திமிர், உடம்பு பாரிப்பு, மந்தம், வாய் நீருறல், பலவீனம் சளி கக்கல், வாயினிப்பு, கொழுப்பு முதலியனவாம். குணாதிசயமாவன :—சாத்வீகம், தயா குணம், நன்றி யுடைமை, சிநேகித வாஞ்சை, நூல் நம்பிக்கை, தருமம், தயாளம் உண்மை முதலியன, body or constitution attended with phlegmatic humour i.e. predominence of kapha in the system. This condition of the system brings about twenty complaints and different kinds of temperaments in a man viz ;—

The complaints are .— (1) Aversion to food (2) white stools (3) white-coloured urine, (4) goitre, (5) drowsiness, (6) inflammation of veins, (7) excess of sleep, (8) whiteness of the eyes, (9) coldness of limbs or chillness of the extremeties, (10) rash, (11) heavines of the chest, (12) indigestion, (13) numbness, (14) heaviness of body, (15) dullness, (16) insalivation, (17) weakness, (18) expectoration, (19) sweet taste in the mouth, (20) exeess of fat.

The tempraments are— Mildness in thought, word and deed and other amiable qualities, forgiving nature, gratefulness, friendliness, inflinching faith to the dictates of the ancient science (shastras,) charity, liberality, truthfulness etc.,

சிலேட்டும சரும கீலம், முகத்தில் முளைகள் எழும்பி வழுவழுதது, வெளுத்து, ஊசியாற் குத்துவது போல் குத்தலை யுண்டாக்கும். சிகிச்சை செய்யாவிடில் அபான வாயுவை அடைத்து மல பந்தத்தையும், வயிறு பருத்தலையு முண்டாக்கும், pimples or pustules on the face with a whitish appearance and glossy surface and followed by pin-prick pain. If these are not treated, they may lead to gas in the intestines and distension of the bowels thus resulting in constipation.

சிலேட்டும சலமிழிவு, கபாதிக்கத்தால பிறக்கும 4 வகை மூத்திர நோய். இதில் மூத்திரம தாழைமலர், எலுமிச்சை, சாணம், உதிரம் இவைகளைப் போல் வாசனை யுள்ளது, ருசித்திப்பு, a urinary disease consisting of four kinds, each of which attended with abnormal discharge of urine. In this, the urine is sweet to the taste and smells like screw pine flower, lemon, cowdung and blood. The disease is attributed to the deranged phlegm.

சிலேட்டும சவ்வு. சளி சவ்வு, இது உடம்பினுட் பகுதியில் உள்ள அறைகளை கவர்ந்து கொண்டிருக்கும், the mucus membrane lining all the cavities of the body.

சிலேட்டும சன்னி, நெஞ்சில் கபங் கட்டி வியர்த்து, தோன்றுத தெல்லாம் மனதிற் தோன்றி, தண்ணீர் வெறுத்து, புத்தியை மயக்கும் ஓர் வகை சன்னி, a type of delirium in which the accumulation of phlegm in the chest and perspiration form the predominent symptoms. It gives rise to disorder of the brain occasioned by extravagant thought, dislike for water, perplexity of mind etc.,

சிலேட்டும சிக்வா கண்ட ரோகம், நாக்கில் முளைப்போல் தடித்து வெளுத்து கொப்புளங்களை எழும்பும் ஓர் நோய், a disease of the tongue thickened with papillae and is so changed as to give the mucous membrane an appearance of whitish colour.

சிலேட்டும சிம்மக காசம், சிலேட்டுமந் தங்கிய ஓர் வகை காசநோய், phlegmatic asthma.

சிலேட்டும சிராவம், கண்ணில் வலி ஏற்படாமலே அதினின்று வெண்மையாயும், கடினமாயும், சீதம் போலும் சீழ்வடிந்து, பீளை தள்ளிக் கொண்டிருக்கு மோர் கண்ணோய், an eye disease in which the secretion of slimy, white and thick muco-purulent discharge is marked by absence of pain. See கபச் சிராவம்.

சிலேட்டும சிர்க்கரோகம், பெண்களுக்கு அல்குல் வழியாக மஞ்சள் நிறமாய் நாற்றத்துடன் வெளிப்படும் இரத்தமும் சீழ் கலந்த ஒழுக்கு. இதனால் பசியீனம், மல பந்தம், முதுகுவலி, சூதக சன்னிக் குறி முதலிய குணங்களைக் காட்டும், the increased secretion from the female private parts called whites. The discharge is due to the phlegmatic humour of the system ; and is of a white and faint yellow colour. By this disease, the appetite is impaired, and the bowvels constipated ; there is often pain in the back followed by hysterical symptoms.

சிலேட்டும சிலேட்டுமம், see சிலேட்டுமத்தில சிலேட்டுமம்.

சிலேட்டும சுரம், கபாதிக்கத்தினு லுண்டான சுரம். இதனால் கை கால் கனத்து, சிரசில் நீர் கொண்டு, தலை வலித்து, உடம் பிளைத்து, விட்டு விட்டுக் காயும். அன்றியும், நெஞ்சுவலி, நடுக்கம், தலையில் வியர்வை, அரோசிகம், சதை சிலிர்ப்பு, அதிக தூக்கம், வயிறறில் எரிச்சல், வாயில் இனிபபு, இருமலுடன் கோழை, வாந்தி, சோர்வு முதலிய குணங்களைக் காட்டும், phlegm-born fever, which is characterised by heaviness of limbs, headache through cold in the head, and emaciation. It is intermittent and is marked by chest pain, shivering, nausea, marked appearance of goose-flesh, excessive sleep, waterbrash, sweet taste in the mouth, cough with expectoration, vomiting, lassitude and other peculiar symptoms.

சிலேட்டும சூலை, கபாதிக்கத்தினால் அடிவயிற்றில் நோவு, வியர்வை, அரோசகம், கை கால் கனதி முதலிய குணங்களை யுண்டாக்கும் ஓர் வகை சூலை நோய், a kind of colic attended with agonising pain in the abdomen, perspiration, nausea, heaviness in the limbs etc., It is said to be due to the deranged phlegm in the system; 2. மேக சம்பந்தத்தினு லுண்டாகும் சூலைப் பிடிப்பு, a chronic gout.

சிலேட்டும சோகை, கபத்தினால் ஏற்படும் சோகை, phlegmatic anemia.

சிலேட்டும தாம், ஜபசீரிமை, synovial tissue

சிலேட்டும தலைவலி, see சிலேஷ்மத் தலை வலி.

சிலேட்டும தாது, உடம்பில் பித்த தாது சம்பந்தமான பலவிதமான ரசாயன மாறுபாடுகளினால் உஷ்ணம் உண்டாகிற பொழுது, மேற்கண்ட உடம்பின் சூடு (animal heat) அதிகமாய்ப் போகாமல் தடுப்பதற்கு சக்தி வாய்ந்து உள்ளது தான் சிலேட்டும தாதுவாகும். இந்த உஷ்ணத்தை ஒழுங்கு படுத்தி, உஷ்ணத்தினால் சவ்வின் அறைகள் தேயுறுவதை அதிகமாக செல்ல விடாமல் குறைப்பதும் இச்சிலேட்டும தாதுவேயாகும். இது மார்பில் விசேஷமாய்த் தங்கி யுள்ளது. சிலேட்டுமம் என்றால் தழுவுதல் என்று அர்த்தமாகும். ஆகவே, சிலேஷ்மம் என்னும் பிராண சக்தியானது சவ்வு அறைகளை அணைத்துத் தழுவி, அணுவாதி தத்துவங்களுக்கு வலிமையையும் கொடுத்து காப்பாற்றுவதும், உடம்பில் கருக்குழிகளிலும், நிணநீர்க் குழிகளிலும் ஓர் வழவழப்பான எண்ணெய்ப் பசையைக் கொடுக்கவும இது உதவும். இதற்கு சிலகளின் உட்புறத்திற்கு வழவழப்பு கொடுப்பதற்கும், உடம்பிற்கு பசை கொடுத்தற்கும, பருமணல் போன்ற சதை வளர்ச்சிக்கு உதவுதலும், உடம்பின் பருமனை வளர்த்தலுக்கும், புதிய சவ்வுகள் கட்டலும், உடம்பிற்கு இனிமையான உணர்ச்சியைக் கொடுப்பதற்கும், பலத்தை விர்த்தி செய்வதற்கும், கைகால்களுக்கு உறுதியை கொடுத்தலுக்கும் ஆகிய எண்வகைத்தான காரியங்களுக்கு உதவும், kapha humour combined chemically with Pitta (bile) gives rise to heat in the body ; and so, Pittam is the positive heat of *the body and Kapha is the negative* heat or the cooling principle which presents the excessive effect of the bodily heat by means of its humidity, thus protecting the cellular tissues from wasting away. So. this Sleshma of the *life-energy regulates the heat or* the body by taking its seat in the

heart and prevailing the whole system, keeps intact the cellular membranes with their different component mob-cules. It lubricates the womb cavities and the lymphatic cells with a mobile fluid. It also serves synovial fluids to the joints for giving smoothness, and lends strength and supports the body with viscus fluid for its development thus promoting the bulk of the body, and also builds the cellular membranes. Moreover, it helps the five senses of the body, and also adds strength to the limbs. So, the manifested Kapha operates on the human system in eight different ways.

NOTE.—Moreover, it supports the body with the power of endurance and balances the process of assimilation. It fills the cellular spaces of the body; and holds them together in a kind of cooling cohesion. The Gunas (properties) attributed to the manifested Kapha are whiteness, coldness, oiliness, heaviness, firmness and smoothness.

சிலேட்டும தந்த மூல ரோகம், பித்தம் பல்லில் பிரவேசித்து, அதன் வேரிலுள்ள இரத்தத்தை சீழாக மாறச் செய்து, எரிச்சலை யுண்டாக்கும் ஓர் பல் நோய் a dental disease in which the bile prevails in the gums at the root of the teeth causing pus with burning sensation.

சிலேட்டும தாகம், கபக் கோளாறினால் நெஞ்சில் குத்தல், வாயினிப்பு, வயிறுப்பலும், தலையும் உடம்பும் மறத்தல், வாந்தி, அரோசகம், சோம்பல், அசீரணம் முதலிய குறிகள் ஏற்படும், intense thirst as a result of excited condition of phlegm in the system. It may lead to the following bad symptoms viz;—pin-prick pain in the chest, sweetness of taste, flatulency, numbness, vomiting, nausea, indolence and indigestion.

சிலேட்டும திமிரம், கபாதிக்கத்தினால் கருவிழியை வெளுப்பாக மாற்றி, பார்வையையும் வெளுப்பாகத் தோற்றுவிக்கும். மேலும், ஒரு வஸ்து பல வஸ்துக்களாய்க் காணப்படும் நோய், an affection in the black of the eye (iris) from phlegmatic causes, by which the iris is rendered white giving a whitish appearance to the sight.

சிலேட்டும திரமான், கபத்தை கண்டிக்கக் கூடிய மூலி, medicine promoting the discharge of mucous or other matters from the trachea–Expectorant ; 2. செவ்வியம், black pepper root.

சிலேட்டும துட்ட விரணம், நரம்புகளில் சிலை போடி வெளுத்து, கெட்டி பட்டு குத்தலும், வலியுடன் பிசினைப் போல் சீழ் வடியும் ஓர் விரண நோய், an open sore or lesion affecting the nerves and causing sinuses, attended with boring pain and purulent discharge.

சிலேட்டும தேகக் குறி, நாடி துர்ப்பலம், உடல் வியர்வை, சன்மார்க்கத்தில் இச்சை, காம விச்சைக் குறைவு, முதலிய குணங்கள் ஏறபடும் கப உடம்பு. இவர்களுக்கு கண் வழியாய் ஜீவன பிரியும், the temperament of a man of phlegmatic humour, will exhibit symptoms such as—weak blood vessels, perspiration, spiritual desire, a low ebb of sexual passion, etc., In men of such types, the soul on their death, will leave the body through the eyes.

NOTE.—It is not to be forgotten here that a man's character and his temperament are moulded according to the constellation of stars at the time of his birth. So, astrology which comes in here is found to determine also the mode of his death, and how the soul escapes the nine openings of the body. According to medica Astrology, every zodiacal sign, and every planet has its own elementary qualities; and has even special powers over some part or parts of the body to create corresponding humours with diseases, remedies mode of death etc.

சிலேட்டுமத் தடிப்பு, கபம் அதிகரித்தல் excess of phlegm; 2. கபம் உறைதல், solidity or thickness of phlegm.

சிலேட்டுமத் தானம், உடம்பில் கண்ட முதல் சிரசுவரை யுள்ள பாகம், the region of phlegm extending from the neck to the head.

சிலேட்டுமத்தில் சிலேட்டுமம், ஒரு மாத்திரை யாய்நடக்கும் சிலேட்டுமத்தோடு, வேறொரு மாத்திரையாய் நடக்கும் சிலேட்டுமம் சேர்ந்தால் ஆத்துமா வெளிப்பட்டு தேகம் இறந்து போம், when the force or degree in a particular pulse-wave is found to exhibit 'altogether a different degree or force by the radial artery, the soul will leave the body and instantaneous death is the immediate result. See யாத்திரை விழி வட்டமிட்டு உயிர் பிரியும் நாடி.

NOTE.—According to Siddhar's system of medicine, a unit-force taken for practical purposes in the beating of pulse, so as to distinguish the Vatha from the other two humours, represent the pulse-forces as 1, ½ and ¼. If these proportions are found to vary hopelessly, then death is the result.

சிலேட்டுமத்துக் காதி, *கபத்தை யறுக்கும் மருந்து*, see *சிலேட்டுமத நிறமான்*; 2. *திப்பிலி*, long-pepper—Piper longum. For a list of drugs classified as expectorants, see 2 *கபஹரகாரி* on page 881 and *கோழை யறுப்பான்* on page 887 of vol I.

சிலேட்டுமத்தைப் பக்குவம் பண்ணி, வெள ளறுகு, that which developes phlegm i.e. white doob grass—Enicostema littorale.

சிலேட்டும நடை, *தொண்டையில் கபங் கட்டி யிழுததல்*, ratlling in the throat due to the deposit of phlegm.

சிலேட்டும நாசம், இருள் *மருது*, black murdah, see *கரு மருது*.

சிலேட்டும நாசனி, *மரா மரம்*, common saul 2. *மருவகம்*, southern wood.

சிலேட்டும நாசி, திப்பிலி, long-pepper—Piper longum.

சிலேட்டும நாசினி, see ஐவிரலி, 2. see *சிலேட்டுமதறுக்காதி*; 3. *கார்போகவரிசி*, seeds of hazel-leaved psoralea—Psoralea corilifolia. It is so called from its curing phlegm.

சிலேட்டும நாடி, *கபதகைக் குறிக்கும் தாழ்ந்த அல்லது மெல்லிய நாடி, இது மணிக் கட்டு மேலே ஓர் அங்குலததில ஆரையெலும்பின் பேரில் ஓடும் நாடி. இதை மூனறு விரலால அழுதத மோதிர விரலுக் கடியில அடிக்கும நாடி. இதற்கு மாததிரை கால்*, a slow beat pulse indicating phlegmatic humour of the system. The movement of this pulse is shown by the radial artery situated an inch above the left wrist. It is felt at the ring-finger generally by pressing with the three fingers. The force or degree of it is considered to be a quarter (¼).

சிலேட்டும நாடி விரணம், *நரம்பி லுண்டாகும் கட்டியானது, தடித்து கெட்டி பட்டு, மினு மினுத்து பழுத் துடைந்தால் சதா சீழ் ஒழு கிக் கொண்டும், இராக் காலததில் மித மிஞ்சி ஒழுகும் விரண நோய்*, an ulcer or an abscess found in the nervous region and marked by a shining surface and hardened swelling with a constant discharge of pus and its profuse flow in the night.

சிலேட்டும நோய், see *சிலேட்டும வியாதி*.

சிலேட்டும பலம், *புளி வஞ்சி*, an unknown drug ?

சிலேட்டும பாசம், *கரு மருது*, see *சிலேட்டும நாசம்*.

சிலேட்டும பாண்டு, *சிலேட்டு மாதிக்கததினுல் கண், உடம்பு, முகம், நகம், மல மூததிரம் முதலியவைகள் வெளுப்பாகவும், நரம் பெழு ச்சியும் காணும ஓர் வகைப் பாண்டு நோய்*, a form of dropsy due to the aggravated condition of phlegm in the system, It is marked by paleness of the eyes, the body, face, nail, feces, urine etc. along with prominent and raised appearance of the veins.

சிலேட்டும பாத வன்மீக ரோகம், *யானைக் காலின மீதுணடாகும் புறறு*, tumours or tubercles of various sizes found grown like ant-hill in the elephantiasis of the leg.

சிலேட்டும பித்த சமனி, கருவேல், black babool—Acacia arabica.

சிலேட்டும பித்த சலமிழிவு, *ஓர் மூததிரநோய். இது மூன்று வகைப்படும். இதில் மூததிரம் வெண்மையாயும, சண்பகப் பூ வாசமாயும், சில சமயம் நாற்றமாயும், ருசி நாகப்பழ த்தைப் போல் துவர்ப்பாயு மிருக்கும*, a form of diabetes due to the concerted action of phlegm and bile in the system. It consists of three kinds in which it is characterised by the passing of large quantities of pale and light coloured urine having an odour of champaka flower, and sometimes with a fetid smell and an astringent taste like that of a jamoon fruit.

NOTE.—In this form of the disease, large quantities of urine is passed but without sugar. It is very prevalent among rich classes of people who lead indolent lives and consume rich meals. It also appears to be hereditory in some families.

சிலேட்டும பித்த சுரம், *கபமும், பித்தமும், கோளா றடைவதா லேற்படும் காய்ச்சல்*, fever arising from the deranged phlegm and bile in the system.

சிலேட்டும பித்த சூலை, சிலேட்டும சூலையிற் காணும் குணங்களோடு, தேகக் காங்கை, மயக்கம், பலவீனம் முதலிய குறிகளும் உண்டாகும் பித்த சூலை, colic attended with all the characteristic symptoms described under சிலேட்டும சூலை together with bodily heat, giddiness, weakness etc. due to the conjunction of bile.

சிலேட்டும பித்த தொந்தம், வாத நாடியினின்று பிரியும் சிலேட்டும நாடியும், பித்த நாடியும் ஒன்று சேருவது. இதனால் உண்பது கசப்பாகும். நாக்கே கசக்கும் இனிக்கும். பேச்சு தடுமாறும், கபங் கட்டி குரல் வேறுபடும், கண்ணிற் பீளை காணும், bile (pittam) and phlegm as transformations of the same energy—Vatha, which often combine each other; and the symptom exhibited are—the food taken will be found bitter in taste or sometime bitter and sweet, and there will be also faltering in speech, and the altered voice from accumulation of phlegm and mucopurulent discharge from the eyes.

சிலேட்டும பித்தாங் கதரசம், உடம்பின் பித்தாதிக்கத்திற்கும், கபாதிக்கத்திற்கும் கொடுக்கும் ஆயுள் வேத மருந்து, an Ayurvedic preparation prescribed for excess of bile and phlegm in the system.

சிலேட்டும பிரமேகம், கோசத்தில் கடுத்து நொந்து, வெண்ணிறமான மூத்திரம் இறங்கும். இது பெண் போகத்தினாற் பிறக்கும். இதில் மூத்திரம பல வர்ணங்களாக இருக்கும். சில சமயம், கரும்பின் சாறு அல்லது மாவு கரைத்தது போலும், பன்னீர், தயிர், பால், சர்க்கரைப் பாகு, தேன் இவைகளைப் போலும் கடுத்து இறங்கும். அன்றியும், நெய்ப்பசை பிசுக்கும். இதைக் காய்ச்சி, சீலையிலாட்டி வத்தியாக எரிக்கலாம். இது சிலேட்டு மாதிக்கத்தினால் பிறக்கும். அசாத்தியமெனக் கொள்ளப் படும், a disease of the urinary organs marked by pain in the organ of penis with irritation and discharge of white-coloured urine. Sometimes, the urine may appear in varied colours resembling sugar, cane juice, solution of flour, rose-water, curd, milk syrup, honey etc. It may be boiled and soaked in thread and made to burn like a wick. This type is caused by an exuberance of the deranged phlegm and is said to be incurable.

சிலேட்டும பீலிகம், கப சம்பந்தமான மண்ணீரல் நோய், a disease of the spleen with the characteristics of phlegmatic humour in the system.

சிலேட்டும பீனசம், நாசி மாறி மாறி யடைத்து முதது போல் நீர் வடிந்து, நாற்ற முண்டாகி, சிராய்ப் போல் சளி, நாசியில் குத்தல், வலி, கண்களில் பீளை சாறுதல், கண் வீக்கம், தலை பாரம், முகம் ஊதல், தொண்டை, உதடு, உண்ணாக்கு இவவிடங்களில் கரகரப்பு முதலிய குணங்களைக் காட்டும் பீனச நோய். இது கபாதிக்கத்தினா லுண்டாகும், catarrh of the nose originating from the derangement of phlegm in the system. It is characterised by alternative obstruction of both the nostrils, constant running of the nose attended with hardened mucous discharge in flakes, and pinprick pain in the nose. It is also marked by swelling of the eyes, heaviness of the head, flabbiness of the face, tickling sensation in the region of the throat, lips, and the palate.

சிலேட்டும மசூரிகை, இதுவே அசகரோகம். இதனால் உடம்பு முழுதும் கருணைக் கிழங்கு முளைகள் போல் தடித்த கொப்புளங்களை யுண்டாக்கும் ஓர் வகை அம்மை நோய், a kind of small-pox in which the eruptims assume the shape of the yam root sprout at the beginning and then becomes pustules.

சிலேட்டும மத ரோகம், சிலேட்டுமாதிக்கத்தினா லுண்டாகும் ஓர் வகை மத நோய். இம் மதங் கொள்ளுதலால், கண் மூடி தியானம் செய்பவர் போலிருததல், ஒன்றற் கொன்று சம்பந்த மில்லாமல் விரைவாய் வார்த்தையாடல், உடம்பு வெளுத்தல, காம வெறி, விந்து ஒழுக்கு முதலிய குணங்க ளேற்படும், a kind of infatuation or sexual passion found in a person (male or female) to be too extravagant and obstinate to be controlled, due to the phlegmatic tendency of the system. Persons affected with such amative passion will be found with eyes closed contemplating on something, talking incoherent words; and in them found also other symptoms such as anemia amativeness, seminal discharge etc.

NOTE —Unmarried women may find it more difficult than men to control their passions especially when they are found lascivious and in the usual course succumb to them. Unless effectively controlled, the constitution may break down by the baleful and fearful effects. In Siddhars sexual science, there are many ways for resisting it and for curing the will by medicines, baths, diets, magic etc.

சிலேட்டும மலக்கிருமி, கபாதிக்கத்தினால் இரைப்பையில உற்பத்தியாகி, உள்ளில் சஞ்சரிக்கும் ஏழு வகைக் கிருமிகள். இவைகள காலகளில்லாமல் வட்டமாக சுற்றிய நூலைப் போலும், சிலது பார்வைக்கு தோணாதும், மற்றவை பல் மாதிரியாகவும் இருக்கும். இதனால் அசீரணம், வாந்தி, சுரம் உண்டாகும். the seven varieties of worms of phlegmatic origin arising in the stomach and infesting the human intestines; and they are of varied types--some without legs, round, or coiled like thread, microscopic etc., while the rest are of varied kinds. The existence of the said varieties in the intestines may give rise to indigestion, vomiting and fever of several kinds. The above mentioned varieties are viz.—

1. பெரும் பூநாகக்கிருமி, a large genus of earth-worm.
2. நீர்ப் பாம்புக் கிருமி, a species of the worm resembling a water-snake.
3. நெல் முனைக் கிருமி, one as sharp pointed as the tip of paddy grain. —Oxyuris incognito.
4. சன்ன நீளக் கிருமி, one of the long and thin species of intestinal parasites,—Oxyuris.
5. அணுக் கிருமி, atomic maggots.
6. வெண் கிருமி, a species of white worm of the intestine.
7. செங் கிருமி, a species of the nematoid worm of the Ascarides family.

சிலேட்டும மலம், கபத்தை யுண்டாக்கும் வஸ்துக்கள், substances generating phlegm.

சிலேட்டும மாந்தம், உடம்பில கப மேலீட்டினால ஏற்பட்டு, உண்ட உணவு செரியாமை, பசி யின்மை, அருவருப்பு, அன்னத்து வேஷம் முதலிய குணங்களைக் காட்டும் ஓர் வகை மாந்த நோய், indigestion due to excess of phlegmatic humour in the system. It is marked by loss of appetite, aversion to food, nausea etc.

சிலேட்டும மார்பு நோய், மார்பை கெட்டியாயிருக்கிப் பிடித்தது போலவும், பாருங் கல்லை வைத்தது போலும் கண்டு, அதுடன இருமல், மந்தாக்கினி, கோழைப் பெருக்கு, சோம்பல, அரோசகம், சுரம் முதலிய தீக்குணங்கள் ஏறபடும், pain in the chest arising from the phlegmatic humour in the system. It is characterised by a feeling of lightness of the body and pressure in the chest; and also marked by the following symptoms viz:—cough, loss of appetite, excessive secretion of phlegm, indolence nausea, fever etc.

சிலேட்டும முக பாகம், அடிக்கடி வாந்தியையும, பேதியையும் உணடாக்கு மோர் வகை வாயு நோய், diarrhoea arising from flatulency due to the windy nature of the constitution. It is marked by abnormal frequeney of vomiting and purging.

சிலேட்டும முளை மூலம், உடம்பில் கபம் கோளாறடைந்து, அதனால் முளையோடு உண்டாகும் வெளி மூல நோய். இம் முளை கடினமாயும், வட்டமாயும், பளபளப்பாயும, பார்வைக்கு பசுவின் முலைக் காம்பைப போலிருக்கும. இதினின்று எவ் விதமான ஒழுக்கும் ஏறபடாது. இதனால அசீரணம், சுரம், நடுக்கம், தலை பாரம், இருமல, வாந்தி, தொப்புள் வலி முதலிய குணங்கள் உண்டாகும், external piles due to the deranged phlegm in the body. This enlarged vein or vascular tumour is usually hard, round and glossy and it resembles the teat of a cow. There is no exudation or any sort of secretion from it. It is followed by symptoms such as—indigestion, fever with shivering and heaviness of head, cough, fatigue, vomiting, pain at the epigastrium etc.,

NOTE ;— There will be pain in the pubic region, sphincter and the rectum. Asthma, coughing and nausea are also sometimes present Besides, amongst other symptoms are — Salivary secretion, fetid discharge from the rectum, high-coloured urine disgust for food, weak digestion, pale-colour, loss of virile power etc ,

சிலேட்டும மூர்ச்சை, சிலேட்டுமத்தினா லுண்டாகும் ஒரு மூர்ச்சை நோய். இதனால மார்பு அதிர்ச்சி, வாய நீரொழுக்கு, உடம்பு கனதி முதலிய குணங்கள் கணடு, நெடு நேரம் கழித்துத தெளியும் fainting occurring in the excited condition of phlegmatic

humour ; and the symptoms usually accompanied are—shock affecting the chest, insalivation, heaviness of the body etc. The person may, in such cases, regain consciousness after a long interval —Syncope.

NOTE.—This condition may also be caused from numerous other causes, but chiefly from diseases of the heart. The body in such cases, should at once be placed in a recumbent posture, cold water dashed on the face and the patient removed to an airy place. The feeling of langour subsequently will be relieved by rest.

சிலேட்டும மூலக் கிராணி, கபக் கோளாறினால் இரத்தமாயும், வெண்மலமாயும் கழிந்து காற்று பரியும் ஓர் மூலக் கிராணி, dysenteric diarrhoea premonitory to piles or hemorrhoids due to the deranged phlegmatic humour. It is marked by bleeding at stools, flatulency etc., see சிலேட்டும மூலம்.

சிலேட்டும மூலம், இதுவே கபத்தினால் உடம்புக்கு ஏற்பட்ட உள் மூல நோய். இது உடம்பிற்கு வேலை கொடுக்காமலும், அல்லது தேகப் பயிற்சி யில்லாமல் இருக்கும் போது கொழுத்த வுணவை அதிகமாக உண்பதாலும், உடம்புக்கு சிரம மில்லாமல காலம் போக்குவதாலும், பகல் நித்திரை, எப்பொழுதும் உட்கார்ந்த படியே இருத்தல், குளிர்ச்சியான ஊரில் வசிப்பதாலும், குளிர்ந்த காற்றில் இருப்பதாலும் உண்டாகும். இதன் உள் மூல முளை உள்ளாக ஆழ்ந்தும், வெண்மையாகவும், கனதியாகவும், அமுக்கும் போது கடினமாகவும், சதா நமைச்சலோடு கூடியதாகவு மிருக்கும். அது வடிவத்தில் பலாக்காய் விதையைப் போல அல்லது பசுவின மடியின் காம்பு போல யிருக்கும், kapha piles which is caused by rich and heavy meal with absence of exertion or exercise, easy going life, day-sleep, sedentary habits in life, living in cold climate, and exposing to cool breeze. The fleshy excrescence in the rectum is deep-rooted, white and thick, hard and yielding to pressure, with constant itching sensation. In shape, it is like a seed of the jack fruit or the teat of a cow.

சிலேட்டுமம், ஐயம் அல்லது கபம். இது அதி சீதள ரூபமாகக் கண்ட முதல் சிரசு வரை வியாபித்து, உடம்பை காப்பாற்றிச் சுபாவ ரூபமாய் நெஞ்சில் தங்கி நிற்கும், phlegm (humour) It is combined with cold and moisture extending from the neck to the head and contributing largely towards the preservation of health by taking its seat in the chest (lungs); 2. விந்துவைப் பற்றி நிற்பது, that which contributes to the formation of semen in the body; 3. சந்திர சொரூபம், the spiritual form of moon ; 4. சீதள மதிகரித்து என்னேரமும் உடம்பில் உஷ்ணத்தை யுண்டாக்கி நீரைப் பெருக்குந் தன்மையது, that which is promoting moisture in the system by developing heat and then cooling it; that which has the nature of causing cold owing to excess of heat developed in the body. 4. கபக் கூறு, phlegmatic humour ; 5. கோழை, expectoration ; sputum, 6. விழிச் சிலேட்டுமம், viscid substance of the eye. See under சித்த வைத்தியம்.

சிலேட்டுமம் போக்கி, கபம் போக்கி. அதாவது கபத்தை வெளிப்படுத்தும் மருந்து, a medicine which expels phlegm from the chest or lungs — Expectorant ; 2. செவ்வியம், black pepper root.

சிலேட்டுமம் போக்குந் திறமான், see சிலேட்டும திறமான்.

சிலேட்டும யோனி, வேதனை யில்லாமலே அல்குலினும, கருப்பையிலிருந்தும் வெளுத்த பிசுபிசுத்த இரத்தம் ஒழுகப் பெற்ற நோய். இதற்கு சாராயத்தை பஞ்சில் நனைத்து யோனியில் போட குணப்படும், a whitish painless, viscid discharge from the vagina ane uterine cavity. It is a symptomatic congestion of these parts—Leucorrhoea. It is also called whites. Cotton soaked in the arrack is inserted into the parts as a cure.

சிலேட்டும ரோக பேதம், ஆயுள் வேதப்படி, சிலேட்டும நோய்கள் வகை, அவையாவன, according to Ayur veda, the different forms of phlegmatic diseases are viz :—

1. வாத சிலேட்டும ரோகம், one arising from Vatha with bodily pain and especially limbs, and causing trembling, chest pain and hiccough.
2. பித்த சிலேட்டுமம், one due to bilious causes with giddiness, prespiration, thirst and hard-breathing.
3. இரத்த சிலேட்டுமம், one causing blood-vomiting almost daily, insensibility, giddiness, swooning, swelling of the joints, and parched tongue.

4. க்ஷய சிலேட்டுமம், one giving rise to organic atrophy, fever, phlegm, voice affection, noise in the head and the ears, unconsciousness, sleeplessnees and high-coloured urine.
5. மூர்ச்சை சிலேட்டுமம், one with symptoms of unconsciousness, diffcult breathing, fatigue, trembling, pain in the joints etc.
6. சட்க சிலேட்டுமம், one causing emaciation, cough, hard breathing, weakness, chest pain, nausea, atrophy of the neck, slender voice.
7. சுர சிலேட்டுமம், one developing fever, thirst, prespiration, weakness, of limbs, bodily pain etc.
8. மூளை சிலேட்டுமம, one with symptoms of raling about the throat and the chest, abnormal discharge of phlegm, fever and parched tongue with bitter taste.
9. துக்க சிலேட்டுமம், the one through excessive or constant grief and anxiety.
10. தொனி சிலேட்டுமம், the one affecting the throat (larynx) and the voice.
11. கோஷ சிலேட்டுமம்.
12. சுவேத சிலேட்டுமம்.
13. மகா சிலேட்டுமம்.
14. பேன சிலேட்டுமம.
15. லாலா சிலேட்டுமம.
16. வமன சிலேட்டுமம்.
17. க்ஷீண சிலேட்டுமம.
18. சோஷ சிலேட்டுமம,
19. உதகார சிலேட்டுமம்.
20. இக்கர சிலேட்டுமம்

சிலேட்டும ரோக வகை 21 தமிழ் சித்த நூற்படி, as per Siddhars science, the 21 kinds are :—

1. வாத சிலேட்டுமம்.
2. பித்த சிலேட்டுமம்.
3. இரத்த சிலேட்டுமம்.
4. சய சிலேட்டுமம்.
5. சுர சிலேட்டுமம்.
6. காச சிலேட்டுமம்.
7. சுவாச சிலேட்டுமம்.
8. பீனச சிலேட்டுமம்.
9. மந்த சிலேட்டுமம்.
10. தொந்த சிலேட்டுமம்.
11. சன்னிபாத சிலேட்டுமம்.
12. அதிசார சிலேட்டுமம்.
13. சல சிலேட்டுமம்.
14. அக்கினி சிலேட்டுமம்.
15. முசல் சிலேட்டுமம்.
16. வெறி சிலேட்டுமம்.
17. விகார சிலேட்டுமம்.
18. விரண சிலேட்டுமம்.
19. துற்கந்த சிலேட்டுமம்.
20. சிதறிய சிலேட்டுமம்.
21. பூத சிலேட்டுமம்.

NOTE. 1—Nos. 9—20 of No. I are not defined as also Nos 1—21 of No II for want of space It is thought unnecessary to repeat them here, as they are all explained under its proper head, which see.

NOTE 2— Sleshma ordinarily means Kapha or phlegm. According to Siddha literature, it chiefly implies the functions of Thermotaxis or heat-regulation, but secondarily, the formation of the various fluids essential for the preservation of the body i.e, mucous, synovia etc., So, the derangement of the essential form underlying Kapha gives rise at once to increased or morbid secretions and excretions.

சிலேட்டும ரோகம், see சிலேட்டும வியாதி.

சிலேட்டும ரோகாரி, see சிலேட்டுமம் போக்கி.

சிலேட்டும லிங்க நாசம், விழிகளின் மேல் பல்லி முட்டையைப் போல் வெண் சதையைப் பிறப்பித்து, எப்போதும் நிழலில் திரிவதற்கே விருப்பத்தை யுண்டாக்கும், a disease of the lens in which the pupil looks white, and the circular patch over it, like the lizard egg moves to and fro thereby inducing the patient to remain always in the shade.

சிலேட்டும வதிகாரி, பழமுண்ணிப் பாலை, see சிலேட்டும அதிகாரி.

சிலேட்டும வபிசியாந்தம், விழி முழுமையும் தடிப புண்டாகி தின வெடுத்து வீங்கி கண்ணில் பீளை படியும் ஓர் கண்ணோய், an eye disease affecting the whole eye, attended with heaviness, itching sensation, swelling and discharge of slimy mucous from the affected part—Ophthalmitis.

சிலேட்டும வரி, இருவேலி, see சிலேட்டும அரி.

சிலேட்டும வர்த்தனி, இலவு மரம், silk-cotton tree—Bombax malabarica.

சிலேட்டும வலி, கபத்தின் கோளாறினால் ஏற்படும் உடம்பு வலி, bodily pain due to phlegmatic condition of the body.

சிலேட்டும வலை, மீத்தோலுக்கும் நிசத் தோலுக்கும் நடுவில் வர்ண அணுக்களை அடக்கிக் கொண்டிருக்கும் ஓர் பாகம், the layer between the scarf skin and the true skin known as the stratum mucosum, composed of rounded or polygonal pigmented cells—Rete-mucosum. This is the inner most layer of the epidermis.

சிலேட்டும வாதக் கிராணி, உடம்பில் கபக் கோளாறினு லேற்படும் கழிச்சல். chronic diarrhoea as a result of the deranged phlegm in the system.

சிலேட்டும வாத சலமிழிவு, இதில் 5 வகை யுண்டு மூத்திரம் அதிகமாயும், மிக நாறற-மாயும், ருசி புளிப்பாயு மிருக்கும். இது அசாத்திய நோய், a form of diabetes consisting 5 kinds, in which the urine discharged is followed with a fetid smell and sour taste; and it is said to be incurable. The disease is said to be due to the concerted action of the humours—Vatha and Kapha of the system, c. f. சிலேட்டும சலமிழிவு.

சிலேட்டும வாத தீரன், சிலேட்டும வாதத்தை தீர்க்கும் சதகுப்பை, drug capable of curing phlegmatic rhumatism as dill-seed—Anethum sowa.

சிலேட்டும வாதத் தொந்தம், சிலேட்டும நாடி யில் வாத நாடி சேர்ந் திருக்கப் பெற்ற சம்பந்தம். இதனால் நரம்பெல்லாம் வலிதது, பிடரி வலி, கண் சொருகல், வாய் குழறல உண்டாகும், the act of relative combination of the phlegmatic pulse with the vatha (wind) pulse. By such combination, may arise pain in the nape of the neck, rolling of the eye-ball, and faltering speech

சிலேட்டும வாந்தி, கபத்தோடு கூடிய வாந்தி, இதனல் வழுவழுப்பு, தடிப்பு, கோழை யாகவும், நூலை போலவும் கபம் வெளிப படல், சிறிது வீக்கம், சோம்பல் வாய் நீர், அரோசிகம், தூக்க மின்மை, தேகபாரிபபு வாயினிப்பு, மார் அடிததல் முதலிய குணங்க ளுண்டாகும், excited phlegm in the body and the symptoms are—vomiting attended with viscous, thick phlegm in the form of a string, little swelling, drowsiness, sweet taste in the mouth, secretions from the mouth (கோழை), disgust for food, sleeplessness, heaviness of the body etc. The vomitted matter will be slimy, thick with phlegmonous secretions, appearing oily and white.

சிலேட்டும விசர்ப்பி, உடம்பு முழுதும் சிவந்து மினு மினுப்பான வீக்கம் கண்டு, கபாதிக் கம அல்லது கபக் கோளாறினல் உண்டா கும் ஓர் வகை கொப்புளம். இதனால், தினவு, சாம் எரிச்சல் முதலியவை ஏற்படும், a form of eruption on the surface of the body due to the excited condition of phlegm or the deranged phlegmatic humour. It is marked by inflammation or local redness of the skin with a glossy surface. The eruptions so risen develop into blisters being attended with itching and burning sensation—Erysipelas.

NOTE.—In Allopathy, it is known as St. Anthony's fire; children of phlegmatic tendency are more liable to this disease than adults It generally runs its course in from 10 days to a fortnight after which the skin wrinkles and peels off. See also அக்கினி விசர்ப்பி.

சிலேட்டும விஷ பாகன், வெண் கடம்பு, common cadamba—Anthrocephalus cadamba.

சிலேட்டும விதக்தம், பார்வைக்கு வஸ்துக்கள் வெண்ணிறமாகத தோற்றுதல், பகல் தவிர இரவில் பார்க்க முடியாமை ஆகிய விக் குணங்களைக் காட்டுமோர் கண்ணோய், an eye disease in which the objects around appear white when looked at, and the patient cannot see in the night, but only in the day; night-blindness—Nyctalopia.

சிலேட்டும வித்திரதிக் கட்டி, கபக் கோளாறி னல தினவு, வலியோடு கூடிய ஓர் வகை வித்திரதிக் கட்டி. இது மெதுவாகப பழுத லடையும். இதனல வலி அருசி, கொட் டாவி, உடம்பு பாரிபபு முதலிய குணங்கள் ஏற்படும், a deep-seated abscess internal or external due to the deranged condition of phlegmatic humour with itching sensation, followed by excruciating pain. The symptoms are-tastelessness, yawning, swelling etc.

சிலேட்டும வியாதி, கபதினல் ஏற்பட்ட நோய். மூலததில் அக்கினி மிகுதியாகி கபா லததைப பற்றி, அதனல் இரததம் வற்றி, தாது கெட்டு, நெஞ்சில கபம் கட்டி, இரு மலையும், இளைப்பையும் உண்டாக்கும், phlegmatic diseases in common due to excess

of heat in the region of the sacral plexus, and its distribution over or comunication with the cerebral system. It is marked by diminution of blood, vitiation of semen, collection of phlegm in the chest, cough, fatigue etc; 2 பொதுவாக காச நோய், a general term for asthma.

சிலேட்டும விரணம், அடங்காத தினவையும் ஓரங்களில் தடித்தும், பரவியும் காணும் ஓர் விரணம். அன்றியும், சனதியும ஆழமும் வாய்ந்து, பார்ப்பதற்கு சாம்பல் நிறமும், கடினத தன்மையும், வலியோடு கூடியதுமாயிருக்கும். இதன் சீழ வெண்மையாயும் குளிர்ச்சியாயு மிருக்கும், an ulcer or wound which appears to be raised and extended around its margin being followed by an irresistable itching sensation. Moreover, it is thick and compact in its depth, grey in colour and slighly painful. The slimy secretion will be found cold and white.

சிலேட்டும வீடு, குறிஞ்சி நிலம் என்ற மலைப் பூமி. சாதாரணமாக மலைப பிரதேசங்களில் வசிப்பவர்களுக்கு சிலேட்டும நோய்கள் வருவது சகஜம். ஆகவே, சிலேட்டுமததிறகு உறைவிடம் என்று பெய ராயிற்று, mountainous or hilly regions,—the principal seat of phlegmatic tendency. It is so called because the climatic conditions of this region brings on phlegmatic diseases to the inhabitants of those places.

சிலேட்டும வெண் குட்டம், தும்பை மலரைப் போல் வெண்மையாகவும், கொஞ்சம் தடித்து இங்குமங்கும பரவியும், உடம்பில் வெடிப்பும் வீக்கமும், நமைச்சலும் உண்டாகும். இது மீத தோலுக்கு அடியி லுள்ள வர்ண அணுக்கள் குறைவினால் உண்டாகும். இரதத மாமிச மேதோதாதுக்களைப பறறும் போது கண்ணில் பல நிறமுண்டாகும், a disease of the skin due to the lack of normal pigmented cells under the epidermis. It is marked by abnormal white patches (as white as the leucas flower) raised and sometimes swelled. When it extends to the marrow of the bones, it may give rise to discolouration of the eyes—Leucoderma.

NOTE.—It may be either congenital or acquired; the former is known as leucoderma, and the latter as vitiligo.

சிலேட்டும வெப்பு, சிலேட்டு மாதிக்கத்தினால் உடம்பிற் காணும் சூடு, excess of heat in the system due to the derangement of phlegm (humour).

சிலேட்டும வெழுச்சி, கபாதிக்கத்தினால் தித்திப்பு நாவிலேறும், the aggravated condition of the phlegmatic humour giving rise to sweet taste.

சிலேட்டும வெள்ளை, ஓர் வெள்ளை நோய், இந்நோய்க்கு வெண்காரத்தை பொரித்து பின்பு பொடித்து, ஏழு பங்காக்கி ஏழு பொழு துண்ண நோய் நீங்கும், leucorrhoea or whites. The recipe prescribed for this is—roasted alum is powdered and the quantity is divided into 7 parts to be taken internally in doses. (of course taken in water), see சிலேட்டும சிர்க்கா ரோகம்.

சிலேட்டும வெள்ளை ரோகம், பெண்களுக்கு இரததம் பிண நாற்றத்துடன் வெண்மையாகவும், சீழைப் போலும் அல்குலின் வழியாயும், கருப்பை வழியாயும வெளியாகும் ஓர் நோய். இது சிலேட்டுமக் கூறினால் வெள்ளை ஒழுக்குடன் மாதவிடாயும் சேர்ந்து காணும, a whitish, viscid, fetid discharge from the female vagina and the uterus along with the menses due to the phlegmatic humour.

NOTE.—It arises from the congestion of the vagina and the uterine cavity, sometimes assuming a glairy appearance. It is common in women among richer classes, leading a luxurious life without physical exercise, See சிலேட்டும சிரக்கா ரோகம.

சிலேட்டுமா சுமரி ரோகம், சிலேட்டும அசுமரி நோய். நீரடைப்பினால் அடிவயிறு கனத்து நோவுண்டாகி, சிலேட்டு மாதிக்கத்தினால சிவப்பு அல்லது வெண்மையாக மூத்திரம் கஷ்டத்துடன் இறங்குதல், stricture of urine attended with the discharge of white or red-coloured urine with much difficulty due to obstruction in the urethral passage.

சிலேட்டு மாதிசாரம், see சிலேஷ் மாதிசாரம்.

சிலேட்டு மாரிஷம், கபாதிக்கத்தினால் ஆசன வாயிற் காணும் முளை, an inflamed tumour or hemorrhoids at the verge of the anus.

சிலேஷகம், மூட்டுகளை பொருந்த வைததல், that which keeps the joints intact.

சிலேஷ்ம இரத்த பித்தம், இருதயததி லிருந்து வர்ணம மாறி வெளிப்பட்டு வந்த இரததம், சிலேட்டுமத தோடு கலந்து வெண்மையாகவும், வழு வழுப்பாயும் இருக்கும் ஓர் வகை இரதத பிதத நோய், hemorrhage originating from the heart due to the aggravated condition of bile combined

with phlegm. The altered blood will be found whitish in colour and viscus.

சிலேஷ்மக் கபம், உடம்பின் தாதுக்களை ஒன்றுபடுத்தும் தன்மை வாய்ந்த சிலேட்டும வகை ஏழில் ஒன்று, one of the seven kinds of phlegm uniting the different elements of the body.

சிலேஷ்ம சுபாவம், உடம்பில் இரத்தங் குறைந்த காலங்களில், கபமே இரத்தமாக மாறி உடம்பை போஷிக்குந் தன்மையது. அன்றியும், கணு, முட்டி முதலியவைகளை நீட்டவும், முடக்கவும், வறட்சி யடையாமல் பசையாகவே இருக்கும்படி உபயோகமாகும் தன்மை வாய்ந்தது, the nature of phlegm which is capable of turning itself into blood, when the latter is found insufficient in supply. It lends nutrition to the body; and it not only facilitates the free movement of the limbs and joints, but also lubricates them, See சிலேட்டுமக் கூறு.

சிலேஷ்ம திமிரம், பார்வையைக் கெடுக்கும் ஓர் கண்ணோய், an eye disease affecting the vision—Amaurosis.

சிலேஷ்ம தேகக் கூறு, see சிலேட்டுமக் கூறு.

சிலேஷ்ம தேகம், see சிலேட்டும சரீரம்.

சிலேஷ்மத் தலைவலி, கபததின் கோளாறுகளினால் ஏற்படும் ஓர் வகைத் தலை வலி. இதில் உண்ணாக்கிலும், தொண்டையிலும், சளி அடைப்பது போல் தோன்றி, குளிரும், தலை பாரமும் கண்டு, தலை திருப்ப முடியாமல் முகமும், கண்ணும் வீங்கி அல்லது அதிர்த்துக் காணும், a kind of head ache in which the palate and the throat seem to be covered with a coat of sticky mucous, with a feeling of cold and heaviness of head, which cannot be turned about. The face and the eyes look swollen and sometimes flabby. It is due to the derangement of phlegm in the system.

சிலேஷ்ம நாசனி, கார்போக வரிசி, hazel-leaved psoralea—Psoralea corylifolia; 2. கக்கரி, cucumber; 3. மார மரம், flowering tree—Eugenia racemosa; 4. நறுந்தாளி, fragrant laldanah—Thomaea genus.

சிலேஷ்ம நாரபனி, மருவகம், a fragrant shrub—Ocymum caryophyllatum.

சிலேஷ்ம மலயோனி, மிக்க சீதளமும், வழுவழுப்பும், தமைச்சலு முள்ள பெண் குறி, female genital which is very cold and slimy with local itching sensation.

சிலேஷ்ம மாரணி, பவழ மருகு, a red species of grass of the Cynodon genus.

சிலேஷ்ம வர்த்தனி, இலவு, silk-cotton tree—Bombax malabaricum.

சிலேஷ்ம வலிகாரி, பழமுண்ணிப் பாலை, a species of பாலை, a tree — Mimusops hexandrus.

சிலேஷ்ம விஷ பாகன், வெண் கடம்பு, white Indian oak—Barringtoina racemosa; 2. கடம்பு, common cadamba tree— Anthocephalus cadamba.

சிலேஷ்ம விஞசினி, ஆதொண்டை, ceylon caper — Capparis horrida.

சிலேஷ்மாதி, நில வேம்பு, ground neem —Justicia paniculata.

சிலேஷ்மாதிக்கம், உடம்பில் அதிகமாய் கபம் காணல். இது அநேக ரோய்களுக்குக் காரணமாகும். இதனால் மந்தம், சோம்பல், உடம்பு கனதி, அதி மலம், செரியாமை, பாண்டு, மூக்கு, காதொழுக்கு, குருக்கள் எழும்பல், அதி தூக்கம், வாயினிப்பு, தலை பாரம், அதி கொழுப்பு முதலிய குணம் குறிகளை காட்டும், excess of phlegm in the body. It gives rise to various diseases. The aggravated kapha (phlegm) causes also dullness of appetite, drowsiness, heaviness of body, increased quantity of stool, indigestion, dropsy, discharge from ear and nose, eruptions in the body, excess of sleep, sweet taste of the mouth, heaviness of the head, excess of fat in the system etc, see சிலேட்டும சரீரம்.

சிலேஷ் மாதிசாரம், சிலேட்டு மாதிசாரத்தினால் உணவு செரியாமல், அதனாற் காணும் அதிசாரக் கழிச்சல், அதாவது வயிற்றுப் போக்கு. இதனால் மலம் இளகி எண்ணெய் கலந்த தாகவும், அதிக வெண்மையாயும், பொறுத்து பொறுதது வருவதாயும், கைகாலும், வயிறும் கனதது, அதிக நித்திரை, சோம்பல், அரோசிகம், உணவு வெறுப்பு முதலிய குணங்க ளுண்டாகும், diarrhoea caused through indigestion due to the derangement of phlegm (humour) in the system. By this, the feces is rendered loose, oily and white, followed by evacuations at intervals with phlegmatic secretions, heaviness of abdomen, excess of sleep or drowsiness, nausea, aversion to food etc.

சிலேஷ்மாதி மந்தம், சுபாதிக்கத்தினால் வெள் விழி யெல்லாம் சுருங்கி, குழி விழுந்து, கருவிழி உயர்ந்து, உப்பி, அதில் தூசு படிந்ததுபோல் காணப் பட்டு, அதினின்று நீரொழுகி மூக்கின் பக்கம் புடைத்து, தினவு காணும் ஓர் கண்ணோய், a disease of the eyes arising from phlegmatic humour, in which the white of the eye is contracted and depressed, while the iris appear prominently raised; and all objects seem to be full of dust.—Ophthalmia. It is marked by swelling with slight congestion, and discharges with itching sensation.

சிலேஷ் மோஷ்டம், உதட்டில் வலி வீக்கம் கண்டு, சிறு கொப்புளங்களை எழுப்பும் ஓர் உதட்டு நோய், a disease of the lips giving rise to small ulcers with pain and swelling.

சிலேஷ் மோதரம், ஓர் வகை மகோதரம். இதனால் வயிறு கனத்து, பருத்து கடினமா யிருக்கும். அன்றியும், வயிறு வீக்கம், இருமல், இரைப்பு, மூச்சுக் கஷ்டம், முதலிய குணங்களும் ஏற்படும், a kind of distended abdomen marked by heaviness and hard swelling, glossiness of the surface, cough, hard-breathing etc.

சிலேதகம், இருதயத் தானத்தி லிருக்கும் சிலேட்டுமத்தின் ஐந்து பகுதிகளில் ஒன்று, one of the five regions of the phlegmatic humour, found in the heart.

சிலேதம், செம் முருங்கை, red indian laburnum—Cassia marginata.

சிலேத்திமம், ஐவிரலி, bryony—Bryonia laciniosa.

சிலேத்துமம், see சிலேட்டுமம்.

சிலேயம், மலையில் விளையும் மூலிகை, தாதுப் பொருள் முதலியன, herbs, minerals etc obtained from a mountain; 2. கல்லைப் போற் கடினமா யுள்ளது, anything as hard as a stone.

சிலேற்பம், நறுவிலி மரம், sebesten tree—Oblique sebesta alias Cordia myxa.

சிலேற்பன நாசி, மறுதுடரிப் பூடு, an undentified plant probably of the Acacia genus capable of curing phlegmatic diseases; 2. திப்பிலி, long pepper—Piper longum.

சிலேற்பன நாடி, மூவகை நாடியி லொன்று, இதுவே ஐய நாடி. இதை மணிக் கட்டு சமீபம் மோதிர விரலைக் கொண்டு பார்ப்பது, one of the three pulse beats i, e, slow pulse felt at the wrist by the ring finger.

சிலேற்பணம், see சிலேட்டுமம்.

சிலேற்பனம் கட்டல், மரண வாயிலில் தொண் டையிற் காணும் சத்தம், death-rattle affecting the throat

சிலேர்பனை, see சிலேற்பனம்.

சிலேற்பின் பால், தேங்காய்ப் பால், milky juice of cocoanut; cocoanut milk.

சிலை, சிலை யுஞ்சை, sirissa tree—Albizzia odaratissima; 2 சிலை வாகை, stone sirrissa—Albizzia stipulata; 3. கல், stone 4. கருங்கல், granite; 5. பாறை, rock; 6. சூத பாஷாணம், a kind of native arsenic; 7. மலை, mountain; 8. மனோசிலை, bisulphide of arsenic — Arsenicum rubrum; 9. புண்புரை, a sore or wound or ulcer; 10. புண்ணின் உட்டுளை, sinus of an ulcer or abscess; 11 உரல், mortar; 12. சிலை வாகை, white cutch — Acacia suma; 13. சிலை, Polyalthia fragrans alias Polaylthia longifolia; 14. மருந்தரை க்கும் கலுவக் கல், a stone mortar for grinding medicine.

சிலைக் கல், செங்கற் கிட்டம், overburnt brick: 2. உருகிய கல், molten rock of the volcanic regions; 3. காகச் சிலை black load stone; 4. ஈரற் கல் gall stone; 5. சிலா நாகக் கல், zinc blend; zinc ore; 6. விக்கிரகக் கல், இது அனேக வகை கற்களில் கலந்து காணும், horn blend used for making images and ornaments for public buildings. It is an important constituent of many igneous rocks such as, synite, diorite etc.,

சிலைக் கல்லிச்சி, கற்பாங் குள்ள நிலங்களில் முளைக்கும் இச்சி, yellow-barked fig found grown in stony soil — Ficus tsiela.

சிலைக்கல்லிச்சி மரம், கல்லிச்சி மரம், stone stricta — Ficus scandens.

NOTE.— There is also another variety of the same name known as மலை யிச்சி, mountain tsiela or willow fig — Ficus retusa.

சிலைக் காரம், வெடி காரம், caustic potash; Perhaps, it is so called because the whole plant when incinerated, yields a considerable quantity of potash; 2, செந் நாயுருவி, a red variety of நாயுருவி, Indian burr—Achyranthes aspera.

சிலைக்கால், முடவாட்டுக் கால், இது உப ரசச் சரக்கி லொன்று, an unknown stone which is classified as one of the 120 kinds of natural substances in Tamil Siddha medicine.

சிலைக் கால் தூய்மை, சிதாங்க பாஷாணம், a kind of native arsenic.

சிலைக் காறி, அஞ்சன பாஷாணம், one of the 32 kinds of mineral poison.

சிலைக்குள் தீட்டு, கல் மதம், see சிலை யொழுக்கு.

சிலைக் கெந்தி, see சகஸ்திர வேதி; 2. கெந்தகம் சேர்ந்த கல், sulphur ore such as galena (pbs,), cinnabar (HGS), pyrites ($FE_2 S_3$), gypsum $CASO_4$, heavy spar ($BASO_4$) etc., These are the metallic ores containing sulphur in the form of sulphides.

NOTE — The two main types of native sulphur are — (1) The solfataric type found in lava of the volcanic regions; 2. the gypsum type found liberated from gypsum.

சிலைச் சத்து, சிலா சத்து, fossil exudation.

சிலை சுரோணிதம், கல் மதம், bitumen.

சிலைச் சூதம், நீலாஞ்சனக் கல், suphate of antimony.

சிலைச் செம்மண், கற்காவி, red ochre.

சிலைச் சென்னியிற் றிரண்டதாது, மலையினுச்சியி லிருந்து உற்பத்தியான தாது பாஷாணம், a mineral poison formed at the top of the mountain, see சிலாமத பாஷாணம்.

சிலைச் சோணிதம், see சிலைச் சுரோணிதம்.

சிலைத் தண்ணீர், இரணத்தி னின்று வடியும் நீர், a thin and colourless discharge issuing out from wounds etc.

சிலைத் தயிலம், பாறை வெண்ணெய், rock-oil; 2. உதகம், mineral water or liquid on the top of hills; 3. புரைகளின் வழியாக இரத்தம் முதலியவைகளை ஒழுகச் செய்யும் துட்ட விரணங்களுக் கிடும் மருந்துத் தைலம், a medicated oil or ointment used chiefly for putrified sores or ulcers with sinuses; 2 மண் தைலம், bitumen.

NOTE–Petroleum or fluid bitumen, Naptha, Kerosine oil which are finer varieties come under this class. Rock oils are liquids formed by the low decomposition of organic remains, animal or vegetable or both combined.

சிலைத் தாசி, see சானக் கிராமம்.

சிலைத் தாது, சிலாமத பாஷாணம், a kind of native arsenic.

சிலைத் தீட்டு, see சிலைச் சுரோணிதம்,

சிலைத் தூமம், see சிலைச் சுரோணிதம்.

சிலைத் தைலம் see சிலைத் தயிலம்; 2. மண் தயிலம், earth oil or crude oil. It is a semi-liquid exuding spontaneously from the rocks in volcanic regions; and it collects on the surface of certain lakes. It can be obtained in every bazaar. Tamil veidyans (doctors) use it as an external application in rheumatic complaints, as also in cases of epilepsy, hysteria and palsy. It is useful in all skin diseases, especially of a parasitic origin.

சிலை நஞ்சு, கல் மதம், bitumen.

சிலை நாகம், சூடாலைக் கல், ஓர் உபரசச் சரக்கு, a mineral stone—one of the 120 kinds of natural substances classified according to Tamil Siddha system of medicine; 2. ஓர் வகைப் பாஷாணம், a kind of arsenic.

சிலை நார், கல் நார், asbestos.

சிலை நிறக்கல், மாமிசச் சிலை, a black mineral stone supposed to be capable of dissolving meat or flesh and convert it into a liquid,

சிலைநீர்க் கல், see சிலை நிறக்கல்.

சிலைநீர் சொரிதல், புண் புரையி னின்று நீர் வடிதல், a thin watery acrid humour or discharge from sinus of sores, wounds, ulcers etc.—Ichor.

சிலைப்பலா, கற்பலா, stone jack—Hymenodictyon obovatum.

சிலைப் பாசி, பாறைகளின் மேற் காணும் புல்லுருவி இனத்தைச் சேர்ந்தது, rock-moss or lichen or order of cryptogenic plant—Lichen rotundatus.

சிலைப் புல், மலைப் புல்; mountain grass.

சிலை மண், கருப்பு சித்திர மூலம், black-flowered leadwort—Plumbago zeylanica.

சிலைமா, மாக் கல்லு, steatite or Spanish chalk; soap-stone.

சிலைமான் கல், ஓர் வகை இரத்தினம், இதற்கு சலைமான் கல் லெனவும் ஒரு பெயர். ஆயினும், இரத்தினத்திற்கும், இதற்கும் பேதம் உண்டு, இது பலவித நிறங்களும், ஒளியும், மங்கலும் கலந்ததாக வுள்ளது. இது சாதாரணமாய் மேகவர்ணக் கற்க ளுள்ள எரிமலைக் குடாவி னுள்

